# பிரதாபசந்திரவிலாசம்.

ஒரு ஜனசமூக நாடகம்.

(A SOCIAL DRAMA.)

ப. வ. இராமசாமிராஜு பி. ஏ.

பாரிஸ்டர்-அட்-லா.

எப். ஆர். எச். எஸ். (லண்டன்). எம். ஆர். ஏ. எஸ். (லண்டன்.)

இயற்றியது.



சென்னை:

Copy Right Register 1915. [ரிஜிஸ்தர் செய்தது

# அறிக்கை.

இந்நூலைப் பதிப்பிப்போர், இதன் உரிமையை உரியாரிடமிருந்து முறைப்படிப் பெற்றுள்ளனராதலால், இந்நூல் முழுவதையுமேனும், ஒருபாகத்தையேனும், இதனின் வேறு போலக் காட்டி மேலுக்குச் சிறிது மாற்றியேனும் வெளியிடுவோர் குற்றவாளிகளாக அரசாங்கத்தார் தண்டனைக்குட்படுத்தப்படுவார்கள்.

PRINTED AT THE AUDI SARASWATY NILAYA PRESS,
BY V. RAMASWAMY SASTRULU & SONS, MADRAS.

# நூலாசிரியர் வரலாறு.

நிறைவுற்ற செல்வமும், குறைவற்ற கல்வியும், நற்குடிப் பிறப்பும் வாய்ந்த இளைஞர்கள் பலர், ஒழுக்கம் சிறிது மில்லாத ஈனர்களது வஞ்சனைக் குள்ளாகி அறிவுமயங்கி நெறிதவறிப்போவது நாளும் நாம் கண்கூடாகக் காண்பவற்றுள் ஒன்றே. இதற்குப் பெரும்பாலும் காரணமாவது, பசுத் தோல் போர்த்த புலிபோல், மாயவார்த்தைகள் பேசி, நெருங்கிய நட்புரிமை யுடையார்போல் நடித்தொழுகும் கயவர்களது உண்மைக்கருத்தை அறிதற்கு ஏற்ற உலகானுபவம், அவ்விளைஞர்களுக் கில்லாமையே. ஆதலின், அக் குறையை நிவர்த்திக்கக் கருதி, ஈனர்கள் இயல்பை நன்கெடுத்துக்காட்டி, அவர்கள் பசப்புமொழி வலையிற் பட்டார்க்கு உறும் தீமைகளைத் தெளிவுற விளக்கி ஒரு நாடகமாயமைத்து, இந்நூல் 1877-ஆம் வருஷம் ஸ்ரீமான் இராமசாமிராஜு என்னும் வித்வ சிரோமணியால் இயற்றப்பெற்றது.

இவர் தென்னாற்காடு ஜில்லாவில் உள்ள திண்டிவனத்தில் 1852-ஆம் ஆண்டு பிறந்தவர். இவரது தந்தை அக்காலத்து அங்கு சால்ட் அஸிஸ்டென்டு சூப்ரண்ட் (Salt Assistant Superintendent) உத்தியோகம் வகித்திருந்த அரங்கசாமி ராஜு என்பவர்.

இராமசாமிராஜு இளம்பிராயத்திலேயே மிகவும் நுட்பஉணர்வும் ஆழ்ந்த அறிவும் உடையரா யிருந்தனர். இவருடைய உறவினரான வீராசாமிராஜு என்பாரொருவர், ராஜுவுக்கு இங்கிலீஷ்பாஷை தெரியாம லிருந்ததைப் பற்றி ஒருநாள் கோபித்துக் கண்டித்தார். அப்பொழுது பத்துவயது சிறுவ ராக இருந்த ராஜு அந்தக் கண்டனையை மனத்திற்கொண்டு மிகவும் வருந்தி அதேகாலத்தில் தமது குடும்பத்தாரைப் பார்க்க வந்திருந்த இராமச்சந்திர நாயுடு என்பவருடன் சென்னைக்குச் சென்றுவிட்டார்.

இராமச்சந்திர நாயுடு, புத்திரப் பேறின்மையால், இராமசாமி ராஜு வையே புத்திரனுகக்கருதி, தந்தையினும் பதின்மடங்காகப் பரிந்து பேணி ஆங்கில பாலபாடசாலை யொன்றி லமர்த்திக் கல்வி பயிற்றுவித்தார். இந்தப் பாடசாலை அக்காலத்தில் பிரபல போதகாசிரியராகவிருந்த திருவேங்கிடம் பிள்ளை என்பவர் மேற்பார்வையிலிருந்தது: இதில் உபாத்தியாயரா யிருந்த வரும். ராஜா-சர்-டி-மாதவராவ் என்னும் பெருந்தகையாருடன் ஒரு சாலை மாணவராய்க் கல்வியின்றவருமான மேலன்சிங் என்பவர் ஒருவர் ராஜு வின் நுண்ணறிவைக்கண்டு மிகவியந்து, பின்னால் அவர் அடையும் உன்னத பதவியையும் அழியாப்புகழையும் முன்னால் உணர்ந்து கூறியதுமன்றி தமது அந்தியகாலம் வரையில் அவர் கூட்டுறவை விடாதிருந்தார்.

ராஜு மூன்ருவது, நான்காவது வகுப்பிற் படிக்கும் பொழுதே, ஆங்கில பாஷையில் சம்பாஷிக்குந் திறமை அடையவேண்டுமென்ற ஒரு கருத்தோடு ஐரோப்பிய சிறுவர்களோடு நெருங்கிப்பழகிவந்தார். சிறிது காலத்துக்குப் பின் சென்னை 'அயர்விலாப் புகழின் பச்சையப்பஞர்' கலாசாலையிற் சேர்ந்து படித்து வருவாராயினர். இவர் தமது அதிதீவிரபக்குவத்தால் பதினென்காவது வயதிலேயே மெட்றிகுலேஷன் வகுப்பை அடைந்துவிட்டார். பத்தாவது வயதில் ஆங்கில அக்ஷராப்பியாசந் தொடங்கி பதினென்காவது வயதில் (அதாவது நான்கு வருஷகாலத்திற்குள்) மெட்றிகுலேஷன் வகுப்புக்குவேண்டிய ஆங்கிலபாஷா ஞானம் பெற்ற இதுவொன்றே இவரது அறிவின் ஆற்றலை நன்கு காட்டுகிற தன்ருே?

இங்ஙனம் ராஜு தமது அறிவாற்றலால் அதிவிரைவில் கலாசாலைக் கீழ்வகுப்புக்களை யெல்லாங் கடந்து பின்னர் 'பெயர்பெறும் ப்ரஸிடென்ஸி காலேஜ்தனில்' (Presidency College) சேர்ந்து பி. ஏ. பட்டமும் பெற்றனர். பிறகு சென்னை பச்சையப்பஞர் கலாசாலையிலேயே உதவிப் போதகாசிரியராகச் சிறிதுகாலம் இருந்தார். பின்னர், காஞ்சீபுரத்தில் உள்ள பச்சையப்பன் கலாசாலையில் தலைமைப் போதகாசிரியராயினர். அப்பொழுது செங்கற்பட்டுஜில்லா கலெக்டராயிருந்த ஸி. எஸ். க்ரோல், ஐ. ஸி. எஸ். (C. S. Crole, I. C. S.) என்பவர் அவருக்குப் பழக்கமாயினர். 'அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்' என்றபடி க்ரோல் துரை ராஜுவினுடைய அறிவாற்றலைக்கண்டு அவர்பால் மிகவும் பற்றுடையவராகி, அவரைத் தமது முயற்சியால் சென்னை கஸ்டம்ஸ் ஆபீஸில் (Customs Office) இறக்குமதி மானேஜர் (Import Manager) உத்தியோகத்தில் அமர்த்துவித்தார். சிறிது காலத்துக் கெல்லாம் ராஜு ஸீ கஸ்டம்ஸ் இன்ஸ்பெக்டர் (Inspector of Sea Customs) உத்தியோகத்திற்கு உயர்த்தப்பட்டார். அதனேடு அமைதியுருது,

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னெருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு"

என்ற ஆன்ருேர் திருவாக்கைக் கடைப்பிடித்து பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்க விரும்பி 1882-ஆம் வருஷம் லண்டன் மாநகருக்குச் சென்ருர். அங்குத் தங்கிய காலத்தில், ஆக்ஸ்பர்ட் யூனிவர்ஸிட்டியிலும் (University of Oxford) லண்டன்யூனிவர்சிட்டி காலேஜிலும் (University College, London) தமிழ், தெலுங்கு இவை இரண்டற்கும் போதகாசிரியராகவிருந்தது மன்றிப் பத்திரிகைகளுக்கு விஷயதானஞ்செய்து அதனல் பெறும் பொருளால் தம்மையும் தம் குடும்பத்தையும் போற்றிவந்தார். அக்காலத்தில்தான், ஆங்கில பாஷையில் 'அறுபது மந்திரிகள் கதை' (Tales of sixty Mandarins) என்னும் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். தாம் குறித்துச்சென்ற பாரிஸ்டர் பரீட்சையில் தேறிய பின் 1885-ஆம் வருஷம் இங்கிலாந்தை விட்டுப் புறப்பட்டுச் சென்னை வந்து சேர்ந்தார். அதே வருஷம் ஜூலைமாதத்தில் சென்னை உயர்நீதிசாலையில் (High Court) அவர் ஒரு பாரிஸ்டராக ஏற்றுக்கொள்ளப்

பெற்றனர். இதில் துவக்கத்தில் மாதம் சுமார் அறுநூறு ரூபாய் வருமானம் கிடைத்தது. நாளடைவில் முயற்சி விருத்தியாகி வருமானம் மிகுந்துகொண்டு வந்தது 1889-ஆம் வருஷத்தில் இவருடைய வருமானம் மாதம் மூவாயிர ரூபாய்க்கு அதிகமாயிற்று.

இவர் தெய்வபக்தியிற் சிறந்தவர். ஹரித்துவாரம், கங்காதீரம், ராமேஸ்வரம் முதலிய மகத்துவ ஸ்தலங்களையெல்லாம் சென்று தரிசித்தவர்.

1891 அல்லது 1892 ஆம் வருஷத்தில் கன்னியாகுமரிமுனைக்குச் செல்ல நேர்ந்த பொழுது. அங்கெழுந்தருளியுள்ள அம்பிகையை இரண்டு இனிய தமிழ்ச் செய்யுட்களால் ஸ்தோத்தரித்தார். இவருடைய கல்விவன்மை இவ்வளவென்று சொல்லுந்தரமல்ல. இவர் தமது தாய் மொழியாகிய தெலுங்கிலும், அதற்குத் தாய்மொழியாகிய தமிழிலும். தமிழ்மொழிக் கிணையாகி பல பாஷைகளுக்குப் பிறப்பிடமாகித் தனக்கென்று ஓர் அக்ஷரமின்றித் தனியரசு செலுத்தும் சமஸ்கிருத மொழியிலும், ராஜபாஷையாகிப் பரந்து விரிந்த ஆங்கில மொழியிலும் மிகுந்த புலமை வாய்ந்து ஒவ்வொருபாஷையிலும் பல அரியநூல்கள் இயற்றியுள்ளனர்.

சமஸ்கிருத பாஷையில் இவர் இயற்றியுள்ள ஸ்ரீமத் ராமநாத ராஜாங்கள மகோதியானம் சமஸ்கிருத வித்வ சிரோமணிகள் பலராலும் வியந்து பாராட்டப் பட்டுள்ளது.

ஆங்கிலபாஷையில் இவர் இயற்றிய நூல்கள், மேற்கூறிய ராஜாங்கள மகோதியானத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு, அர்ஜ்ஜுனன்சிங், லார்ட்லேக்லி, மெயிட் ஆப் தி மீர். இந்தியகதைகள், அறுபது யந்திரிகள்கதை முதலியவாம்.

தமிழ் மொழியில் இவர் இயற்றிய இப் பிரதாபசந்திரவிலாசம் இவரது உலகானுபவத்தையும் தமிழ்ப்புலமையையும் நன்கு விளக்குகின்றது.

இங்ஙனம் பலவகையிலும் சிறப்புற்ற இம் மேதகையார் 1897-ஆம் வருஷம் ஜூலைமாதம் 17வ- சனிக்கிழமை அன்றையதினம். உதக மண்டலத்தில்(Ootacamund) நீர்மேற்குமிழிபோல் நிலையற்ற இவ்வுலகவாழ்வை நீத்து, என்றுமழியாப் பேரின்பப் பெருவாழ்வளிக்கும் இறைவன் திருவடி நீழலெய்தினர்.



# நூலாசிரியர் முகவுரை.

---

நம்முடைய நாட்டில் அநேகர் இயற்கையாய் நல்லறிவைப் படைத்து, கல்விகற்றுத் தேர்ந்து, அவரவர் அதிர்ஷ்டத்திற்கும், முயற்சிக்கும் தக்கபடி மதிப்புள்ள ஸ்திதிக்கு வந்தும், அற்ப வயதிலேயே தங்காலத்தை முடித்து, மனைவிமக்களை வருத்தத்தில் மூழ்த்தி, பந்துமித்திரர்களுக்கெல்லாம் தீராத கிலேசத்தை உண்டாக்கிவிட்டுப் போகின்றனர். இந்த விபரீதத்திற்குப் பெரும்பாலும் காரணமேதோவென்று ஆராயப்புகின், இந்நூலில் வெளியிட்டு மறுத்திருக்கும் துன்பங்களேயாம். அந்தோ! வேசையர் முதலிய மாதர்களோடும், ஒயின் பிராந்தி முதலிய சாராய வர்க்கங்களோடும், தம் வாழ்நாளை நமனூர்க்குக் கொள்ளைகொடுக்கும் துரதிர்ஷ்டப் பிராணிகளின் தொகை எண்ணி முடியுமோ! ஆகையால், என் சக்திபுத்திகளுக்குத் தக்கபடி யான் லோகோபகாரமாக நினைத்து இயற்றிய இந்த நூலை நடுவு நிலைமையுற்ற மேலோர் நன்குமதிக்கின், அது யான் இதை இயற்றும் விஷயத்தில் செய்த முயற்சிக்கு ஓர் பயனாகும். கெடுதிவிலக்கைக் கருத்தாய்க் கொண்டு, அக்கெடுதியைப் பற்பலவிதமாய் விளக்கிக் காட்டுதல் மூதோர் வழக்கம். அப்படியே கீர்வாணம், தமிழ், இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் அநேக மகாகவிகள் செய்திருக்கின்றனர். அவ்வழியே யானும், யானையுலாவுங் காட்டில் பூனை சென்றாற் போல், தொடர்ந்தனன். நீரைவிட்டுப் பாலைக்கொள்ளும் அன்னத்தின் கதைபோல், இந்நூலை வாசிக்கும் புத்திமான்கள் அதன் கருத்தையுணர்ந்து, அதில் விலக்கியிருக்கும் துன்பங்களின் வழியிற்செல்லாமல் தமக்குரிய மேலோர் வழியிலேயே நின்று தம்முடைய நடக்கையால் நாட்டிற்கு க்ஷேமமுண்டாக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். என் வேண்டுகோளைக் கருணைகூர்ந்து நிறைவேற்றுவராகில், அதுவே யான் கருதும் வேறோர் பயனாகும்.



## கதை.

மாயோ கவர்னர்ஜனரல் அவர்கள் அரசாண்டகாலத்தில், தென்னாட்டில் லக்ஷ்மீவிலாசர் என்னும் பெயருடைய ஒரு ஜமீன்தாரருக்கு, பிரதாபசந்திரனென்றொரு பிள்ளை யிருந்தார். அவர் சென்னையில் கல்விகற்று, பல கௌரவங்களையடைந்து, தம்மைப்போல் பண்டிதரும், நன்னெறியுற்றவருமான சிநேகிதரைக்கூடி நாட்டின் நன்மைக்காகப் பல காரியங்களைச்செய்ய எத்தனிக்கும் நாளில், திருப்பாற்கடலில் அமுதம் தோன்றும் சமயத்தில் வாசுகி விஷத்தைக் கக்கியதுபோல், சில துன்மார்க்கர்கள் தம் பயனை நாடி, அவரை வெகு தந்திரமாய்க் கெடுத்தனர். இடைவிடாது தமக் கெடுத்துச் சொல்லிவந்த சன்மித்திரரின் வார்த்தையை உணர்ந்தும், தாமடைந்த அனுபவத்தை ஆராய்ந்து தெளிந்தும், அத்தீயோர் சங்கத்தைவிட்டு, நண்பரை நாடி, தம்தந்தையோடு மாயோ பிரபுவின் தர்பாருக்குப் போனார். அப்புறம் வேட்டையாடும் பொருட்டு ஓர் வனத்திற்குச் சிநேகிதர்களோடு சென்று, அப்பிரதேசத்தின் அதிபதியாகிய ஜமீன்தாரரின் செல்வப்புதல்வி மனோன்மணி யென்னும்பெண்கள் நாயகத்தை மணம்புரிந்து, தம்முடைய பந்துமித்திரர்களோடு சுகமாய் வாழ்ந்திருக்கத் தொடங்கினார்.

---

## குறிப்பு.

நாடகங்களில் அவரவர் ஜாதி, ஸ்திதி, கல்வி முதலியவற்றிற்குத் தகுதியாய்ப்பேசுவது வழக்கமாகையால், இப்புத்தகத்திலும் வேஷாக்சுந்தரம், மத்தாப்புசுந்தரம், பாவாடை ஜித்தர், திருவேங்கடத்தானு, முத்தையன், சட்பட், படீல் முதலிய ஜனங்கள் தத்தமியல்பினுக்கிசைய வார்த்தையாடுகின்றனர்.

# நாடக பாத்திரங்கள்.

---

பிரதாப சந்திரன் : லக்ஷ்மீவிலாசர் புத்திரன் : கதாநாயகன்.
லக்ஷ்மீவிலாசர் : ஒரு ஜமீன்தாரர் ; பிரதாபசந்திரன் தந்தை.
மாயோ : கவர்னர் ஜனரல்.

வித்தியாசாகரர் :
நிபுணகோசரர் :
துனாலயர் :
சுதேசமித்திரர் :
சமயோசிதர் :
லவுகீகர் :
} பிரதாபசந்திரன் நண்பர்கள்.

விசுவாசகாதகன் : பிரதாபசந்திரனைத் தீநெறியில் இழுக்க முயன்ற ஒரு துஷ்டன்.

பாவாடைஜித்தர் :
திருவேங்கடத்தானு :
இடிமுழுங்கி :
ஸண்டே மாஸ்டர் :
துசும்பா மாஸ்டர் :
} விசுவாசகாதகன் துணைவர்கள்.

முத்தையன் :
சட்பட் :
படீல் :
} விசுவாசகாதகன் வேலைக்காரர்கள்.

மனோன்மணி : பிரதாபசந்திரன் காதலி : கதாநாயகி.
பிரதாபசந்திரன் தாயார் :
விசுவாசகாதகன் மனைவி :

மரகதம் :
அம்புஜம் :
} மனோன்மணியின் தோழிகள்.

இந்திய அரசர்கள், கட்டியக்காரர், சேவகர், புலவர், வேடர், சிப்பாய் முதலியவர்கள்.





கடவுள் துணை

# பிரதாபசந்திர விலாசம்



## முன்னுரை

---

### காப்பு

விருத்தம்.

ஒருவனு யெங்குந் தோன்றி யோங்கிய வுலகந் தன்னைத்
தருந்தொழில் தானே பூண்டு தயையுட னுத்தம கோடி
விரும்பிய வின்ப மெல்லாம் விவிதமா யளித்துக் காக்கும்
பரம்பொரு ளான ஏக பரமனுர் பதங்கள் போற்றி.

(காப்பு கூறியபின் அரங்கத்தில் பிரவேசித்து.)

கட்டியக்காரன்.—

*சகமெலாங் கீர்த்தி பெற்ற சமர்த்தனும் பிரதாப சந்த்ர*
*மகாராசன் வாசல் தன்னை மதிப்புடன் காத்து நின்று*
*வெகுசூர னெனவே யெங்கும் விருதுகள் பலவாய்ப் பெற்ற*
*தகைபெறு கட்டியக் காரன் சபைக்கிதோ வருகின் றனே.*

*தரு-இராகம் கலியாணி; தாளம்-சாபு.*

பல்லவி.

*கட்டியக்காரன்வந்தான் - சபைதனில் - கட்டியக்காரன்வந்தான்*

அநுபல்லவி.

அட்டகாசமாக அழகன்பிரதாபசந்திரன்
அரமனைக்கொரு பெரும்புலியென
பரமசாக்கிரதை யுறுஞ்சவானென (கட்டிய)

சரணங்கள்.

1. தாஷ்டீகமாய்ச்சோக்க தார்தடிகைமன்ன
தலைமீதிலேருமால் தகதகவெனமின்ன
நீட்டான அங்கிமேல் நேர்நடுக்கட்டுதுன்ன
நிகரில்வீரனென் றிகல்குறித்திடப்
புகழ்மணிதரித் தகங்கரித்திட (கட்டிய)

2. மீசைமேற்கைபோட்டு மிரட்டுப்பேச்சுகள்பேசி
மிகவுமொய்யாரமாய்ச் சொகுசுக்கைகளைவீசிக்
கூசாமலங்குவரும் மோசக்காரரையேசிக்
குவலயந்தனி லிவனைவிடவெகு
கவையுளானெவ னெனும்புகழ்பெறு (கட்டிய)

3. மகிபன்பிரதாபசந்திர மகராஜனுக்குத்தீமை
மனப்பூர்வமாய்ச்செய்யும் மடையர்களிச்சீமை
புகுந்திராமலடித்துப் பொறுக்கியவர்தமை
புறத்தலங்களிற் றுரத்திவிடுஞ்சூரன்
கருத்தைமுடிப்பதில் சரத்துளதீரன். (கட்டிய)

(கட்டியக்காரன் மனைவி வருகிருள். அவளை நோக்கி,)

விருத்தம்.

பூநிறைந் துலக மெல்லாம் பொலிவுறுங் கால மென்னும்
வேனில்நற் பருவம் வந்து விட்டதா லினிமே லெங்கும்
நானிலத் துள்ளோ ரெல்லா நலங்களு மனுப விப்பார்
ஆனதால் நீயும் வாரா யன்புட னென்னோ டின்றே.

கட்டியக்காரன் மனைவி.—

அதற்குள்ளே வசந்தகாலம் வந்துவிட்டதா ?

கட்டியக்காரன்.—

கட்டளைக்கலித்துறை.

பாராய்ப் பனிமல ரூடுறுந் தாதைப் பவனனெங்கும்
நீராய்த் தெளிக்கவெண் டிங்களு மோங்க நிலமுழுதும்

தீராத வானந்த மேற்கொள வன்றியுஞ் சித்தசனுர்
நேரா ரிலேயெனத் திக்வி சயங்கொளல் நேரிழையே.

கட்டியக்காரன் மனைவி.— ஆம், ஆம், இதனுல் வசந்தகாலம் வந்து விட்டதென்று நன்றாய்த் தெரிகிறது.

கட்டியக்காரன்.—ஆகையாலிவ்விடத்தில் இன்றோர் நாடகமாடப் போகிறார்கள். நாமு மதைப் பார்க்கலாமா?

கட்டியக்காரன் மனைவி.—ஆ! ஆ! என்ன, என்ன, நாடகமா! அது என்ன நாடகம்?

கட்டியக்காரன்.—பிரதாபசந்திரவிலாச மென்னு மோர் புதிய நாடகம்.

கட்டியக்காரன் மனைவி.—அதைச் செய்தவரார்? அதின் பிரயோஜனமென்ன?

கட்டியக்காரன்.—

விருத்தம்.

திருந்துநல் லாடை யாலுஞ் செம்மணிப் பூண்களாலு
மருந்திடுந் திறத்தி னாலு மாயவே ஷங்க ளாலும்
வருந்தவே செய்யும் வேசை மார்கடம் வலேயிற் பட்டோர்
அருந்துயர் கண்டு மாந்த ரறநெறி யொழுகு மாறே.

அயர்விலாப் புகழின் பச்சை யப்பனார் சங்கத் தாடும்
பெயர்பெறும் பிரெசிடென்ஸி காலேஜி தனிலுங் கல்வி
நயமுட னளிக்குந் திவ்ய நாவல ரருளா லிக்கா
வியமதை யிராம ராஜன் மேதினிக் களித்தா னன்றே.

கட்டியக்காரன் மனைவி.—அப்படியா, வெகு சந்தோஷம்! ஆயினு மிவ்விடத்தில் இயலிசை நாடகமென்னு முத்தமிழிலும் வல்லவராகிய அனேக வித்துவான்களும், கவிகளும் வடமொழி, தெலுங்கு, இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் தேர்ந்த மகாபண்டிதர்களு மிருக்கிறார்களே! அவர்கள் கேட்கத் தக்கதுதானு?

கட்டியக்காரன்.—அதற்காக இதைச் செய்தவர் இரண்டு பாடல் சொல்லி யிருக்கிறார். அவற்றை அவர்கள் கருணைகூர்ந்து கேட்கவேண்டும்.

விருத்தம்.

அகத்திய ரிடமு தித்தே யாலவாய்ச் சங்கத் தோங்கி
மகத்துவ நாய ஞர்தம் வாக்கினிற் பொலிந்த பேதை
மிகுத்துள வன்பே யன்றி மெய்த்திற மேது மில்லா
வகத்தன்யா னியற்று மிந்நூ லலங்கலைப் புனைவ னென்றே.

விதியுணர் புலவீ ரிந்த வியன்றமிழ் மாதை யென்பா
லுதியென நானழைத்த லுளமகிழ்ந் தன்னை மாட்டே
மதியிலாக் குழவி நின்று மதியினை யழைத்தல் போலாம்
குதலையைப் பிழைபொறுத்துக் கொள்ளுவீர் புன்சிரித்தே.

கட்டியக்காரன் மனைவி.—

கொண்டலுக் குலகோ ருய்யக் கொடுப்பது மேன்மை யாகும்
சண்டையில் வீரர்க் கெல்லாம் சயிப்பது மேன்மை யாகும்
பண்டைநான் மறைகட் கெல்லாம் பரமனைப் போற்றல் மேன்மை
பண்டிதர் பிழைபொ றுக்கும் பான்மையில் மேன்மை யோரே.

ஓஹோ! இதென்ன ஆரவாரம்?

கட்டியக்காரன்.—பிரதாபசந்திரர் பரிவாரத்துடன் வருகிறார்; நாமினிமே லொதுங்குவோம்.

(இருவரும் போகிறார்கள்.)





# அங்கம்—I



## முதற்களம்

இடம்: சபாமண்டபம்.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன்; வித்தியாசாகரர், நிபுணகோசரர், குணாலயர், சுதேசமித்திரர், சமயோசிதர், லவுகீகர்.

[பிரதாபசந்திரன் வருகிறான். அவனது பரிவாரமாகிய வித்தியா சாகரர் முதலியோர் அவனை எதிர்கொண்டு வருகின்றனர். அவர்கள் ஒவ்வொருவரையும் முறையே நோக்கி.]

பிரதாபசந்திரன்.—அலோ! குட்மார்னிங் வித்தியாசாகரரே, சிட்டவுன். அலோ! அலோ! நிபுணகோசரரே! டேக்ஸீட். 1 காட்ப்ளெஸ்மி! வாருங்களண்ணை குணாலயரே! வெகு சந்தோஷம். என்னமாயிருக்கிறீர் சுதேசமித்திரரே? ஓ 2 வாட் எ ஹாபிடே! தயை செய்யுங்கள் சமயோசிதரே! உள்ளே வாருங்கள் லவுகீகரே! ஏது நீங்களெல்லோரும் பேசிக்கொண்டு வந்தாற்போலிருக்கிறது; மனதிற்கிசைந்த சிநேகிதராகிய நீங்களிப்படி ஒன்றாய் வந்து என்று மென்னைக் கவுரவப்படுத்தின தில்லையே.

வித்தியாசாகரர்.—எனக்கும் ஆச்சரியமாய்த்தா னிருக்கிறது; நான் வந்தபொழு திவர்களெல்லோரும் வந்தது வியப்பே.

பிரதாபசந்திரன்.—அண்ணே வித்தியாசாகரரே, நீங்களிவ்விடம் வந்து வெகுகால மாய்விட்டது.

வித்தியாசாகரர்.—அண்ணே, அதை யேன் கேட்கிறீர்கள்.

---

1. God bless me. 2. What a happy day.

விருத்தம்.

பேர்பெறுங் கல்வி கற்றும் பிரபலமாய் பீ ஏ என்னும்
சீர்பெறும் பட்டம் பெற்றுஞ் சீவன மொன்று மின்னும்
நேர்படும் வழியைக் காணேன் நித்திய மலைந்தே யோடிச்
சோர்வின்றி யிங்கி லீஷ்கா துரைமாரைக் கண்டு வாறேன்.

பிரதாபசந்திரன்.—ஆம், சார், இந்தநாளி லதென்னமோ தெரிய வில்லை. நன்றாய் வாசித்து உத்தியோகம் பண்ணப்போகிற வர்களுக்கு, அது சீக்கிரத்திற் கிடைப்பதில்லை; ஒன்றுந் தெரியாத கயவர்கள் அனேகர் அதிபாஷ்யத்திலேயே உத்தி யோகங்களைச் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள். அது ஏன்?

நிபுணர்.—

விருத்தம்.

அயர்வின்றி நீங்க ளெல்லா மதிகமாய்ப் படிக்கும் போதக்
கயவர்கள் துரைமார் வீட்டில் கவனமா யுமேது செய்து
நயவஞ்ச கங்கள் பேசி நண்பர்போல் நடித்துக் காட்டித்
தயவையும் பூர்த்தி யாகச் சம்பாதித் திடுவ தாலே.

பிரதாபசந்திரன்.—என்ன சார் சுதேசமித்திரரே, ஏது நம்மைச் சுத்தமாய் மறந்துபோனீர்?

சுதேசமித்திரர்.—வெகு நேர்த்தி! நீங்களே இப்படிச் சொன்னால் நானென்ன செய்கிறது.

விருத்தம்.

நானொரு பெண்ணை நாடி நயமுட னவள்மேற் காதல்
மானவ ரெண்ணெ ணாத மட்டுமே வைத்து விட்டேன்
ஊனமா முலகிற் றேர்ந்த வுடல்பொரு ளாவி மூன்றும்
ஆனதோ ரவள்ப ணிக்கே யர்ப்பிதஞ் செய்து வாறேன்.

எல்லோரும்.—ஆ ஆ ஆ ஆ ஆ! எந்தப் பெண்ணைச் சம்பாதித் தீர்கள்?—சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் வெகு தூர மாச்சே. நீங்களாவது, பெண்ணையாவது சம்பாதிக்க வாவது—இது என்ன புதுமை!

சுதேசமித்திரர்.—நல்லதிருக்கட்டும், சற்றுப் பொறுங்கள். அந்தப் பெண்ணின் சங்கதியைச் சொல்லுகிறேன், அதைக்கேட்ட பின்பு பேசுங்கள்.

அகவல்.

சீர்பெறு மிமயச் சிலைவட பாலாய்ப்
பேர்பெறும் விந்தியப் பெருமலை யோடு
கங்கை யமுனை கர்மநா சனமும்
பொங்கு மகாநதி புனிதநர் மதையும்
உஷ்ண தேசங்களி லூக்க முண்டாக்குங்
கிஷ்ணை கோதாவரி கீர்த்தி காவிரியுங்
காடுகள் வெளிகளுங் கான லோடைகளும்
நீடிழிக் காலம் நிற்குநற் பதிகளும்
செல்வப் பெருக்குஞ் சகம்புகழ் மாட்சியும்
கல்விக் கடலின் கரையறி நுண்மையும்
மக்க ளொழுக்கமும் மாதர்த மழகும்
தக்கநற் றந்தைதாய் தம்மவர் வாஞ்சையும்
கற்புடைப் பெண்டிர்தங் கணவர்கள் புகட்டுஞ்
சொற்படி நடக்குந் தூய்மையோ டின்னும்
நற்புவி யுள்ளோர் நாடுநன் மைகளெல்லாம்
அற்புத மாய்ப்பெறு மாரணங் கொருத்தி
ஆசிய கண்டத் தகன்றதென் றிசையை
நேசித் திருப்பவள் நித்திலங் கொழிக்கும்
புகழிலங் கையெனும் புத்ரியைப் பெற்றவள்
இகபர மிரண்டினுக் கினியன வுடையவள்
1 ரோமக ஸீஜர்கள் 2ருஷ்ய ஜாருகள்
காமுறு க்ரீக்குநற் காவலர் முதலாய்
ஏற்கும் புகழோ டினிதர சாண்ட
மேற்குத் திசையினர் மெச்சுமிச் செல்வியை
ஆதி காலத்தி 3 லலெக்ஜாண்ட ரென்னும்
பாதகன் பிடித்துப் பாடு படுத்தினன்
அவன்சென் றபின் னரையகோ! துருக்கர்
நவமணிக் கிசைந்தவிந் நடுநா யகத்தைப்
பற்றி யிழுத்துப் பதரா யடித்துச்
சற்று மிரக்கமுஞ் சாந்தமு மின்றி
அவளது மைந்தரி னருமை குலைத்துத்
தவத்துட னவள்தருந் தையல ரான

1. Roman Cæsars. 2. Russian Czars. 3. Alexander.

அங்கணு மணிகளை யருளின்றி மான
பங்கப் படுத்தியும் பலவாறு தூற்றிக்
கூரையிற் கொள்ளியாய்க் குலத்துக் கீனமாய்
ஊரைக் கொளுத்தி ஒழித்தன ரன்றோ !
இப்படி நொந்து மிகல்சிந்திப் பின்னர்
எப்படிப் பிழைப்போ மென்றுந் திகைத்துச்
சுற்றும் புறமுமத் தோகையும் பார்க்க
நற்றிறம் படைத்தும் நற்குணம் பலவாய்ப்
பூண்டதன் பின்னர் புவியினுட் பலநிலம்
ஆண்டிட வெண்ணி யருமைக் கலங்களில்
திரைகடல் கடந்துநற் றேசம் பலவெலாம்
விரைவினிற் கண்டோர் மேலோர்க் கினிய
மாது சிரோமணி மதிமயக் குடனே
ஆதர வின்றி யலைவதைக் கண்டு
கிட்ட நெருங்கிக் கிருபையுட னவளை
மட்டிலாத் துக்கமா மறிகட லதனின்
கரைமீதி லேற்றிக் கண்கணீர் துடைத்துத்
தெரிவைநீ யினிமேற் றெளிவுறு வாயென
அதுமுத லாகவே யச்சமற் றென்றும்
இதமுறு கருத்தே யியற்கையா யுள்ள
அன்னவர் தமக்குள் அறநெறிப் பெருக்கின்
இன்னல்தீர் மடைத்தனை யினிதுடன் திறந்த
புண்ணிய வசத்தினுற் பொருளுயி ராதீஇ
எண்ணுஞ் சுதந்திர வின்ப மனைத்துந்
தனதியல் பாகவே தகைமையோ டிப்போ
தனுபவிக் கின்று ளணியா ரணங்கே.

பிரதாபசந்திரன்.—ஆம் சார், நீங்களிவ்வளவு அலங்காரமாயு முருக்கமாயுஞ் சொன்னதை நானும், வித்தியாசாகரரும், இன்னுஞ் சிலரும் ஊகித்துக்கொண்டோம். ஆனால், லவுகீகருக்கும் சமயோசிதருக்கு முங்கள் தாற்பரியம் நன்றாய்ப் புலப்படவில்லைபோ லிருக்கிறது. ஆகையாலதை விசிதமாய்ச் சுருக்கிச் சொல்லவேண்டும்.

சுதேசமித்திரர்.—ஆகா அப்படியே சொல்லுகிறேன்,

விருத்தம்.

இந்நகல் லணங்கா வென்னி லினிமையாய் நம்மைப் பெற்ற
தந்தைதா யுடனே யின்னுந் தகுமுற வினர்கள் வாழும்
இந்துநற் றேச மாகு மிதன்றுயர் நீக்கி னோர்கள்
அந்தமாய் நம்மை யாளு மாங்கிலேய துரைமா ரண்ணே.

குணலயர்.—

ஆசைசேர் தந்தை தாயர் அன்புகூர் மனைவி மக்கள்
நேசர்கள் பலரோ டின்று நெருங்கிய சுற்றத் தார்மேல்
பாசமுற் றிருக்க விந்தப் பாரினி லியற்கை யாகும்
தேசாபி மான மொன்றே தெய்வீக வுணர்ச்சி யண்ணே.

லவுக்கர்.—

என்னவோய் சுதேச மித்ரா இங்கிலீஷ் துரைத்த னத்தில்
மன்னுயிர்க் கினிய செல்வ மகிப்புறு முத்தி யோகங்கள்
உன்னத மேடை மெத்தை யுயிலான பக்கி கோச்சு
உன்னிய படியிருக்க வெமக்குறு குறைக ளென்னே.

சுதேசமித்திரர்.—

இராகம் - காம்போதி - தாளம் - சாபு.

கண்ணிகள்.

1. என்ன குறையுண்டென் றிப்படி நீர்கேட்டா
 லென்சொல்லுவேனண்ணே.
 சென்னைப்பதியில்நீர் செல்வமனுபவித்தால்
 தேசமெங்குஞ்சுகமாமோ அண்ணே.

2. எனுமிச்சங்காய்ப்பொன்னே யெங்குமிருக்குதென்
 றெடுத்துச்சொன்னவனைப்போ லண்ணே,
 நலமானவுங்கள்ஸ்திதி நாடெங்குமுளதென்று
 நவில்வதுஞாயமோ அண்ணே.

3. மகராஜரிங்கிலீஷ் மகிபர் துரைத்தனத்தில்
 மனக்குறையின்றியே யண்ணே.
 சகலசுகங்களுஞ் சரியாயனுபவித்துஞ்
 சாற்றுங்குறைகளுண்டே யண்ணே.

4. ஆயிரவருடமாயையோ துருக்கர்கையில்
 அடிபட்டவிந்நாட்டிற் கண்ணே,
 நோயின்னும்போகவில்லை நோய்த்தன்மையீதென்று
 நுட்பமாய்ச்சொல்லுவே னண்ணே.

5. இமையவரைமுதலா யிலங்கைவரையிலுள்ள
 இந்துக்களெல்லோரு மண்ணே,

தமையொரேஜாதியாய்த் தகைமையுடனேயென்னுந்
தன்மைமறந்தாரே யண்ணே.

6. ஸ்வாதீனமென்னுமொரு சுகிர்தஸ்திதியின்சேதி
துரும்புமறியாரே யண்ணே,
நீதறப்பலதேசச் சிறந்தவழக்கங்களைத்
தெரிந்துநடவாரே யண்ணே.

7. விருத்தியென்பதின் தன்மை விவரமாய்த்தெரியாமல்
வீணாவழிகளி லண்ணே,
சித்தஞ்செலுத்தியே திகைத்துத்தமொறிச்
சீர்குலைந்திடுகிரு ரண்ணே.

8. ஒருமைப்பாடென்னுமோ ருசிதவழக்கந்தன்னை
ஒருக்காலுமறியாரே யண்ணே,
பெருமைகுலைந்தநற் புறத்தார்க்குக்கீழ்ப்பட்ட
பேதமையறியீரோ அண்ணே.

9. சாண்கிணற்றுமைபோற் றம்முடைதேசத்தை
சகலலோகமென்பா ரண்ணே.
ஆண்மைக்குரியசு தேசாபிமானத்தை
அறியாரேகனவிலு மண்ணே.

10. நாகரீகத்திலுள்ள நற்கருத்தறியாமல்
நமக்குச்சுகமுண்டோ அண்ணே,
ஆகையால்நம்முடை நாட்டின்குறைகளை
அறியாமற்பேசலாமோ அண்ணே.

குணலயர்.—

விருத்தம்.

ஆமையா இவ்வா றேது மருமையாங் கருத்து ளோரிச்
சீமையி லில்லா மற்றுன் சிறப்பைநா மிழந்து விட்டோம்
தீமையை விலக்கி நாட்டிற் சீர்திருத் தங்க ளெல்லாம்
தாமத மின்றிச் செய்தல் தனவான்கள் தொழிலா மன்றே.

சுதேசமித்திரர்.—

தனவான்க ளென்போ ரெல்லாந் தனத்தையே பாது காப்பார்
கனவான்க ளெல்லோ ருந்தங் கனத்தையே கருதி வாழ்வார்
அனைவரு மிவ்வா றுனு லையனே யிந்த நாட்டின்
மனக்குறை தீர்க்க வல்லார் மற்றெவ ருளரோ சொல்லாய்.

தரு - இராகம் - நாதநாமக்கிரியை - தாளம் - ரூபகம்.

பல்லவி.

என்னநன்மையோ - தனகனகசம்பத்திருப்பதனல்

அநுபல்லவி.

மன்னுஞ்சுதேசாபி மானிகளுக்கன்றி
மற்றவர்க்கிருந்தாற் சற்றும்பயனில்லை. (என்ன)

சரணங்கள்.

1. நம்முடைநாட்டின் நரபாலரெல்லோரும்
நாட்டைமறந்து தம் வீட்டிலிருந்து
கொண்டை விழியாரைக் கூடிக்குலாவிச்செங்
கோலையிழந்தன ராலினிச்சொல்லவோ. (என்ன)

2. ஆதிசங்கரரு [1] ம் ஆர்யராமாநுஜ[2]
ரவர்பின்ராமோஹன ராயரு [3] மாக
நீதிவழியுற்ற நாதர்களெல்லோரும்
விதியாலோநாட்டைக் கதிபெறச்செய்தது. (என்ன)

3. சிற்றுளியொன்றே சிலையைத்துளைத்தல்போல
சீர்பெறுந்தேசாபி மானியொருவனே
மற்றவர் தம்முடை மனந்திருப்பித்தன்
மார்க்கத்திற்கேற்கவே சேர்க்குந்திறமுள்ளோன். (என்ன)

4. ஆகையால்நானிப்போ தாம்டன் [4] ஹாவர்ட் [5] டன்று
அனுசரித்ததோர் வழியிலேநின்று
தேகமுள்ளமட்டும் தேசத்திருத்தத்தைத்
தேடித்திரிகுவேன் நாடிப்பலர்களை. (என்ன)

இராகம் - சங்கராபரணம்.

விருத்தார்த்தம்.

தனதுநன் னுடலென்றும் தனதுநற் சனங்க ளென்றும்
மனதினி லெண்ண மில்லா மனிதனைத் தன்மை யென்றால்
வனமதில் வாசஞ் செய்யு மதியிலா மிருகம் போல்வான்
பனுவலி லவன்பேர் சேரப் பாங்குட னவனை யென்றும்

பாவலர்பாடார் - அப்பாவியை-நாவினிலாடார்.

மேவு நற்றன முறவு நரொடும்
ஏவலாளிக ளிசைந்து பெருகினும்

---

1. அத்துவைத சித்தாந்த ஸ்தாபகர்.
2. விசிஷ்டாத்துவைத சித்தாந்த ஸ்தாபகர்.
3. பிரமஸமாஜக் கோட்பாட்டை முதலில் வெளியிட்டவர்.
4. Hamden. இங்கிலாந்தில் இராஜாங்கத்தாருடைய அக்கிரமங்களை தேசத்தின் நன்மைக்காக எதிர்த்தவர்.
5. Howard. வெகு கருணையும் தர்ம குணமுமுள்ள வொருதுரை.

ஆவி போனபி னவனை மதிப்புடன்
கூவி யழுகிற கொடுமை யுளரெவர் (பாவலர்)
தேசாபி மான மென்றால் செம்மையோ கருமை யோவென்
றாசிய மாகப் பேசு மறிவினர் பலரிந் நாட்டில்
கூசாமல் வாழ்வா ரன்றோர் கொண்டுள செல்வம் கல்வி
வாசமாய் மனிதன் சேரா வனத்துள மலரைப் போலும்
வையகத்துள்ளார் - அப்பிறப்பை - மெய்யாகக்கொள்ளார்.
நெய்யைச் சொரிபல யாகக் கிரியைகளும்
யாக நிஷ்டைக ளுடன் நடிக்கினும்
ஆய வுடைபொது நோக்கி லைகளும்
பொய்ய லாதொரு பொருண்மை யடையுமோ. (வையக)

பிரதாபசந்திரன்.—ஐயா லவுகிகரே, உங்களுக்கேன் இந்த விஷயத்தில் சிரத்தையில்லை. நீரேன் நம்முடைய நாட்டின் சீர்திருத்தங்களைப் பாராட்டக்கூடாது?

லவுக்கர்.—

விருத்தம்.

எதுக்கு நமக்கிங் கெல்லா மெப்பமே யெதுபோ னாலுஞ்
சூதுபொய் க[illegible] பொருளைத் தேடி
ஆதர முடனே [illegible] மைக் காத்துத்
தீதற வாழ்வதின்மேற் சீர்திருத் தங்க ளுண்டோ?

பிரதாபசந்திரன்.—வெகுசந்தோஷம். ஆ ஆ ஆ! என்ன திவ்விய மானகொள்கை! என்ன சுகிர்தமானவெண்ணம்! எவ்வளவு மதிக்கத்தக்கவுணர்ச்சி!

லவுக்கர்.—அட, என்னஸார் நீங்கள் சொல்லுகிறது வீண் வம்பா யிருக்கிறது. கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன். நம்முடைய காரியமென்னவோ அதைவிட நமக்கு நாட்டில் நடப்பதைப்பற்றி விசாரிக்கவேண்டியதை யென்ன? இராம னுண்டாலென்ன? இராவணனுண்டாலென்ன? எது எக்கேடு கெட்டாலும் நமக் காகவேண்டியதென்ன? இந்தத் தேசா பிமான மென்னப்பட்ட பைத்தியத்தால் நமக்கு விளையும் பயனென்ன சொல்லுங்கள் அதினால் வயிற்றுக்குச்சோறா? கட்டத்துணியா? விருதாவாய்ப் பலபேர் வாயிலகப்பட்டு அலதூறுபடுவேதன்? நம்முடைய நாட்டை யெவன் கண்டான். நாமெப்படியாகிலும் பத்துப்பேருக்கு நல்லவ னென்று பெயரெடுத்து நாலுபெரியமனுஷியாள் நம்முடைய வீட்டிற்கு வரவும் போகவு மிருந்தாற்போதும்.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

ஐயையோ விப்பேர்க் கொத்த வநியாயக் கொள்கை யுள்ளோர்
செய்யுமாத் துரோகத் தாலே தேசமும் பாழாய்ப் போச்சு
மெய்யுணர் வுள்ளோர் நாமும் விருத்தியு மிழந்து விட்டோம்
வையகத் துள்ளோர் நம்மை மதிப்பரோ மனித ராக !

புராதனர்.—

என்னவார் சீர்திருத்த மென்றுநீர் சொல்வ தெல்லாம்
மன்னிய நமது முன்னோர் வகைவகை யாகச் செய்தார்
அன்னவர் தம்மைக் காட்டி லறிஞரோ நீங்க ளன்னோர்
சொன்னதை யநுசரிப்பீர் துரும்புமே தள்ள வேண்டாம்.

வித்தியாசாகரர்.—அடடா! என்னையா புராதனரே, பழமையை சித்தாந்தத்தை ஸ்தாபித்துவிட்டீரே; ஆயினும் நானொன்று சொல்லுகிறேன் கேளும்: வேதத்தைப்பற்றியது புராணம்; புராணத்தைப்பற்றியது ஆசாரமென்று சொல்வார்கள். அப்படி யொன்றைப்பற்றியொன்றாய் விருத்தி யடைய வேண்டுமே தவிர, க்ஷயமாயிருக்கலாமா?

புராதனர்.—விருத்தி விருத்தியென்று சொல்லுகிறீரே அது என்ன ஐயா?

நிபுணர்.—அதை நான் சொல்லுகிறேன் கேளும்.

விருத்தம்.

அர்த்தமாய் நமது முன்னோர் அன்றுசெய் வழக்கந் தன்னில்
வியர்த்தமா யின்று தோன்றும் வீண்வழக் கங்கள் நீக்கிக்
கர்த்தனார் கொடுத்த புத்தி கருத்துறக் கால தேச
வர்த்தமா னங்க ளேற்க மாற்றுத லன்றோ விருத்தி.

புராதனர்.—நல்லது அது போகட்டும்.

விருத்தம்.

பஞ்சம சாதி யாரைப் பணிவிடை செய்யக் கொண்ட
ரஞ்சக வாங்கி லேய ராஜ்ஜியபா ரத்தி னீங்கள்
நெஞ்சுற விங்கிலீ ஷோதி நிபுண ராய்ப் பாசு செய்தல்
பஞ்சமில் லாம லுண்டு பணஞ்சேர்ப்ப தற்கா யன்றோ.

வித்தியாசாகரர்.—ஐயோ, இவ்வளவுதானா நீங்கள் தெரிந்துகொண்டது. பழமை பாராட்டப் பாராட்டப் புதுமை நீங்குமென்கிறார்களே. அதற்கு நீங்கள்தான் திருஷ்டாந்

தமா யிருக்கிறீர்கள். ஐயா ஸாக்ஷாத் மகாராணியவர்க ளுடைய பாஷையை இப்படி யிகழாதேயும்; இங்கிலீஷ் பாஷையோ சமுத்திரம். அதிலுள்ள சாத்திரரத்தினங்க ளனந்தம். அவற்றிற் சிலவற்றை யெடுத்துக் காட்டுகிறேன் பாரும்.

தரு - இராகம் - நாதநாமக்கிரியை - தாளம் - சாபு.

பல்லவி.

நன்மைகள் கேளீர் - இங்கிலீஷின்
நன்மைகள் கேளீர்

அநுபல்லவி.

ஜன்மசபலமாக்கத் தருந்த மெடபிஜிக்ஸ்1
கன்மந்துலக்கும்நெறி காட்டும்மோராலிடி2
புன்மைநீக்கும்வழி புகட்டும்பலநூல்கள்
வன்மையுடனேகற்று வழிபடும்படியான. (நன்மை)

சரணங்கள்.

புத்திதுலக்கவல்ல புனிதமாதமாடிக்ஸ்3
சித்தந்தெளிவுறச் செய்யும்லாஜிக்குடன்4
நித்தமுபயோகம் சேர்ந்தமெடிகல் ஸைய‌ன்ஸ்5
ஒத்தஇகானமி 6 யோதுவாதலுள்ள
உபயோகத்தோடு - மொருக்காலும்
உயர்ந்தவிந்நாடு - உணராத
உலகஇஸ்டோர7 ரியுடனேங்குங்க்ரநாலேஜி8
பலவிதஜாக்ரபி9 பரவும்யாத்திரைகளோடு
நலமார்நாவிகேஷன்10 நாச்சுரல்ஸையன்சும்
நிலைபெறக்கற்பதால் நேரும் நன்மைகளோடு.

1. Metaphysics=ஆத்மதத்துவ சாஸ்திரம்.
2. Morality=நீதிசாஸ்திரம்.
3. Mathematics=கணிதசாஸ்திரம்.
4. Logic=தர்க்கசாஸ்திரம்.
5. Medical Science=வைத்தியசாஸ்திரம்.
6. Economy=அர்த்த (பொருள்) சாஸ்திரம்.
7. History of the World=உலகசரித்திரம்.
8. Chronology=பூதககாருக்ரமணிகை; காலவிருத்தாந்தம்.
9. Geography=பூகோளம்.
10. Navigation=கப்பல்யாத்திரையைப் பற்றிய சாஸ்திரம்.
11. Natural Science=பவுதிகசாஸ்திரம்.

நிமிஷத்திலோடும் - ரெயில்வண்டி
நியமத்திலேனும் - நிலைபெற்று
அமிதவேகமாக வோடும் டிலேகிராபு
திமிதிமிலெனவேலை செய்யுமியந்திரங்களாலே
நமைநாகரீகமாம் நல்வழியிற்சேர்த்து
அமைதியுடனேநாட்டி லபிவிருத்தியுண்டாக்கும். (நன்மை)

சமயோசிதர்.—ஆம் சார், நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான் ஆனாலென்னுடைய சித்தாந்த மென்னவென்றால், நாமொருவருக்கும் எப்பொழுதும் சங்கடமுண்டாகும்படிப் பேசக் கூடாது. இது ஏனென்பீரா,

கந்தம்

எப்பொழு தெதுபிரஸ்துதமோ
அப்பொழுதவ் வார்த்தையாடி யந்நியர்மனதில்
தப்பென்று படுவதெல்லாம்
செப்பாமலேதிரியவல்லன் றீமானண்ணே.

நிபுணர்.—ஆ! ஆ! ஆ! அண்ணே, வயனுக்குத் தக்க வாய்க்காலென்பார்கள். அப்படியே யுங்கள் பேருக்குத் தக்க சித்தாந்தமாயிருக்கிறது. சூரியனைக்கண்டா லிருட்டுக்காகாது; சுஜனரைக்கண்டால் துர்ச்சனருக்காகாது; அப்படி யிருந்தும், சுஜனர் துர்ச்சனரைப்போற் பேசவேண்டும்; சூரியன் இருட்டைப்போற் கறுப்பாயிருக்கவேண்டுமல்லவா.

(கைகொட்டி)

எல்லோரும் - ஆ! ஆ! ஆ!

(மேடைவிட்டுநீங்குகிறார்கள்)



# அங்கம்—II



## முதற் களம்.

இடம்: விசுவாச காதகன்வீடு.

பாத்திரங்கள்: விசுவாச காதகன், விசுவாச காதகன் மனைவி. முத்தையன்.

விசுவாசகாதகன்.—

விருத்தம்.

ஆரடா பியூனு தம்பா ஓலெபாய் முத்தையாகம்
பாரடா குதிரைக் கார பக்காளி யெங்கே போனான்
நேரமாய் விட்ட திப்போ நேற்றுநாம் போன தாசி
மாரிட வீட்டுக் கேக வண்டிதான் போடு வாயே.

(பல்லைக்கடித்துக்கொண்டு)

அடேபாய் முத்தையா மடையா, எங்கேபோனே? பியூனுதம்பெங்கே? குதிரைக்கார பக்காளி எங்கே? சட்பட், படீல், இவர்களெங்கே?

முத்தையன்.—சாமி ஆறுமாசத்துப் பே பிடிச்சுகிச்சு; எண்ணு வைத்துக்குக்கஞ்சியில்லாமே ஆதம் பொஞ்சாதியைவிட்டு விட்டு ஒருதுலுக்கமுண்டச்சியைபிடிக்கிணு நாகூருக்குப் போயிட்டா°. பக்காளி, கோச்சுமா அந்தோணிபொஞ்சாதி வீராயியைபிடிக்கிணு வெங்களூருக்குப் போயிட்டா°. சட்பட் படீல், பொயலுக்குப் புறுக்கள்ளு குடிக்கப் போச்சு.

விசுவாசகாதகன்.—பேயெங்கேடாபிடித்தது?

முத்தையன்.—நீங்கதாஞ் சாமி பே பிடிச்சுகிச்சு.

(சவுக்கைவிசிறிக்கொண்டு)

விசுவாசகாதகன்—அடபடவா, டர்ட்டிஸ்கவுண்டரல்-ராஸ்கல்-நாம் பேயா!

முத்தையன்.—அல்லேசாமி, பேயெண்ணுசம்பளம். நா° இஸ்மித்து துரைவீட்டிற் பூட்டுதுடைக்கிற வேலையிலிருந்தேன். அப்ப செவ்வையா துடைக்கப்போனு, பேபிடிச்சுக்குவே° எண்ணு துரைசானிசொல்லுவா, அப்பக்கத்துக்கிணேஞ் சாமி, தெரியாமல் பூந்தடிக்கிறீங்களே.

விசுவாசகாதகன்.—அடபடவா, அல்லாம் நமக்குத் தெரியும். நமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. கஜகர்ணம், கோகர்ணம், இந்திரஜாலம், மகேந்திரஜாலமென்று சொல்வார்கள். நாமிதுகளையுமின்னுமனேக தந்திரங்களையும் பதம்பார்த்துப் பழக்கப்போட்ட பெருஞ்சாமியார்—அடே நம்ம சங்கதி யுனக்குத் தெரியாதா?

முத்தையன்.—அல்லாந் தெரிஞ்சுச்சு சாமி, குருக்கே யொரு பேச்சு, நா° ரொம்ப நல்லவஞ் சாமி. எங்கப்பே° லுக்கா சமாதானம், மேஸ்பட்ளர் வேலை செய்ஞ்சா°; லொங்தோனுக்குப் பொய்ட்டுவந்தா°; எங்காத்தா மரியாயி ஆயா வேலை செய்ஞ்சா; எங்கண்ணே ஞானப்பிரகாசம், குசினிமேட்டி செய்ஞ்சா°; எங்கமாமே° அஞ்ஞாணிதொப்புளா° வஸ்தாது தாவதோடு குத்துசண்டை போட்டா° — பறப்பைய னெண்ணு நினைக்காதெங்க சாமி.

விசுவாசகாதகன்.—அடே ஸநவர்பீச் தலையெல்லாம் பேச்சாய்ப் பேசாதே இநப்; ஆர்ரீ, அங்கே.

விசுவாசகாதகன் பெண்சாதி.—சொள்ளு.

விசுவாசகாதகன்.—அடி இன்றைக்கு நாயிற்றுக்கிழமை; சிலசிநேகிதரை விருந்துக் கழைத்தேன்! ரொட்டி, கறி, முதலிய சாமான்களெல்லாம் வாங்கிக்கொடுக்கிறேன் தயார்செய்கிறையா?

பெண்சாதி.—

தரு - இராகம் - சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

சிநேகிதரும்வந்தாரோ - கெடுமெதியுள்ள சிநேகிதரும்வந்தாரோ.

அநுபல்லவி.

சிநேகிதர் வந்தாரோ தீமைவழிகாட்ட
திநேதிநேவெகு தனஞ்செலவழித்து
அநேககெடுதிகளழைத்துவிலைக்குவாங்கும் (சிநேகி)

இளிச்சவாயர் தம்மை யேய்க்கப்போதுமான
இங்கிலீஷு—கற்று எஸ்நோவெனத்தெரிந்து
வெளிசசம்போட்டுப்பல வித்தைகள்கற்றவரென்றே
வீணுனஜம்பம்பேசி நாளுமற்பிரபுக்கள்போல்
விதவிதமாய் நடித்துச் சதிசற்பனைகள்செய்யும். (சிநேகி)

2. தக்கவழியிற்றந்தை தாயர்வைத்ததனத்தை
கைக்கெலும்பில்லாமற் கண்டமட்டுமெழித்து
பக்கிரீடன்களாகப் பைகோமட்டங்களாகப்
பக்கத்துக்கோர்லேடியாகப் பாட்டில்கேசுகளாக
சக்கைப்பிளந்துபணம் சடுதியிலேயொழிக்கும். (சிநேகி)

3. தச்சவாடைக்குப்பாதி-தாசிவீட்டிற்குப்பாதி
இச்சகசக்குட்டி-யினர்களுக்குப்பாதி
உச்சிதலட்சம்அழித்து ஓட்டாண்டியாகிச்செடி
வைச்சவன்வார்க்காரேனென்று வகையாய்வேதாந்தம்பேசி
சிச்சீயெனவறிஞர் சிரிக்கவுடம்பெடுத்த. (சிநேகி)

**விசுவாசகாதகன்.**—அடி இந்த வம்பளப்பெல்லாம் நாளைக்காகட்டும், இந்தக் காரியத்தைச் சாயப்போடுகிறையா இல்லையா?

**பெண்சாதி.**—அதென்ன கல்லெடுப்போ நீ போ! தாய்தகப்பன் லட்சம் லட்சமாய் சம்பாரிச்சதெல்லாந் தாரைவார்த்து விட்டே! உன்னாலே தம்பிடிக்குக்கூட பிரயோஜனமில்லே! உனக்குத் தலையைச்சுற்றிக் கடனும் சந்துசந்துக்கு வாரண்டுமாயிருக்கிறது. இந்தபவுஷுக்கு ரொட்டியாம், கறியாம், விருந்தாம், தறிதலைப்படவாக்களெல்லாம் வாரதாம்!

**விசுவாசகாதகன்.**—அடி என்னடி கொஞ்சமாவது மரியாதையில்லாதே பேசுகிறாய்.

**பெண்சாதி.**—அட சீ உற் அண்ணைம், தித்திச்சமட்டும் சக்கரை. நீ யெந்தமட்டும் பெண்சாதி பிள்ளையென்று பார்த்தையோ, அதுவரைக்கு முனக்கெல்லா விஷயத்திலு மடிமையாயிருந்தேன். எப்போ தேவடியா நாரிகளுக்கு முறியா யென்னையு பெண்மக்களையுந் தெருவில் விட்டையோ அதுமுதல் உன்னிடத்தில் மரியாதையென்ன கிரியாதை யென்ன? குட்டிச் சுவருக்குந் தோரணமோ?

**விசுவாசகாதகன்.**—போனதுபோச்சு, நானினிமேலப்படி செய்யவில்லை. இந்தக் காரியத்தை மாத்திரம் சற்றே நடத்து.

**பெண்சாதி.**—ஆ! ஆ! ஏண்டா சடையா, அதுக்கென்ன தடையா; நாமென்ன வெடியும்போதெல்லாங் கத்துகிற கோழிதானே. நீ யெப்படி சொன்னாலுமப்படிதான்; ஆனால் நீ போட்ட இரத்தின ஜடைபில்லையும், தலைசாமானும், வங்கியும், தோடாவும், கஜ்ஜைகொலுசும் தூக்கிகினு வேலைசெய்ய சரிப்

படவில்லை. போனமாதம் முந்நூற்றைம்பது ரூபாய்க்கு வாங்கிக்கொடுத்த ஜண்டிப்புடவை கட்டிக்கினு இருக்கிறேன், அதையெல்லா மவிழ்த்துவிட்டு வாறேன்.

மாமியின் போரும் மைத்துனர் கடுப்பும்
நாமலிட் டுழலும் நாசகத் திகளின்
சில்லரைச் சண்டையுந் தீய நாத்திகளின்
வல்லடி வழக்கும் வான்முறை யின்றி
மாமா நடுவில் வாட்டுங் கொடுமையும்
ஆமா மெனவே யவரோடு சேர்ந்து
புருஷனு மொருகாற் போடு மென்று
பருஷமாய்த் திட்டிப் பாவ தோஷத்திற்
கஞ்சா தடித்தே யடக்கி நடத்தும்
வஞ்சனை யோடு வயிற்றை வளர்க்க
வீட்டினிற் சேர்ந்து வீண்வார்த்தை யாடிக்
காட்டிக் கொடுத்துக் கலாவ மடையும்
அற்பர் மனப்படி யடங்கி நடந்து
சொற்பமா யவர்சொலுஞ் சொல்லுக் கிசைந்து
ஈனருக் கெல்லா மிளக்கா ரமாகி
மானத்துக் கஞ்சி வாய்திற வாமல்
பருவ மனைத்தும் பாயோடு போக்கி
உருவங் குலைந்தே யுண்மையா யென்றும்
சுகமெனும் பொருளைத் துரும்புந் தெரியா
தகலும் பெண்க ளனந்தங் கோடி.
அன்றியுங் கணவனை யடக்கித் தம்வீட்
என்றுஞ் செல்லுமா றிசைத்தே யப்பால்
அன்புட னளித்த அன்னையும் பிதாவும்
துன்ப மடைந்து சோற்றுக் கலைய
உறவின ரெல்லா மொதுங்கி நிற்கக்
குறைவிலா வழியிற் கூட்டில் வசிக்கும்
அருமைப் பறவைபோ லாணும் பெண்ணுமாய்
பெருமை யடைந்து பெண்ணர சாளும்
சீமாட் டிகளின் சிறப்பைச் சொல்ல
ஆமோ வொருகா லாதிசேட னுக்கே.

இப்படியெல்லா முலகத்திற்படுவதுண்டு; அந்தப் போராட்டமெல்லாம் நமக்கில்லாவிடினும் உன்னாலெனக் குண்டாகுந் துன்பங்களிவ்வளவவ்வளவல்ல. உனக்கு நானெத்தனைவாட்டி சொன்னாலும் நீ கேட்கிறதில்லை; குலைக்கிறநாய் குலைக்கட்டுமென்று

கூத்தியார்வீடே கோயிலாயும் தேவடியாளே தெய்வமாயும் நினைத்துத் துள்ளிவிழுகிறாய்; துள்ளினமாடு பொதிசுமக்கிற சங்கதி அப்புறந் தெரியும். ஐயோ காலக்கேடே! ஊசியால் தைத்தாலும் உளறுவாய் மூடாது என்பதுபோ லெனக்கும் வெட்கமில்லை. நித்தியஞ் சொல்லுகிறதுபோ லின்றும் பாடமொப்பிக்கிறேன், கேட்க சாவகாசமுண்டோ?

தரு - இராகம் - பைரவி.

பல்லவி.

விலைமாதரைத்தேடி யலைபவர் சுகங்களும் - வேடிக்கைகளுங்கேளாய்.

அநுபல்லவி.

நிலையாயிருக்குந் தம்மனையிலும் வேசையர்
நிலயங்கள் தம்மிலும் பலவிதமாய்ச்சென்று. (விலை)

சரணங்கள்.

1. ஸ்நானத்துடனேநல்ல ஜபதபங்களுமிங்கே
சங்கையில்லாமலே சரசமாடுவதங்கே
பானபோஜனங்களைப் பண்ணிமுடிப்பதிங்கே
பாக்குவெற்றிலையோடு படுக்கைக்குப்போவதங்கே. (விலை)

2. பஞ்சணைமெத்தையைப் பாழாய்ப்போடுவதிங்கே
பாழுந்தரையிலேனும் படுத்துருளுவதங்கே
கொஞ்சுங்கிளிமனை யாளைவிடுதலிங்கே
கோட்டானிலுங்கெட்ட குரூபியைத்தொடலங்கே. (விலை)

3. வாய்க்குவழங்காமல் வைதுபோரிடலிங்கே
மயிலேகுயிலேயென்று வாடிவதங்கலங்கே
பேய்க்கிடும்பலிபோலப் பிண்டம்போடுவதிங்கே
பெருத்தவரும்படி யனைத்துங்கொடுப்பதங்கே. (விலை)

4. அழுக்குத்துணியோடு மடைத்துவைப்பதுமிங்கே
ஆடையாபரணமிட் டழகுபார்ப்பதுமங்கே
கொழுத்தவளிவளுக்கே னென்றுகூறலுமிங்கே
கொண்டுபோயுளதெல்லாம் கொடுத்துவிடலுமங்கே. (விலை)

5. மரியாதைவார்த்தைக்கு மனஸ்தாபப்படலிங்கே
வம்புதும்புகளுக்கு மனதொத்திருத்தலங்கே
பரிவோடுபேசினும் பகைத்துப்பேசுவதிங்கே
பச்சைப்பச்சையாய்த்திட்டப் பல்லையிளிப்பதங்கே. (விலை)

வீட்டோடிருந்து விசனப்படுவதிங்கே
வேடிக்கையாய்க்கோயில் குளத்துக்குப்போவதங்கே

கேட்டுக்கொண்டாலுமே கேளாதிருத்தலிங்கே
கேளாதமுன்னமே கெஞ்சியழைத்தலங்கே. (விலை)

7. காலைப்பிடித்தாலுங் கண்ணெடுப்பாராததிங்கே
காமவெறியினாற் கண்டதைச்செய்வதங்கே
வேலையிருந்தாலே வந்துபோவதுமிங்கே
மிகுந்தகாலமெல்லா முகந்துசெலுத்தலங்கே. (விலை)

8. கூடியமட்டுக்கு நாடாதிருப்பதிங்கே
கொழுப்படங்கினவுட னிழுப்பில்விடுவதங்கே
ஆடிப்பாடித்தீர்ந்தா லடைக்கலம்புகலிங்கே
அப்புறம்போனா லடித்துத்துரத்தலங்கே. (விலை)

9. கடன்காரனைப்பின் கதவையடுத்தலிங்கே
காட்டிக்கொடுக்கவே காசுவாங்குவதங்கே
உடனேஜெயிலுக்குப் போனாலுருகலிங்கே
ஊளைமகன்கெட்டான் போடியென்னலுமங்கே. (விலை)

10. வருஷங்கணக்கில்நோயால் வருந்திக்கிடப்பதிங்கே
மறந்துசுகமாக வாழ்ந்திருப்பதுமங்கே
புருஷன்போனானென்று புலம்பியழுதலிங்கே
போனால்போகிறானிவன்போ லெத்தனையென்னலங்கே. (விலை)

விசுவாசகாதகன்.—சே! பறமுண்டே நீ சுத்தமாய்க் கெட்டுப் போனே; ஆதியிலுனக்கு நம்மிடத்திலிருந்த பிரீதியும் மரியாதையு மிப்போது கொஞ்சமாவதில்லை. என்ன சொன்னாலும் தேவடியாக்கள் நாஜுக்கும் பிரீதியான வார்த்தையும் மற்றவர்களுக்கு வராது. சில மடையர்கள் அவர்களை மேனி மினுக்கிகளென்றும், மோசக்காரிகளென்றும் சொல்லுவார்கள்; ஆனால் நானிதுவரையி லறிந்தமட்டும் அவர்களைப் போல குட்டிபில் இந்த லோகத்திலில்லை; மற்றவர்களாலெல்லாம் வெகுதொல்லை. அடே பாய், நீ போய் நேற்று சாயந்திரம் ஆறுமணிக்குமேல் போனோமே அந்த வீட்டிலிருக்கு மம்மாளோடு, நானும் சில சிநேகிதர்களும் தேபோஜைக்குப் பத்துமணிக்குள் வந்து சேருகிறதாயும் அதற்கு மேல் சற்றுநேரம் உல்லாசமாய்ப் பாட்டுக்கச்சேரி நடத்தப் போகிறதாகவும் சொல்லிவா.



## இரண்டாங் களம்.

இடம்: ஓர் தாசி வீடு.

பாத்திரங்கள்: விசுவாசகாதகன், குசும்பாமேஸ்டர், சண்டை மேஸ்டர், பத்தாயி மேஸ்டர், வெட்டுணி, இடி முழுங்கி, நாட்டியப் பெண்கள் முதலியோர்.

[ஆளுக்கொரு சுருட்டுப்பிடித்துக்கொண்டு சட்பட் பட்லர் சாராயபுட்டிகளையுங் கிளாசையு மெடுத்துவர.]

விசுவாசகாதகன்.—ஆ! ஆ! ஆ! அண்ணே இன்றைக்கு நாம் சாப்பிட்ட விருந்தைப்போல உலகத்தி லினிமேலெவர்கள் சாப்பிடப்போகிறார்கள். இப்படி நம்முடைய அருமை தெரிந்து சந்தோஷப்படுத்தத் தக்கவர்கள் தாசிகளன்றி மற்றை யாரிருக்கிறார்கள். வெரிகுட், மெத்த சந்தோஷம், அடே, சட்பட் வேறே ஒரு சுருட்டைக் கொடு; அடே பட்லர் நம்ம சிநேகிதர்களுக்கெல்லா மின்னுமொரு கிளாஸ் ஷம்பெயின் கொடுத்துக்கொண்டுவா.

பட்லர்.—ஆகா அப்படியே.

விசுவாசகாதகன்—.

விருத்தம்.

எண்ணுத பொருளிருந்து மெக்ஸ்பென்ஸுக் கில்லை யென்றே
பிண்ணாக்கைத் தின்னும் டர்ட்டி பீஸ்டுகள்போ லல்லாமல்
கண்ணாட்டி மாராம் டான்சிங் கர்ல்களைக் கூடி நாமும்
அண்ணாத்தை மாரே யின்று ஹாபியா யிருப்போம் வாரீர்.

எல்லோரும்.—

(கைகோத்துக்கொண்டு,)

தரு-இராகம்-ஹம்ஸத்வனி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கேடுகெட்டமடையர்கள் - கீர்த்தியற்ற கடையர்கள்.

அநுபல்லவி.

பாடுபட்டுப்பணத்தைத்தேடியும் பரத்தையர்க்கீயுஞ்சரத்திலாதவர் (கேடு)

1. பாவபுண்ணியங்கண்டவரார் - பாவையர்மோகத்தைவிண்டவரார்
சாவிருக்கையிலாறிலும்நூறிலும் - தாசிமாரிடம்நேசம்வையாதவர் (கே)

2. கடவுளென்றுசொல்லுவார் - கசடர் தம்மைவெல்லுவார்
படியிலித்தனைநம்பிவேசையர் - பாசம்நீங்கிமோசம்போனவர் (கே)

3. பெண்டுபிள்ளையலையட்டும் - பெற்றவருற்றவர்கலையட்டும்
கண்டகேகாட்சிகொண்டதேகோலமாய்-கணிகையர் தம்மையணைகிலாதவர் (கே)

(விசுவாசகாதகனைப் பார்த்து.)

குசும்பாமேஸ்டர்.—அண்ணை உங்கள் விருத்தத்திலும் நாமெல்லோரும் பாடிய பாட்டிலுமுள்ள பரமார்த்தத்தை நாமன்றி மற்ற யாரறியப்போகிறார்கள்.

விசுவாசகாதகன் —எங்கள் தகப்பனார் புழுத்த கத்திரிக்காயிலும் பொத்தல் சோமனிலுங் காலத்தைக்கழித்து அளவிறந்த திரவியஞ் சம்பாதித்து வைத்தார். ஆனால் சிங்கக்குட்டி யானைமேலேயே பாயுமென்பதைப்போல நமக்கு பால்யமுதல் குலக்கொழுந்துகளாகிய தாசிகள் நேசத்திலேயே மெத்த இஷ்டம். ஆகையால், ஆட்டம் பாட்டம் விருந்துமுதலிய நல்ல பிளெஜர்களை யநுபவிக்க விசேஷக் கடன்களை வாங்கிவிட்டோம்; அவர் வறட்டுத் தவளை வாயாற் கெட்டதுபோலேனிப்படிச் செய்கிறாயென்று கத்திக்கத்தி இறந்துபோனார். உடனே அகவுண்ட்ஸ் க்ளோஸ்பண்ணிப் பார்த்தோம், நாம் வாங்கின கடனுக்கும் அவர் வைத்த ஆஸ்திக்கும் சரியாய்ப் போய்விட்டது.

குசும்பாமேஸ்டர்.—எங்கள் பாதர் மூன்றுலட்சம் வைத்துவிட்டு இறந்துபோனார். நானதையெல்லாம் காசிப்புடைவைகளையும் மதுரைப்புடைவைகளையு மின்னும் பல டம்ப சரக்குகளையும் வாங்கித் தாசிகளுக்குக் கொடுத்து, அவர் நேசம் சம்பாதித்து பைசல் பண்ணிவிட்டு எங்கள் தகப்பனார் தலை திவசத்திற்கே கடன் வாங்கினேன். நானென்ன கெட்டுப்போனது. செடி வைத்தவன் தண்ணீர் வார்க்காமற்போவானா!

ஸண்டேமேஸ்டர்.— அண்ணை, தாசிகளென்று சொல்லப்பட்ட பூலோக தெய்வப்பெண்களையடைந்து அவரின்பத்தை யநுபவிக்க,

விருத்தம்.

குடிகெடுங் கடன்க ளீயுங் குஜராத்தி பேட்டை தன்னில்
திடமுடன் டிஸ்கவுண்ட் செய்து தீர்த்திட மணியில் லாமல்

கபேபிடி யுடனே வாரண்ட் காரரும் வருதல் கேட்டு
ஜடுதியாய்க் கிராதி போட்டு ஸண்டேமேஸ் டருமாய் விட்டேன்.

ஆயினும் பேட் யாரைத்தான்விட்டது. பரமசிவனே சனி பகவானுக்குப் பயந்து சாக்கடைக்குள்ளே பதுங்கினாரே தெரியாதா? ஆனால் நானவரைப்போற் கேவலங் கெட்டுப்போகவில்லை. நான் சவுக்கியமாய் வீட்டிலிருந்து ஞாயிற்றுக்கிழமை தோறும் உங்களெல்லோரையும் பார்த்துக்கொண்டு வருகிறேனே, இதற்கு நீங்களெனக்கு கெரிடிட் கொடுக்கவேண்டாமா?

பத்தாயிமேஸ்டர்.—அட போவோய் எங்கள் பாட்டனார் கப்பல் துபாசியாயிருந்து லட்சம் லட்சமாய்ச் சம்பாதிச்சார். அதையெல்லாம் எங்கள் தகப்பனாகிய பிப்பாய்க் குடியரும் அவர் தம்பியராகிய குளக்குடியரும் ஏரிக்குடியருமிரண்டு மூன்று வருஷத்தில் சாப்பிடும்போது குழம்பு ரச மிதுகளுக்குப் பதிலாக சாராயத்தையே விட்டுக்கொண்டு பைசல் செய்து வயிறுவெடித்துச் செத்துப்போனார்கள். அவர்கள் வைத்துப்போன மிகுதியை யவர்கள் பேர்போகாமல் நான் பத்தாயி சாராயத்திற்கும் தாசிகளுக்கும், வினியோகம் பண்ணிக்கொண்டுவருகிறேன். இப்படி யார் செய்வார்?

வெட்டுணி.—நாம் செலவுசெய்ய முன்பின் பார்க்கிறதில்லை. இருந்தாலு மில்லாமற்போனாலு மெப்படியாவது சம்பாதித்துக் கொள்ளுவோம். அண்ணே ஒரு கதைகேளுங்கள், நம்முடைய சிநேகிதர்களாகிய டம்பர், தறிதலை இவர்கள் நமக்குத் திருவொற்றியூரில் விருந்துசொன்னார்கள். அப்போது வண்டி வைத்துக்கொண்டு போகப் பணமில்லை; ஆனால்,

விருத்தம்.

மைடியர் பிரதரே யெங்கள் மதருக்குக் கூந்தல் நீளம்
ஜடிலா யவளுந் தூங்க வறுத்ததை விற்று நானும்
மைடிலோர் லேடி யாக ஜட்காவி லேறிக் கொண்டே
ஒய்டான ரோட்டின்மீதி லுல்லாச மாகப் போனேன்.

இடிமுழுங்கி.—அண்ணே யெங்கள் பெரியோர்கள் கவர்னர் துபாசியாயிருந்து கவர்னர்தோட்டத்திற் செய்யப்பட்ட பாலுக்குப் பதினாயிரமாய்ச் சம்பாதித்தார்கள். நான் பத்து வயதுமுதல் இந்தப்பணத்தைச் செலவழித்துக்கொண்டு வசியம் உச்சாடனம் முதலிய மந்திரங்களைக்கற்று மிகவுங்

கெட்டிக்காரனுய்த் தாசிகளை பயக்கிக்கொண்டு வருகிறேன். நமக்கு மெத்த வேண்டியவளாகிய மின்னல்கொடி யென்னப் பட்ட தாசியோடு மேல்மெத்தைமீது ஒருநாள் உல்லாசமாய்த் திரிந்துகொண்டிருந்தேன். அப்போது இடியிடித்தது. அவளதைக்கண்டு பயந்தென்னைக் கட்டிக்கொண்டாள்; உடனே யந்த இடியை யென் மந்திரபலத்தால் விழுங்கிவிட்டேன். அப்பொழுதவள் மெத்த ஆச்சரியப்பட்டு ஆகா! நான் மின்னல்கொடி, நீங்களிடிமுழுங்கி யென்ருள். அதுமுதல் லெனக்கிந்தப் பேர். இப்படி யாருக்குக் கிடைக்கும்?

விசுவாசகாதகன்.—அண்ணுத்தைகளே, நாம் வீண்காலக்ஷேபம் பண்ணக்கூடாது; நம்முடைய வாழ்நாள் கொஞ்சம்; நல்ல பிளெஷர்களனேகம். அடே சட்பட் (ஸார்) அடே படீல் (ஸார்) கார்ட்ஸ்பாக்கிக் கொண்டுவா; அடே அதுவேண்டாம், சொக்கட்டான் கொண்டுவா; சே அதுவேண்டாம், சதுரங்கங் கொண்டுவா; அடே அதுவேண்டாம், பிலியார்டு டேபில் கொண்டுவா; சே இதெல்லாம் வேண்டாம். இப்பொழுது நமக்கு வீண்தொந்தரை வேண்டியதில்லை. நல்ல திருச்சினுப்பள்ளி மணிலாசுருட்டுக் கொண்டுவா; அடே சட்பட் நீ ஒருபுட்டி மதிரா ஒயின் கொண்டுவா; அடே படீல் நேரமாய்விட்டது; நம்முடைய ஷோக் சுந்தரம், மத்தாப்பு சுந்தரமாகிய இரண்டு லேடிகளையும் சீக்கிரமாய்ப் பாட்டுக்கச்சேரிக்கு வரச்சொல்.

படீல்.—ஆகா! அப்படியே. (பின்ஞல்போய் நாக்கைநீட்டிக் காலைத் தூக்கிக் கையால் குத்துகிறவனைப்போ லபிநயித்து மேடைவிட்டு நீங்குகிருன். சற்றுப் பொறுத்து ஷோக்சுந்தரம், மத்தாப்புசுந்தரம் என்னும் இரண்டு தாசிகளும் வருகிருர்கள். அவர்கள் பின்ஞல் திருவேங்கிடத்தானும் பாவாடைஜித்தரும் தம்புரு எடுத்துக்கொண்டு வருகிருர்கள். தாசிகள் இருவரும் விசுவாசகாதகனைக் கண்டு கும்பிடுகின்றனர்.)

விசுவாசகாதகன்.—வெல் நீங்கள் நமக்குக் கும்பிடவேண்டுமா? உட்காருங்கள்; உங்களைப் பார்த்தவுடனே இரண்டு சந்திரனைப்பார்த்த சந்திரகாந்தங்க ளெப்படி யுருகுமோ அப்படி

எங்கள் மனமுருகிப்போகிறது. வெல் அண்ணுத்தைகளே, நீங்களென்ன சொல்லுகிறீர்கள்.

எல்லோரும்—(சுருட்டுகளைக் கடைவிரலாற் பிடித்துக்கொண்டு) ஓ யஸ், ஓ யஸ், கொயிட்ரைட், வெரிகிளாட், ஆ! ஆ! ஆ! ஓய் திருவேங்கடத்தானு நீவு இத்தனைநா ளெங்கே போயுண்டிவி.

திருவேங்கடத்தானு.—எக்கடன்னடே! நேநு, கூரத்தாழ்வாரு, எம்பெருமானுரு, திருவரங்கத்தானு, ஆளவந்தாரு, மேமந்தா திருமங்கையாள்வாரு திருநட்சத்திர திருகைங்கரி யானிகி திருமிசிகி போயுண்டிமி; அக்கட மதுரகவி செட்டிகாரு, அப்பாய்நாயுடுகாரு, வீண்ளந்தா ஒச்சியுண்டிரி; மஞ்சி மஞ்சி அம்மாயிலு ஒச்சியுண்டிரி. ஆ! ஆ! ஈசாரி உச்சவம் எந்த வைபவங்காஜரிகிந்தி. ஆ சாத்துமுறலகேமி. பிரசாதாலகேமி, கறியாமுதுலகேமி, அந்தா போக்கியங் கான யுண்ணிந்தி. ஆ! ஆ! நேனு செட்டிகாரு நாயுடுகாரு மேமந்தா கோவில பந்தலிலோ கேளீவிலாசங்கா பாடுதா கிடுதா உண்டகா தேவரா மிகியாபகமே உண்ணிந்தி.

இடிமுழுங்கி.—ஓய் ஓய், முழுப் பூசுணிக்காயைச் சோற்றோடு மறைக்கிறையே? அண்ணுத்தைகளே இந்த ஐயர் வெகு லையர்.

விருத்தம்.

பாம்பரை யான நல்ல பரத்தையர் தம்மை நாமும்
விரும்பியே சுகித்தி ருக்க மேனியின் தளுக்குக் கேங்கிக்
கரும்பென நினைத்துச் சென்று கைப்பண மிழந்த தோடு
திரும்புதற் கரிய நோயாற் சீர்குலைந் திட்டா னண்ணே.

விசுவாசகாதகன்.—ஆ! ஆ! ஆ! என்னவோய் அய்யவாரு பலத்த மூட்டை சம்பாதித்துக்கொண்டாற்போலிருக்கிறது. உச்சவத்துக்குப் போயுண்டிவோ, அம்மன் தரிசனம் அயிந்தா, பலமா வரங்கொடுத்தாற்போ லிருக்கிறது.

திருவேங்கடத்தானு.—(புன் சிரிப்போடு வாய்புதைத்து) ஓரே அப்பா, நீ யில்லு பங்காருகானு, ஏகோட்லோ படிதேனு பட வச்சுனு; நீ கோட்லோ படிதே டமாய்பெட்டி கொட்டிஞ்சே வாடாயனே.

விசுவாசகாதகன்.— ஓய் பாவாடை ஜித்தரே, நீர் நம்முடைய ஷோக்சுந்தரம் மத்தாப்புசுந்தரம் முதலிய கண்ணியமான லேடிகளுக்கெல்லாம் பாவாடை ரவிக்கை முதலிய ஆடைகளைத் தோய்த்தும் மஞ்சள் முதலிய வஸ்துக்களை யரைத்துங்கொடுத்துக் கணிகைத் திருப்பணிசெய்து வருகிறீரா?

பாவாடைஜித்தர்.—அப்பனே, நமக்கதைப்பற்றி யெல்லா மாக வேண்டியதென்ன? திருச்சிற்றம்பல முடையானாகிய நம்முடைய தேவி னடியார்களுக்கு நாமடியோம்; 'மனத்திடத் தழுக்குறாத மவுனயோகஞானிகள் தனத்திடத்திருக்கினும் மனத்திடத்தழுக்குறார்.'

நமக்குத் தோப்பாசாமி, தாதபரதேசி, சட்டிப்பரதேசி, எருக்கம்பால் ஜித்தர், மாயாண்டிசாமியார், மஸ்தான் சாயபு, இந்த நாதாக்களுடைய அநுக்கிரகம் கொஞ்சமுண்டு. அஞ்சரைமாற்றை யெட்டரை மாற்றுக்குவேன். கொஞ்சம் பஞ்சீகரணமும் போடத்தெரியும். பொதியமலைக் காரைக்காட்டாயியும் நானும் சிதம்பரத்தில் பிட்சாடன மடத்தில் வெகுநாள் தருமகாரியம் பார்த்துக்கொண்டிருந்தோம். எப்பவாவது போகர் எங்கள் கனவிலே வருகிறதுண்டு. அப்பனே, அல்லாமிந்தச் சாண் கும்பிக்குத்தான்.

இடிமுழுங்கி.—ஓய் பாவாடைஜித்தரே, உமக்கு பொந்தியோடு கைலாசங் கொடுக்கும்படி நந்திதேவருக்கு நாம் டிலேகிராப் அனுப்பிக்கிறோம். நீர் பயப்படாதேயும், முந்தா நாள் சொன்ன பாட்டைச் சற்றுச் சொல்லும்.

பாவாடைஜித்தர்.—ஆ! ஆ! அப்படியே. தில்லையில்தானே திருவாசகம் படிக்கவேண்டும்.

கேளப்பா புகையிலையே தருப்பையாகுங்
கெணிதமுட னதைச்சுருட்டிப் பிடிக்கவல்லோர்
கோளப்பா மெய்யான யாகஞ்செய்வோர்
குடிப்பதற்கு நலமான வொயின்களைத்தான்
காளப்பா ஜித்தரெல்லா மமுதமென்றார்
கனமான பராசத்தி ரூபமென்றார்
வாளப்பா வேசையரின் மனைகளைத்தான்
வளமான சுவர்க்கமென்று வாழ்த்தினாரே.

ஆரப்பா விசனுண்மை யறியப்போறூர்
அழகான போகரிஷி கடாட்சத்தாலே
ஏரப்பா வகத்தியருக் குரைத்துவிட்டா
ரிகழாமல் தன்வந்திரி யதையுங்கொண்டார்
பாரப்பா வவர்சொல்லப் பத்தியோடு
பாவாடை ஜித்தரிதைப் பரிவாய்க்கொண்டே
ஓரப்பா வுலகத்தி லுள்ளமக்க
ளுய்யவே யுரைத்துவிட்டா ருவகையோடே.
ஓடப்பா முப்பத்து மூன்றுகோடி
யுடலான தேவரிதைக் காணமாட்டார்
நாடப்பா கண்டவரோ டிந்தவுண்மை
நவின்றவர்க்குத் தொலையாத பாவமுண்டு
மாடப்பா வுலகமெலா மளிக்குமாறு
மகத்தான குப்பிக்குள் சமைந்தகன்னி
ஆடப்பா மகமாயி மீதிலாணை
அரனாணை யரியாணை யறைந்திட்டேனே.

இடிமுழுங்கி.—ஓய் பாவாடை ஜித்தரே, சிவமார்க்கம் சொல்லும்.

பாவாடைஜித்தர்.—ஆகா !

விருத்தம்.

பரசொத்தைப் பாம்பாகப் பார்க்கவேண்டும்
பாவையரைக் கனவினிலும் நினைக்கொணுது
சிரமுழுதுஞ் சடைதரித்துத் தேகமெங்கும்
திங்களொளி யுற்றதெனத் திருநீ றிட்டுப்
பரிவுடனே யுருத்திராட்சத் தாவடங்கள்
பாதாதி கேசமெங்குந் துலங்கப்பூண்டு
அரவுபுன லங்கியுமை பொலியுந்தேவை
யரகரா வென்றுதொழு தேத்துவாயே.

திருவேங்கடத்தானு.—ஓரே போரா பாஷாண்டி முண்டாகொடுகா, மீ சிவுடு கண்ணனுகு மனமுடிரா, ப்ரம்ம கொடுகுரா.

பாவாடைஜித்தர்.—அடபோடா தாதப்பயலே, சிவபெருமானல்லவாடா மண்ணைத்தின்ற கண்ணனுக்குச் சங்குசக்கரங் கொடுத்தது. உங்கள் பெருமாள் மோகினிவேஷத்திற் கைலைப்பிரானுக்குப் பெண்சாதிடா.

திருவேங்கடத்தானு.— ஓரே லோகாராத் புண்ணி யட்ல செப்புகுரா.

பாவாடைஜீத்தர்.—அடே திரிபுர மெரித்தவரை யப்படி சொல்லாதேடா.

விசுவாசகாதகன்.—ஓய் ஐயரே, ஓய் ஜீத்தரே, நீங்கள் டாம் டர்ட்டி பூல்ஸ், சுத்த மடையர்கள். உங்கள் வேதம் புராணமெல்லாம் எட்டுச் சுரைக்காய், கட்டுக்கதை. கடவுளேது கிடவுளேது. பார்த்தால் கண்தெரியும். படித்தால் தூக்கம் வரும். இதைவிட நீங்கள் கண்டதென்ன? என்ன அண்ணுத்தைகளே!

எல்லாரும்.—(தலையை யசக்கிக்கொண்டு) ஓயஸ் ஓயஸ் வெரிரைட் வெரிரைட்.

பாவாடைஜீத்தர்.—எனக்கேதப்பனே யிதெல்லாம், நான் படிக்கிறது தேவாரம்,* இடிக்கிறது சிவன்கோவிலாச்சே. எனக்குத் தேவடியாளே யாவடையாள்; மாஜனமே போஜனம். சிவவேடமே தவவேடமென்று கெட்டுப் போகிறவர்களை மயக்கிப் பணஞ்சம்பாதிக்க இந்த வேடம்.

திருவேங்கடத்தானு.—பரி நேனுந்நு அந்ததா - ஓரே பாவாடா, மனமித்தரு ஓகே குண்ட நண்டராகாயனுரா (சித்தரைக் கட்டியணைத்துக்கொண்டு.) ஆ! ஆ! ஆ!.

விசுவாசகாதகன்.—வெல் ஷோக், வெல் மத்தாப்பு, இந்த ஆட்டமென்னமாயிருக்கிறது?

ஷோக்சுந்தரம்.—ஆ! என்னபோங்க, செந்தாமரைக்குச் சிவப்பு வைக்கவேண்டுமா, மல்லிகைக்குச் சந்தனம் பூசவேண்டுமா, முத்தைச் சுத்திசெய்யவேண்டுமா, சூரியனைத் துடைக்க வேண்டுமா, உங்கள் கல்விக்குஞ் சாமர்த்தியத்துக்கு மொருவர் சொல்லவேண்டுமா!

விசுவாசகாதகன்.—ஆகா! அண்ணே தாசிகளெவ்வளவு புத்திசாலிகள்! நல்லது ஷோக், சொகுசான ஒரு கொச்சகம் சொல் பார்ப்போம்.

ஷோக்சுந்தரம்.—பிரபுக்களெப்போது உத்தரவு செய்வார்களென்றல்லவோ நாங்கள் காத்திருக்கிறோம்.

கொச்சகம்.

வாடி யென்றும் போடி யென்றும் மானே யொருமுத்தந்
தாடி யென்றுஞ் சொல்வ தற்குத் தாரா ளமேயன்றி
நாடி யுமை யடுத்த நங்கை யருக் கிங்கிதமாய்த்
தேடிப் பொருளளிக்குஞ் சிந்தையிலே யென்றுரையே.

எல்லோரும்.—ஆ! ஆ! ஆ!

விசுவாசகாதகன்.—பிரதர்களே, இப்போது மதிராவஸியிருக்கப் பட்ட பிரபுக்கள் பணந்தேடிப் பெண்டு பிள்ளைகளுக்குக் கொடுக்கத் தலைப்படுகிறார்களேயன்றி தாசிகளுக்கு யார் கொடுக்கிறார்கள்.

திருவேங்கடத்தானு.— இப்படி தாசனுகூடா நிண்டாலேதண்டி.

பாவாடைஜீத்தர்.—அடபோடா உனக் கென்னதெரியும், புற்றி லிருந்து ஈசல் பெரும்போக்குப் புறப்பட்டாற்போல் நாட்டி லுள்ள தாசிகளெல்லாம் பட்டணம் வந்துவிட்டார்கள். ஒரு கணக்குச் சொல்லுகிறேன் கேள்; முன்னே யொரு தேவடி யாளை வைத்துக்கொண்டிருந்தவ னிப்போது நூறுபேரை வைத்துக்கொண்டாலு மனைகள் காலியாயிருப்பார்கள். இவர்களெல்லா மெப்படிப்பிழைக்கிறார்களோ அது ஈஸ்வர னுக்கே வெளிச்சம்.

ஷோக்சுந்தரம்.—ஆகா ஜீத்தரே, அடிச்சுநிமிர்த்தினுல் மொத் தரே, வவ்வால் ஒருவாயாலேயே எல்லாக்காரியங்களையும் நடத்துவதைப்போல் தாசி நல்லவளென்றுங் கெட்டவ ளென்றுஞ் சொன்னீரே போதும் போதும்; உம்முடைய வுறவில் வேவலைதக்காட்டிலும் ஒரு கட்டுவிறகில் வேகலாம்.

விசுவாசகாதகன்.—வெல் ஜீத்தரே, முழுவெள்ளத்தின்மேல் முழ வெள்ளம் போவதைப்போல் வேசையரோடு சினேகம்பண் ணிய நீர் அவர்களைத் தூஷிக்கிறது யமலோகத்திற்குப்போ னவன் இன்னு மெத்தனைநாள் பிழைத்திருப்பேனென்று கணக்கிடுவதைப்போ லிருக்கிறது. நெவர்மயிண்டு, வெல் ஷோக்சுந்தரம், நீயொரு நல்லபதம் சொல் பார்ப்போம்; நோ ஷேம்-வெட்கப்படவேண்டாம்.

ஷோக்சுந்தரம்.—(கலியாணிராகம் சற்றே யாலாபனைசெய்து.)

பதம்-இராகம்-கலியாணி ; தாளம்-சாபு.

பல்லவி.

பேச்சில்பிரபுக்களே பின்னையொன்றுமில்லை பேசக்கூச்சமில்லையோ.

அநுபல்லவி.

ஆச்சு போச்சுதென்று ஆடம்பரமாக
அட்டகாசமன்றி துட்டுக்குக் கதியில்லை. (பேச்சில்)

சரணங்கள்.

1. கட்டிய பெண்டாட்டிக் கெட்டுப்பங்காகவே
காதல்மிக வுங்கள் மீதில் வைத்தஎன்னை
தட்டிப் பூசுற்றுநீர் சரச வார்த்தைகளாலே
தாசியு மெங்கேனும் மோசம்போவாளோ போம்போம் (பேச்சில்)

2. குப்பை யுயர்ந்தது கோபுரந் தாழ்ந்தது
கூழுக் கில்லாதவர் குடித்தல் பாயசமாச்சு
துப்பற்ற நானுங்கள் சுவாதீன மானபின்
துரும்புக்குங் கதியில்லைச் சொகுசாய்ப்பேசுநீர் போம்போம். (பேச்)

3. கோடி கோடியாகக் கொடுத்தவரைப் போலக்
கொடுத்தோங் கொடுத்தோமென் றடுத்தடுத் துரைக்கிறீர்
நீட்டு வார்த்தையன்றி நீர்கொடுத்த தெல்லாம்
நேர்ந்த மனதோடெம்மைச் சேர்ந்ததற்காமோ போம்போம்.(பேச்சில்)

விசுவாசகாதகன்.—ஆ! ஆ! ஆ! பிரதர்களே, அண்ணாத்தைகளே, பதத்தால் நம்மை யுதைத்தாற்போ லிருக்கிறதே ; ஓ, டாம் இனிமேல் நாம் சும்மாயிருக்கக்கூடாது ; எப்படியாவது மணி கெட்பண்ணவேண்டும். காசி தாசி, டிரேஷர் பிளேஷர்; பணமில்லாதவன் பிணம் ; மேலும்,

விருத்தம்.

புவியினி லுத்தியோகம் புருஷலட் சணமாமென்பார்
அவரவ ருத்தியோகத்தி லமர்ந்துளர் நாமுநந்தங்
கவுரவ மதற்குத்தக்க கணிசவுத்தி யோகமின்றிச்
சவிசார மில்லாப்பேச்சில் டயத்தையும் போக்கலாமோ.

ஸண்டேமேஸ்டர்.—அண்ணே, 'திரைகடலோடியுந் திரவியந் தே'டென்று ஔவை சொன்னாள், அதனோடு 'தேடியபொருளைத் தேவடியாட் கிடு' வென்பதைச் சேர்த்துக்கொண்டால் பின்னும் விசேஷமாய்விடுகிறது - ஓயஸ், நாம் உடனே ஆலோசனை செய்யவேண்டும். ஓய் ஜித்தரே, இப்பொழுது சென்னைப் பட்டணத்திற் கந்தாயங்க ளெப்படியிருக்கிறது காணும்?

பாவாடைஜீத்தர்.—அப்பனே, என்னபோ, இப்போ எங்கேபார்த்தாலும் காலேஜிக ளேற்பட்டுப்போச்சுது; சிறு பிள்ளைகளெல்லாம் வாசித்துத் தெளிந்துபோனார்கள். தேவடியாளென்றால் சீச்சீ யென்கிறார்கள். சைவமதமென்றால் சட்போவென்கிறார்கள். நாமடியோமென்றால் நான்ஸென்ஸ் என்கிறார்கள். எதிர்த்துப்பேசினால் யூபிடாமென்கிறார்கள். எந்த வெளியைப் பார்த்தாலும் மந்தைவெளியாயிருக்கிறது; கலிமிகுந்துபோச்சு காலங்கெட்டுப்போச்சு!

திருவேங்கடத்தானு.—ஓரே பாவாடா, நேனு தூரானிதொண்ணளலோ தூரே கப்ப; நாகு வெண்ட்ரிக்கு வெய்விஷயாலு தெலுசுனு; ஈபட்டணம் சங்கதியந்தா நாஜோபிலோவுந்தி, தெரிஸ்தே தெல்லவாருனு, மூஸ்தே பொத்துபோனு; இப்புடுதாரா சகிலேவிபிட்டலு காசீலகு நிண்டா இச்சேதி. சீவில் ஸர்வீசுகு போதானனி றாகலு கட்டிவேசி அம்மாயுலிண்ட்லோ தலகுட்ட தீசி பெட்டிவேசி மாட்லாடுதாரு. சாயந்திரமயிதே ஸங்கலோ புஸ்தகாலு பெட்டுகொனி இண்டிகி வஸ்தாரு. ஏமி நாயனாஅண்டே எக்கட நேடிகி நிண்டா பாடாலண்டாரு. நின்ன ஒக்ஷாப்தக்கிர பீடன்வேசுகொனி வச்சினாடே வாடு அடுவண்டிவாடுதா, மஞ்சி கொவ்வினமேக! கொட்டிதே கோபுரமந்தபொடுகு வெய்யவச்சுனு.

பாவாடைஜீத்தர்.—அடே நேற்றுக் குச்சிலிக் கடையண்டை இரண்டு பைகோமட்டங்கள் கட்டிய சாரட்டுபோட்டுக் கொண்டு வந்தானே அவனைப் பிடிக்கலாகாதா?

திருவேங்கடத்தானு.—ஓரே வாடு அப்ப இங்காசாவலேது, அயிதே பில்லகாயா புத்திசாலி மனம்செப்பிதே விநானு.

இடிமுழுங்கி.—போன வெள்ளிக்கிழமை நம்மோடுவந்து நவக்கிரகம் சுற்றினானே அவனைப் பிடிக்கலாகாதா; அவன் கையிலுள்ள காப்பு கொலுசை உருக்கினால் பதினாயிரம் தாசிகளுக்குக் கொடுக்கலாமே.

ஸண்டேமாஸ்டர்.—போன சனிக்கிழமை காசிதுப்பட்டா போட்டுக்கொண்டு திருவல்லிக்கேணிக்கு வந்திருந்தானே யவனைப் பிடிக்கலாகாதா.

விசுவாசகாதகன்.—ஒ டாம் இதெல்லாம் வேண்டாம் காணும், தேடினாலுஞ் சிந்தாமணியைத் தேடவேண்டும்; கண்ட மொட்டைப்பசகளை யெல்லாம் தேடுவதிற் பிரயோசன மென்ன? நேற்று சாயந்திரம் பீபில்ஸ்பார்க்கில் பார்த் தோமே அவன் யார்? அவனை நான் நன்றாய் கவனிக்கவில்லை. அவன் வண்டிகுதிரை சேராப்தாரர்கள், பியுன்கள், இவை களைப் பார்த்தால் யாரோ ரொம்ப பெரியமனுஷன் பிள்ளை போலிருக்கிறது.

பாவாடைஜீத்தர்.—அடா அப்பா! அப்பனே அது தீண்டா விளக்கு; அந்த வஸ்து பெரிய ஜமீன்தாரருடைய பிள்ளை; படிப்பில் பாரதி; ஆனால் மெத்த சிறுபிள்ளை.

திருவேங்கடத்தானு.—தேவரா அயிதே வானிகி பெட்டேதிதானே தாம்பூலம். (மூக்குமேல் கைவைத்து) ஆருடமுன்னு பாகானே யுந்தி. வத்தி பெட்டிதிரண்டே மண்டுகொனே தானிகி சந் தேகமுலேது; உடையவரு கிருபஜேசுரு.

விசுவாசகாதகன்.—ஓ டாம் நீ கெட்ட பேயூல்; இது அவ்வளவு பெரிதல்ல; நாமெத்தனையோ மேலான காரியங்களை யெல் லாம் செய்திருக்கிறோம். எல்லாம் போடுகிற வலையினு மிழுக்கிற இழுப்பினு மிருக்கிறது. அவனும் நானும் ஒரே ஸ்கூலில் வாசித்தோம். அவன் காலேஜிக்குப் போனான். நான் கான்குபயின் வீட்டுக்கு வந்துவிட்டேன். நீங்களெல் லாம் நான் சொல்லுகிறபடி கேட்டால்,

தரு. இராகம் - கமாஸ். தாளம்-ஆதி.

பல்லவி.

பார்க்கிறேன்பாரும் ஒருகை - அதிகுணசம்பன்னனெனினும்
பார்க்கிறேன்பாரும் ஒருகை.

அனுபல்லவி.

சேர்க்கைவாசனையாற் சிறந்தவனாயினும்
பார்க்கப்போகிறீ ரவன் பாட்டையுநீங்களே. (பார்க்கி)

சரணங்கள்.

1. பாசபண்ணவனெனினும்-பல
பண்டிதர்நேசத்தை யடைந்தவனெனினும்
ஆசையுள்ளவன்போ லவன்முன்நடித்த இஸ்கூல்
நேசம்பாராட்டியே நிமிஷத்திலேகொடுக்க. (பார்க்கி)

2. காடுமலைகள்தேடி-கடுங்
காமக்குரோதம்விட்ட முனிகளெலாம்
வாடிமனதிளகி வனிதையர்வலைப்பட்டுக்
கோடிகோடியிந்தக் குவலயத்தழிந்தவர். (பார்க்கி)

3. காளைகளெத்தனைபேர்-நானுங்
காட்டும்வழியிற்பட்டு மாட்டிக்கொண்டழிந்தவர்
நாளைப்பாருமிந்த நாவினாலெற்றியந்த
ஆளைமயக்கிநமக் கடிமையாக்கிக்கொள. (பார்க்கி)



# அங்கம்—III

## களம்—I

இடம்: பிரதாபசந்திரன் வீடு.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், விசுவாசகாதகன், பாவாடைஜித்தர், திருவேங்கடத்தானு, குணலயர், நிபுணர், சிப்பாய் முதலியோர்.

[விசுவாசகாதகன் பிரதாபசந்திரன் வீட்டுக்கு வருகிறான். வீட்டு வாயிலில் சிப்பாய் நிற்கிறான்.]

சிப்பாய்.—(விசுவாசகாதகனை நோக்கி சலாம் செய்து) ராம், ராம் மஹாராஜ் !

விசுவாசகாதகன்.—

விருத்தம்.

ஆரடா யெஜமான்வீட்டி னண்டையி லிடைவிடாமல்
கார்டுசெய் சிப்பாய்வாடா கடுகியே சென்றுவுந்தன்
லார்டான பிரதாபசந்திர லட்சுமி புத்திரற்கிக்
கார்டையுங் கொடுத்துநீதான் கவனமாய்ப் பதில்சொல்வாயே.

சிப்பாய்.—(உள்ளே சென்று திரும்பி வந்து, விசுவாசகாதகனை நோக்கி) உள்ளே வரச்சொன்னாங்கோ மஹாராஜ்.

(விசுவாசகாதகன் உள்ளே போகிறான்.)

பிரதாபசந்திரன்.—(விசுவாசகாதகனை நோக்கி) அலோ கம்-கம்-வெகு நாளாச்சுது, எல்லோரும் உட்காருங்கள். இவர்கள் யார் ?

விசுவாசகாதகன்.—இவர் சுத்த சைவர், மகா சித்துபுருஷர், இவர் ரொம்பவும் விஷ்ணுபக்தர் - இவர்கள் மகா விற்பன்னாள், மா சத்தியசந்தாள், மகா பரிசுத்தாள் இவர்களுக் கிணையானவர்களை நானெங்கும் பார்க்கவில்லை.

பாவாடைஜித்தர்.—(விரலினால் ருத்திராட்சத்தைத் தள்ளிக்கொண்டு,) சிவ, சிவ, சிவ-அப்பனே யுன்னுடைய கீர்த்தி சூரியனைப்போ லுலகமெங்கும் பிரகாசிக்கிறது. நீ சிறு பிள்ளையானாலும் திரிலோகமெங்கு முன்னுடைய பேச்சாயிருக்கிறது. இந்தக்

காது கேட்டுக் களிப்புற்றது. நீமாத்திரம் சந்தோஷப்பட்டையே யென்று நேத்திர மதனோடு சண்டை செய்துகொண்டிருந்தது. இன்றைக் கந்தச் சண்டை முடிந்தது, சந்தோஷமாச்சுது.

நீ - வடமேருவைப்போல் வாழ்கவெந்நாளும்
திடமுடன்சித்தரைச் சேர்கவெந்நாளும்
அடைகசுகங்க ளனைத்துமெந்நாளும்
சடையனதருளாற் றழைக்கவெந்நாளும்.

பிரதாபசந்திரன்.—ஆ! ஆ! மெத்த சந்தோஷம், உங்களைப்பார்த்தால் சிவபெருமானைக் கண்டதுபோலிருக்கிறது. நீங்களெந்தெந்ததேசத்தைச் சுற்றிப் பார்த்திருக்கிறீர்கள்.

பாவாடைஜீத்தர்.—பிறந்தது சிவசிதம்பரம், வளர்ந்தது திருவாவடுதுறை, படித்தது சீர்காழி, தீக்ஷை திருநெல்வேலிச்சீமை, அப்புறம் பொதியமலைக்குப்போய் அங்கேயிருக்கிற நாதாக்களண்டை கொஞ்சங் கிரகித்தேன். வடகயிலாயத்துக்கும் போயிட்டுவந்தேன், இந்த நாய்செய்த திவ்வளவுதான்.

பிரதாபசந்திரன்.—வடகயிலாயமெங்கே? நீங்களெங்கே?

பாவாடைஜீத்தர்.—அப்பனே! அந்த வெள்ளைக்கார னேட்டிலெழுதியிருப்பதை நம்பாதே; இவன் மேருவைப் பார்த்தானா? சத்தகுலாசலங்களைக் கண்டானா? அட்டகஜங்களைப் பார்த்தானா? அனுமார்பார்த்த வடசமுத்திரத்தைக் கண்டானா? என்னபோ-விந்தியமலைக்கு வடக்கே பெரிய பெரிய கிரீடாதிபதிக ளிருக்கிறார்கள். அவர்களண்டை இவன் தலைகாட்டலாமா?

பிரதாபசந்திரன்.—ஆ! ஆ! அப்படியா! நீங்கள் வெகுதூரம் பார்த்திருக்கிறீர்கள்.

திருவேங்கடத்தானு—மகாபிரபு மீ தர்சனுனிகி பகுதினுலுகா காசுகொனியுண்டினி; நேடிகிதா நா ஜன்மம் சபலமயிந்தி (புஷ்பமு மெலிமிச்சம்பழமுங் கொடுத்தல்.) மகாபிரபு, மாதண்ட்ரி காறு மகா பண்டிதுலு, நாலாயிரமுந்து வாரி நாலிகலோனே திருவவதாரஞ்சேசிந்தி, வாரிகி உடையவரு பிரத்தியட்சம், வாரு காலஞ்சேசினாறு, நேனேயிகொண்டினி கொட்டேடப்புடு சிந்தினதும்மு, வித்திய வாரியநுக்கிரகம். காபாடேதி மீபாரம், மீரு பல்லாண்டு பல்லாண்டுகா பாகா வுண்டவலே.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

ச்னேகரே நல்லதிந்தச் சிவனடியாரும் விஷ்ணு
பாகவதரையும் பார்க்கப் பரமசந் தோஷமாச்சு
போகவேண் டியதேயில்லை புண்ணியத் தலங்களுக்கு
ஏகசித் தத்தோடிந்த இருவரைப் பார்த்திட்டாலே.

என்னஸார் உங்களைப் பார்த்து வெகுநாளாச்சுது;

விசுவாசகாதகன். — என்னபோங்க! இந்தப்பக்கத்தில் மிட்டா வேலை, அந்தப்பக்கத்தி லாபீசுவேலை, ஒருபக்கத்தில் கண்ட் ராக்டுவேலை, இன்னொருபக்கம் ஹவுஸ்வேலை, மேலும் சில பிரபுக்களுக்குக் கடன்கொடுத்திருக்கிறேன். பட்டணத்துப் பிரபுக்கள் சங்கதி யுங்களுக்குத் தெரியாதா! இதோ என்று லாறுமாசம்பிடிக்கும். அவர்களிடத்தில் தண்டலுக்குப் போ வதனாலேயே யிரண்டு மூன்று குதிரை செத்துப்போச்சுது. என்னஸார் காலமிப்படி கெட்டுப்போச்சு; கொடுத்தகட னைக் கொடுக்க மனம் வருகிறதேயில்லை. மேலும் சில சீமைத் துரைகள் ரிடைராய்ப்போகும்போது நம்மிடத்திலுள்ள நம் பிக்கையினால் அவர்கள் சாமான்களை ஒப்புவித்துப்போனார் கள். அதுகளையெல்லா மாக்ஷனில் வைத்துத் தொகையாக் கிக்கொண்டிருந்தேன். ஏனென்றால்,

விருத்தம்.

யுத்தியு னன்றியுள்ள யூரோப்புத் துரைகளுக்கே
எத்தனை செய்திட்டாலு மிம்மையிற் சுகமுண்டாகும்
மத்தமர் நடைகறுப்பு மனிதருக் கென்செய்தாலுஞ்
சுத்தமாய்ப் பயனேயில்லை சொல்வது சத்யமண்ணே.

பிரதாபசந்திரன்.—ஆ! ஆ! ஆ! என்னஸாரிப்படி சொல்லுகிறீர் கள். நம்மவர்களில் எத்தனை பிரபுக்க ளிருக்கிறார்கள். அவர் களி லொருவராவது யூரோப்புத் துரைகளுக்குச் சமானமா யில்லையா?

விசுவாசகாதகன்.—என்ன போங்கஸார், பிரபுத்தனமென்று லெங் கேயிருக்கிறது; நானறிந்து எங்கள் தகப்பனார் கோமளீசு வரன் கோவில் சீனிவாசப்பிள்ளை, தஞ்சாவூர் இராமாஞ்சுலு நாயகர், மணலி சின்னையாமுதலியார், ஏனிகலு வீராசாமி ஐயர், லட்சுமீ நரசிம்மலு செட்டியார், இவர்கள் பிரபுத்

துவத்தைப்பற்றி வெகுவாய்ச் சொல்லுவார், நான் கேட்டு ஆ! அப்படியாவென்று ஆச்சரியப்படுவேன். அப்பேர்க் கொத்த பிரபுக்கள் இப்போ தெங்கே யிருக்கிறார்கள். மேலும்,

விருத்தம்.

சதிடரி டம்பர்கட்கே ஜாஸ்தியாய்க் கடன்களீயும்
மதியிலார் தலைமேற்கையை வைத்தவர் மனமுமிக்க
கொதியுற வின்சால்வெண்டு கோர்ட்டினில் வெளிச்சம்போடும்
கதியிலா மனிதர்க்கெல்லாக் கவுரவப் பிரபுத்வமேதோ.

தரு. இராகம் - கேதாரகவுளம். தாளம்-ஆதி.

பல்லவி.

கண்டுநாளாச்சுதண்ணே - உம்மைநான் - கண்டுநாளாச்சுதண்ணே.

அநுபல்லவி.

பண்டுநா மொன்றாகப் பாடசாலை தன்னில்
படித்து பலகலை முடித்துத் தீமையை
அடித்து நல்வழி பிடித்த பின்னுமை. (கண்டு)

சரணங்கள்.

1. ஈசன் அனுக்கிரகத்தாலிடையில் விட்டுவிடாம லிசைந்தகலைகள்கற்
பாசுகள்பலசெய்தீர் பார்த்தபிரபுக்களெல்லாம் [றே
பாரினில்நிகருமக் காருமிலர்களெனுஞ்
சீருஞ்சிறப்பும்பெரும் பேரும்படைத்தவுமை. (கண்டு)

2. வாக்கில் சரஸ்வதி வாழ்விற் குபேரன்செல்வன் வடிவில் மன்மதரூபம்
நோக்கியருளுடன் நொந்தோர்க்கிரங்கியென்றும்
நூலோர்புகட்டும்பல மேலாமொழுக்கபரி
பாலாபரமகுண சீலாவுந்தனைநான். (கண்டு)

3. ஆமாம்நங் கம்பெனியி லத்தி பூத்தாற்போல அவதரித்தீர் நீரும்
க்ஷேமமாயிருந்தெங்கள் ஸ்நேகமறவீரென்றே
சித்தந்தனிற்பரி சுத்தவுணர்ச்சியுடன்
அத்தன்பதத்தைப்பிரதி நித்தந்துதிக்கும்நானும். (கண்டு)

பிரதாபசந்திரன்.—அது இருக்கட்டும் ஸார்: நீங்கள் காலேஜுக்கு வராமல் நடுவிலேன் விட்டுவிட்டீர்கள்.

விசுவாசகாதகன்.—

தரு. இராகம் - செஞ்சுருட்டி. ஏகதாளம்.

பல்லவி.

எங்களுக்கேனையா வெகுபடிப்பு-(எங்களு)

அநுபல்லவி.

உங்கள்தயவா லென்றென்றைக்கும்
பொங்கும் சம்பதை யுற்றேறிற்கும். (எங்களு)

சரணங்கள்.

1. ஒன்பதுகோடிச் செம்பொன்மோகர்
அன்புடன்வைத்தா ரெங்கள்பாதர். (எங்களு)
2. தோட்டந்துரவிற் பன்னிருகோடி
நாட்டில்வளவாய் வைத்தார்தேடி. (எங்களு)
3. வீடுகள்மிட்டா சாகீவுதபோகம்
ஆடுகள்மாடுக ளுள்ளவநேகம். (எங்களு)
4. பாண்டுகளுடனே கொதுவைப்பத்ரம்
வேண்டியமட்டுள சாவடிசத்ரம். (எங்களு)
5. பீச்சில்மண்டி கிடங்குங்கோடி
கோச்சுகள்வண்டிக ளோடுளகாடி. (எங்களு)
6. செவ்வியசெம்பும் ரவைநகைநட்டும்
ஒவ்வொருகோடியி லுளஅவைமட்டும். (எங்களு)
7. பச்சைகளோடுள பற்பலகற்கள்
மெச்சஇவைகளை யிலையேசொற்கள். (எங்களு)
8. ட்ரேஜரிவ்வள வென்றேயில்லை
லேஜர்அறியவே சுத்தமாயில்லை. (எங்களு)
9. லட்சம்லட்சமாய்ச் செலவானாலும்
அட்சயமாய்வளை யும்மேன்மேலும். (எங்களு)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

மேருவி னளவிற்பொன்னும் வியன்புக ழுடனேயிந்தத்
தாரணி முழுதுந்தாமே சதுரங்க பலமுஞ்சூழ
வீரிய முடனேயாளும் விஜயமன் னவர்களுக்கும்
காரியங் கல்வியின்றிக் கனவிலு முடியாதண்ணே.

விசுவாசகாதகன்.—

ஏடுமே கையுமாக விராப்பகல் வாசித்தோரும்
ஓடெடுத் தலைவரென்றே யுலகமெங் கணும்வழக்காம்
பாடுபட் டேனுவீணாய்ப் பகுத்துப்பண் டிதர்களானோர்
ஓடியுத் தியோகமின்றி யுழல்கிறார் வறுமையாலே.

பாவாடைஜீத்தர்.—அப்பனே! படிப்பிற் பிரயோஜனமில்லை; வேதாந்தத்திற் சொல்லிருப்பதைக் கேள்.

விருத்தம்.

நாடப்பா நவநாடி சித்தர் வார்த்தை
நமனுரை யுதைத்திட்ட சிவனுர் வார்த்தை
மாடப்பா மகமாயி அண்ண னென்றே
வையமெங்கும் பேர்போன மாயன் வார்த்தை
கோடப்பா தாமரையின் பொகுட்டில் வந்த
குணமான நான்முகனுர் சொன்ன வார்த்தை
பாடப்பா படிப்பதனு லொன்று மில்லை
பண்பற்ற சாத்திரங்க ளனைத்துந் தள்ளே
தள்ளப்பா எட்டிலுள்ள கல்வி யெல்லாம்
தாரணியோர் தம்மை மயக்குவதற் கன்றி
கொள்ளப்பா குருபாதஞ் சேர்வ தற்குக்
குணமான வழியொன்றும் போதிக் காதே
வள்ளப்பா சாத்திரமாங் குப்பை தன்னில்
மதியென்னுங் கோழிசென்று கிண்டி மாகில்
விள்ளப்பா வஞ்ஞான மென்னும் பூச்சி
வெளியாகு மன்றிவே கந்தோன் ருதே
தோன்ருத தொல்லுலகந் தோன்று மப்பா
சோம்பல் விட்டுச் சாத்திரத்தைச் சாம்பலாக்கி
சான்ருேர்க ளன்புடனே மேவுந் தவாத
சாந்தமெனுந் தலமதிலே நின்று மேலாய்
வான்ருவி யுற்றபரஞ் சோதி தன்னை
வகையாகக் கண்டுமனங் களிப்புற் றப்பால்
தான்ருேனி தம்பிரானு யுலக மெல்லாம்
தன்வடிவாய்க் கண்டவர்க்கே முத்தி யாமே.

திருவேங்கடத்தானு.—அவுநு சதிவினவாடிகண்டே சாகலவாடு மேனு, எந்தரு சதிவி பேண்ணு குக்குதுந்நாறு, ஆள்வாராது னுநு சதுவுலோ பிரயோஜனமுலேதனி செப்பியுந்நாறு.

பிரதாபசந்திரன்.—என்னஸார்! இந்த இரண்டு மகத்துக்களும் சூறைக்காற்ருேடு சுற்றுந் துரும்பைப்போ லுங்க ளபிப்பிராயப்படியே பேசுகிருர்கள்.

பாவாடைஜீத்தர்.—ஆ! ஆ! ஆ! அப்பனே! சிவ-சிவ-சிவ-சிவ-அப்படியுண்டா! வேதாந்தத்திலிருப்பதை வெளியிட்டேன்.

**திருவேங்கடத்தானு.**—நேற்று நாலாயிரமுலேவுண்டேதி செப்பினுறு.

**விசுவாசகாதகன்.**—

விருத்தம்.

ஈசனு ரருளி னுலே யிரண்டுகண் குளிர வின்று
நேசனே யுன்னைப் பார்த்தேன் நிதியெலா மடைந்தாற் போலப்
பேசநான் நினைத்த தெல்லாம் பேசியே முடித்து விட்டேன்
மாசிலா மணியே யின்னும் மனுவொ டொன்று கேளாய்.

**பிரதாபசந்திரன்.**—அண்ணை நீர் நமக்கு பாலிய சிநேகராயிருக்க மனுவேன், பிரியமாய்ச் சொல்லும்.

**விசுவாசகாதகன்.**—

தரு. இராகம் - தோடி. தாளம் - ஆதி.

பல்லவி.

ஈடேற்றவேண்டுமென்பனே-என்னுசையை-ஈடேற்றவேண்டுமென்பனே
ஈதோர்பெரிதல நீகாமறுமொழி யோதாதருள்செய் விநோதா தயையுடன்
(ஈடேற்ற)

அனுபல்லவி.

நாடேற்றுந் திறமுற்ற நாவலர் புகழ்பெற்ற
நற்குண நிதியென நாடியெ வரும்பற்ற
வீடேற்றும் படிப்புடன் விவகார நூல்கள்கற்ற
விதரண சாலியென் றிதம்பெறப் பலர்சுற்ற
வீசுகந்தமணிந்துவிளங்கிய தேகா-வியப்புறவே
தேசுமிகுந்துதிரண்டிடுவிக்ரம வாகா-சிந்தைமகிழ்ந்து
மாசுஅகன்றசுதேசிகளுக்குப யோகா-மதிப்புடனே
பேசுமுரோப்பியர்நல்வழிகளிலனு போகா-பிரசித்தமாக
மாநிலத்தில்தனி ஞானசித்திதரு
தானமென்னவரு யூனிவர்சிடியில்
கலைகட்-பலகற்-றுளநற்-புலவர்க்-ககமெய்க்-களியுற்றிடு-வெற்றியிலுறை
கனத்தகீர்த்தி துரைமாரிடத்திற் பெற்றவனே
அனைத்துநீயெனக்கு மாதையிஞல் நற்றவனே. (ஈடேற்றவேண்டும்)

1 பாராட்டவேண்டுநண்பனே பாலித்தென் துரை யாலித்தருளுடன்
பாராட்டவேண்டுநண்பனே
பாசமிக்கவுள நேசர்தங்கள்விசு
வாசகம்பெனியு லாசவெந்தனுரை. (பாராட்ட)

பாதுகாத்தருளும் பான்மையேமிகவாய்க்கொண்ட
சாதுசாதுரியசர சண்டப்பிரசண்ட. (பாராட்ட)

பசுங்கதிர்பார்மேவ விசும்பிடையுலாச
மிசைந்தொளிபராவி யசைந்தேகுநிலாவிற்
பராகமதோடு சதாகதிவீச
அராமசராக மிராகமிசைத்திட
பாரோரெல்லா மெச்சுமென்னழகுதோட்டத்திற்சேர
சேரோடெல்லாநண்பருடன்சிந்தைமகிழ்கெம்பீர. (பாராட்ட)

படர்ந்தகொடிபல வுறைந்துமலருட
னடர்ந்துமணமுற நிறைந்துசுரபதி
படைத்துளக்கரு புவித்தலத்தினி
லமைத்ததொத்தி யினிப்புறக்கனி
பண்புமிகுந்திட வுந்தருபைந்தரு விண்புகுமென்று முயர்ந்து சிறந்தனி
பலாதியோடரவிந்த முதலாகுமண
முலாவுரோஜதி கெந்தமுறுபாரிஜாதம்
பற்பல-பொற்பொடு-வற்பமையற்புத-நற்பணி-கற்றுள-சிற்பியர்-கற்பித
பகரொணாதபங்களாவொடும் பொருந்தியுண
சுகமதாகநந்தம் ஸொஸைடிவிருந்துகொள. (பாராட்ட)

கோடிசூரியபிரகாச க்ளோபுலஸ்த்தர்கள்ஷேடு
கோமளவடிவழகு கொண்டபாவைகள்நீடு
தேடிச்சம்பாதித்த திகழும்பிக்சர்களோடு
சிறந்தஸங்கீதகான்ஸர்ட் டெனிசைந்துபாடு
சீதளமாமதி யாரினையேது மிலாத விவேகமு ளாரென வோதிடு
சீர்மைதுரைப்பெண்களுக் கிசைந்துள
நேர்மையுரைப்பண் களைத்தரும்பல
சித்திரப்பியானுவோடு மொத்திடுமார்மோனியமும்
மெய்த்திரமுள்ளோர்கள்நாடு கைத்திறப்பிடில்கள்கிட்டார்
சேரவந்திடுவண்டொலி யொடுதவ
ளாரவிந்தமிருந்து பலிசைதொடு
திருமகள்மருமகளெனுமொருகலைமகள்சுதிநயமுறவதிசயமிகுதிறமொடு
சிவந்ததிருமல ருவந்தகடவுள ரகம்பரமசுக மிகுந்துபுளகுற
செங்கையில்கொண்டுள வீணையெனச்சொல
சங்கையில்யாழ்க ளனேகமிசைத்துள
சித்தம்-பற்றும்-பொற்பங்-குற்றும்-மெச்சும்-நட்டம்-முற்றுங்-கற்றுஞ்
சீருலாவுநட மாதர்நின்றுபுதரி நேரிலாதசதி ராகமன்றல்விரி
செஞ்சந்தனத்திலிடு சீதபனிநீருமணம்
மிஞ்சும்பலத்தரொடு மேனிமருவீசுகுண
சீலஞானமணி மாரநீடுமக ராஜராஜனென வோதும்நேசரொடு
சேர்ந்திருந்துபல் தாராகணங்கள்நடு
ஊர்ந்திருந்துமேன் மேலாமொளியைவிடு

திங்கள்நிகர் தங்கனெனப் பொங்கிமகிழ்வெய்திப்பல
நங்கையர்களிங்கிதமா மங்கலவாழ்த்துகள்சொல. (ஈடேற்ற)

[விசுவாசகாதகன் தன் இரண்டு சினேகிதர்களுடன் மேடைவிட்டு நீங்குகிறான். குணலயரும் நிபுணரும் வருகிறார்கள். அவர்களை நோக்கி,]

பிரதாபசந்திரன்.—ஆ! ஆ! ஆ! மெத்தசந்தோஷம், அன்போ நீங்கள் நல்லசமயத்தில் வந்தீர்கள். உட்காருங்கள் சொல்லுகிறேன்.

விருத்தம்.

கேளுமென் புகழ்வி ளங்கக் கிடைத்துள நண்ப ரேநாம்
நாளையோ ராப்தன் வீட்டில் நலமுள விருந்துண் டாங்கு
வேளினற் படையாம் மாதர் மெய்த்திற நடனங் கண்டு
மீளவே வருவோம் வாரீர் மெய்யெலாம் புளக மார்ப்ப.

குணலயர்.—

நீங்களுங் குறித்துச் சொன்ன நிபுணனை யுலக மெல்லாம்
தீங்கொரு வடிவ மாகித் திரண்டவ னென்றே சொல்லும்
ஆங்கவன் செய்யும் விருந்தோ டாடல்பா டலுக்குச் சென்றால்
பாங்கினிற் குறைவோம் நாமும் பகரொணுப் பழியு மாமே.

தரு. இராகம் - அடாணு. ஆதிதாளம்.

பல்லவி.

போவதுநன் றலசொன்னேங் கேளண்ணே அவன்மனைக்குப்
போவதுநன் றலசொன்னேங் கேளண்ணே.

அநுபல்லவி.

போவதுநன் றல புவியிலுள்ளோர்பெரும்
போக்கிரியிவனென நீக்கியிருப்பரிவன்
புரியும்விருந்துசதர் கச்சேரிகளைமெச்சித்
திரியில்நமக்குவருந் தீராப்பழியுஞ்சிசிசி. (போவது)

சரணங்கள்.

1. சுஜனரிடத்திலென்றென்றைக்குமேப்ரீதி—சொல்லிமுடியாத்
துர்க்குணரிடத்தினிலெப்பொழுதும்பீதி—இருக்குமாயின்
நிஜமாய்வினையும்நமக்குலகினில்வெகுகியாதி—இதுவேயெல்லா
நிகமமாதிபிரமாணங்களோதிடுநீதி—அவனைவெகு

சூதனென்றுமவ நீதனென்றுந்துர்
வாதனென்றுமித்ர பேதனென்றுஞ்சொல்வர். (போவது)

2. தந்தைதாயர்வைத்ததனத்தையெல்லாஞ்செலவழித்து - அதனுடனே
சற்குணமென்பதுமொன்றுமில்லாமலேகழித்து-உலகமெங்கும்
நிந்தையோவேசைகொண்டிடமானமொழித்து-உபதேசமாய்
நெறியுணரறிஞர்கள்சொலுநற்புத்தியைப்பழித்து-வேசையர்மனே

வாசனென்றுங்குண நாசனென்றுமுழு
மோசனென்றும்அதி நீசனென்றுஞ்சொல்வர். (போவது)

3. புற்றென்றறிந்துமதிற்கைவைப்பதோஞானம் - புகழ்கெடவே
புரிந்தபின்புமனம்வருந்துவதோமானம் - இதனாலேநாங்
கற்றகல்வியினுக்குற்றிடுமேவெகுவூனம் - அன்றியும்பல
கல்விமான்களுக்குமல்லவோவெகுசாயீனம் - அவனேயேகார்க்

கோடனென்றுங்கொலை வேடனென்றுங்குடி
கேடனென்றும்நிர் மூடனென்றுஞ்சொல்வர். (போவது)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

நன்னடை யில்லா னேனும் நயமுட னம்மை வேண்டி
அன்னவ னுரைத்த வின்சொற் ககத்தியம் போக லாமே
என்னதான்கொடிய னேனு மெமக்கதிற் பழுது முண்டோ
சொன்னமுங் குப்பை சேர்ந்தாற் சோதியிற் குறைவ தாமோ.

(எல்லோருமேடைவிட்டு நீங்கல்.)



# அங்கம்—IV

## களம்—I.

இடம்: ஒரு சிங்காரத் தோட்டம்.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், அவன்பரிவாரம், விசுவாசகாதகன், திருவேங்கடத்தானு, பாவாடைஜித்தர், சட்பட், படீல், குசும்பாமாஸ்டர், இடிமுழுங்கி, வேஷக்சுந்தரம், மத்தாப்புசுந்தரம்.

[பிரதாபசந்திரன் பரிவாரத்தோடு வருகின்றான். அவனை விசுவாசகாதகன் தன் சிநேகிதரோடு எதிர்கொண்டு.]

விசுவாசகாதகன்.—

விருத்தம்.

அகமகிழ் வெய்து மன்பு மமைதியு முடைய நேசர்
சகிதமாய் வீற்றி ருந்து சம்பிரமத் துடனே யெல்லாச்
சுகமுறு மாடல் பாடல் சொந்தமா யனுப விக்க
மகிபநம் பிரதா பசந்திர மையடியர் பிரதமே வாரீர்.

அண்ணே பிரதாபசந்திரரே! ஆ! ஆ! ஆ! மெத்த சந்தோஷம். நானென்ன சொல்லப்போகிறேன், எனக்கின்றைக்குண்டான கவுரவமும் கீர்த்தியும் யொருவருக்கும் கிடையாது, வாருங்கள்! நம்முடைய சிங்கார பங்களாவைப் பாருங்கள், இதற்கிணையில்லையென்று தேருங்கள்; இப்படியே ஹாபி (happy) யா யென்றென்றைக்கு மிருக்கக் கோருங்கள். அடே சட்பட்! வெட்டிவேர் விசிறி கொண்டுவா. அடே படீல்! நாமங்களுக்கு ஸ்டாண்டுகளில் வைத்திருக்கும் ஊதுவத்திகளைக் கொளுத்து, நமக்கு வங்காளத்திலிருந்து ஸைகன்பேக் அனுப்பிய பன்னீர் கூஜாக்களி லிரண்டு கொண்டுவந்து ஹால்முழுதும் தெளி; ஓய் திருவேங்கடத்தானு.

திருவேங்கடத்தானு.—தேவரீர்.

விசுவாசகாதகன்.—நீ தயார் சேசியுண்டெ முல்லையாரத்தை நம்முடைய தந்த பீரோவிலிருக்கும் பெரிய பொன்தட்டில் கொண்டுவா. ஓய் பாவாடை ஜித்தரே.

**பாவாடைஜித்தர்.**—*அப்பனே.*

**விசுவாசகாதகன்.**—*வாருங்காணும்.*

**பாவாடைஜித்தர்.**—*வந்தேன்.*

**விசுவாசகாதகன்.**—*எல்லாந் தயாரா யிருக்கிறதா?*

**பவாடைஜித்தர்.**—*உப்புமுத லொதிபங்கட்டைவரையிலுந் தயாராயிருக்கிறது.*

**விசுவாசகாதகன்.**—*நான்ஸென்ஸ், உமக்குக் கவுரவமாய்ப் பேசத் தெரியாது.*

**பாவாடைஜித்தர்.**—*அப்பனே தெக்கத்திச் சீமையில் அல்லாந் தயாரானு லெப்படிதான் சொல்கிறது.*

**விசுவாசகாதகன்.**—*வெல் நெவர்மயிண்டு, அண்ணுத்தை இவர்களெல்லாம் நமக்கு ரொம்ப ஆப்தர்கள் (ஸண்டேமேஸ்டர் முதலானவர்களைக் காட்ட அவர்கள் வேஷகாண்டு செய்கிருர்கள்.) வெல் பிரதர், இந்தப் படத்தைப் பாருங்கள்; இது கவர்னர் ஜனரலனுப்பியது. இந்த பொம்மையைப் பாருங்கள்; இது மகாராணியவர்களனுப்பியது. இந்தச் சந்தனட் டேபிலேப்பாருங்கள்; இது மைசூர் கர்த்தரனுப்பியது. இந்த தந்தப்பெட்டியைப் பாருங்கள்; இது மலையாளத்துராஜா அனுப்பியது.*

**பிரதாபசந்திரன்.**—*ஆ! ஆ! உங்களுக்கு ராணிமுதல் ராஜாக்களெல்லோரும் சிநேசமாயிருக்கிருர்கள்.*

**விசுவாகாதகன்.**—*என்ன [illegible] னின்னுங் கடைவைத்துக் கொண்டா லெல்லாக ராஜாக்களுடைய தயவு சம்பாதிப்பேன். ஆனு லவ்வளவு தூரம் வைத்துக்கொள்வதி லஷ்டமில்லை.*

**பிரதாபசந்திரன்.**—*இன்னு மென்னென்ன வஸ்துக்க ளிருக்கின்றனவோ?*

**விசுவாசகாதகன்.**—*நம்முடைய டிப்போக்களிலிருக்கும் காஷ்மீர சாலுவைகள் காசி துப்பட்டாக்கள், டாகா மஸ்லீன்கள், ஆரணி சல்லாக்கள், மதுரைக் குட்டைகள், இன்னும் விந்தை விந்தையான சாமான்கள், இதுகளுக்குக் கணக்கில்லை. டாம் பூல்ஸ், நம்முடைய கணக்கப்பிள்ளைகளுக்கு உடம்பு பக்குவமில்லை; சாவிக ளவர்களிடத்தி லகப்பட்டுக்கொண்டன. அடே சட்பட், பட்ளரைக் கூப்பிடு.*

**சட்பட்.**—*அவர் வேலையா யிருக்கிருர்.*

விசுவாசகாதகன்.—செவர் மைண்டு, நாம் சொன்னபடி அறுபது அடுப்புகளை மூட்டி நம்முடைய இருபத்துநாலு கூக்குகளும் சமையல் செய்தார்களா ?

சட்பட்.—செய்தார்கள்.

விசுவாசகாதகன்.—அண்ணே நேரமாய்விட்டது.

தரு. இராகம் - பந்துவராளி. ஆதிதாளம்.

பல்லவி.

போஜனத்துக்கேகுவம்வாரீர் - அண்ணே நாமும்
போஜனத்துக்கேகுவம்வாரீர்

அனுபல்லவி.

போஜனத்துக்கேகுவம் ராஜராஜர்களுமெச்சு
புலவுக்கிச்சடியொடும் பலநற்பச்சடியிடும் (போஜ)

சரணங்கள்.

1. சூப்புகள்முன்னமேகுடித்து சுவமைிகும்நெய்
சொட்டிடும்ரோஸ்டுகளெடுத்து உண்டதன்பின்க
பாப்புடன்டோஸ்டுகள்தொடுத்து பாயில்மட்டன்கேக்
பன்னுடன்டர்க்கியுமுடித்து விதவிதமாய்ச்
சொல்லுமீட்டுவகைபல சில்வர்பிளேட்டினிற்பொருந்த
அல்லும்பகலும்பிரியா அன்பருடன்நின்றருந்த (போஜ)

2. கூட்டுவறல்பொரியல்பதம் பார்த்தேயிறக்கும்
குழம்புபஜ்ஜிசட்டிணிகள்விதம் அனேகமுஞ்சாப்
பாட்டினுக்கிசைந்தகிருதம் கலந்தநற்
பருப்பொடன்னமுண்டுமுசிதம் ஆகவேயெங்கும்
பகரும்நளபாகபீமபாகம்முத லாகும்பல
நிகரில்முறைகளின்சுவை நேர்ந்துநம்நாவினிற்செல. (போஜ)

3. டார்ட்புடிங்ஜாம்மாகரன்ஜெல்லி கேக்குகளும்பி
டாய்ப்ரிஸர்வ்க்ரீமைசுடன்சொல்லி வரவழைத்த
ஸ்வீட்கனிவர்க்கங்களில்நல்லி னங்களருந்தி
சுகந்தருமொயின்களிற்பல்லியவாயிருக்கும்
டொக்கேஸம்பொயின்மதீரா வுஸ்கீக்ரீம்டிரோஸ்ுமநல்ல
பக்குவஷர்ப்பத்திலின்ப மிக்கவேயளிக்கவல்ல. (போஜ)

[பிரதாபசந்திரனும் விசுவாசகாதகனும் செல்கிறார்கள். சற்றுப் பொறுத்து இருவரும் தாம்பூலம் போட்டுக்கொண்டு திரும்பி வருகிறார்கள்.]

**பிரதாபசந்திரன்.—**

விருத்தம்.

*என்னஸார் நீங்கள் செய்த இணையிலா விருந்தைப் போலு*
*மின்னுமோர் விருந்துண் டென்றே யெண்ணுதல் மடமை யாகும்*
*பன்னுவ தேனோ வீணாய்ப் பார்முழு தாளுஞ் செல்வ*
*மன்னவர்க் கரிதா மென்னின் மற்றவர்க் கென்னு மென்னும்.*

**விசுவாசகாதகன்.**—என்னஸார், நீங்களிதை விசேஷமாய்ச் சிலா கிக்கிறீர்கள்; நானென்னசெய்துவிட்டேன்! நானின்னும் யாராரை யழைக்கவேண்டுமோ அவர்களெல்லோரும் வந் தால் தங்களுக்குச் சரிப்படாதென்று நானழைக்க வில்லை. மேலும்,

விருத்தம்.

*எப்பொழு தழைப்பே னென்றே யேக்கமுற் றிருக்கு மந்தத்*
*தப்பிலிப் பிரபுக்கள் தம்மைச் சதிரினுக் கழைப்பே னாகில்*
*ஒப்பிலா தவனே! வந்தா லுண்பரோ யன்றி மேலாய்ச்*
*செப்பிடு மாடல் பாடல் திறத்தினை யறியார் சொன்னேன்.*

(பாவாடைஜித்தரைநோக்கி.) ஓய் ஜித்தரே கச்சேரிக்கு நேரமாய் விட்டது.

**பாவாடைஜித்தர்.**—இதோ வந்துவிட்டார்கள்.

(வேஷாக்சுந்தரம் மத்தாப்புசுந்தரம் இருவர்களும் வருகிறார்கள்.)

**விசுவாசகாதகன்.**—(வேஷாக்சுந்தரத்தைப் பிரதாபசந்திரனுக்குக் காட்டி,)

கொச்சகம்.

*தென்னாட்டி லேயுதித்த தேவரடி யார்குலத்தே*
*மன்னு அவதரித்த மாதரசி யாமிவளும்*
*பன்னுள் பரதமுதற் பாட்டும் பயின்றுநந்தம்*
*நன்னாடு தேடிவந்தாள் நம்பெருமை தானறிந்தே.*

வெல்-வேஷாக்சுந்தரம்! இன்றைக்குத்தா னுன் சாமர்த்தியத் தைப் பார்க்கவேண்டியது. இது மகாபிரபு சமுகம்-நீ கற்ற கல்விக்கின்றைக்குத்தான் பிரயோஜனம்; ஏதோ பைரவிராக மாலாபனைசெய்து ஒருபதம் பாடு.

ஷோக்சுந்தரம்.—

தரு. இராகம் - பைரவி. தாளம் - சாபு.

பல்லவி.

மனதிற்கிசைந்தமணவாளனின்றியும் - வாய்க்குஞ்சுகமென்னடி.

அநுபல்லவி.

தனதான்யமொடு பலசம்பத்திருந்தாலும்
சரசசல்லாபகுண சாம்பிராஜ்யஞகியே. (மனது)

சரணங்கள்.

1. சுந்தரகவுமார சுகுணசம்பன்னனாய்த்
துலங்கும்நாகரீகத் தூய்மையமர்ந்தவனாய்
சிந்தைதெளியும்பல கலைகளுணர்ந்தவனாய்
சீமையெங்கும்பெரும் புகழைப்படைத்தவனாய். (மனது)

2. அன்னநடையார்க ளன்பைக்கவர்பவனாய்
அன்றியுமவர்களுக் ககப்படாதவனாய்
தன்னையந்த தருணிக்குரியவனாய்
சகலசுகங்களு மவட்கேயளிப்பவனாய். (மனது)

3. சங்கீதசாகித்திய சாரமறிந்தவனாய்
சம்பாஷணையில்நய சாதுரியமுள்ளவனாய்
அங்கஜாகமுழுமுழு தாய்ந்துதெரிந்தவனாய்
அவனுக்கவனேநிக ராகியிருப்பவனாய். (மனது)

விசுவாசகாதகன்.—வெல் - ஷோக்சுந்தரம்! மெத்தசந்தோஷம், ஒரு கர்ணாமிருதஞ் சொல்-நம்முடைய பிரதர் கேட்டுச் சந்தோஷிக்கட்டும்.

ஷோக்சுந்தரம்.—

பைரவிராகம் - கலித்துறை.

கொண்டாய் முராரிநின் கைவிரல்மீதிற் குலவரையைக்
கண்டா யுனையெடுத் தம்பரத்திட்டதென் கச்சணியும்
செண்டார் தனத்தின் சிகரமென்னப்புன் சிரிப்பினெடு
வண்டார் குழலியைக்கொள் மாதவன்கழல் வாழ்த்துதுமே.

கலியாணி-விருத்தம்.

பின்னல்செய் கூந்தல்தன்னைப் பிடித்தரி யிழுத்தலோடும்
கன்னலின் மொழியாள்நன்றே கண்ணநீ செய்தவாறு
என்னநின் கொங்கையேதுக் கிழுத்ததென் மனதையென்றே
அன்னதைக் கொள்ளுமாயோ னடியிணை தொழுதுவாழ்வாம்.

திருந்துநல் விழையாரொன்றாய்ச் செம்புனல் படியுமாறு
பொருந்திய தடத்தினூடு போயவர் கலைகளெல்லாம்
குருந்தநல் விடவிசேர்த்துக் கோவலராசேயென்று
வருந்தவே யளிக்குமாயோன் மலர்ப்பதந் துதித்துவாழ்வாம்.

விசுவாசகாதகன்.—வெல் - ஷோக்சுந்தரம்! நாணிக்கண்புதைத்த லென்னுந் துறையில் ஒரு பாடல் சொல்லு.

ஷோக்சுந்தரம்.—

கலித்துறை-பைரவிராகம்.

மேவுஞ்சரிதை கவிவாணர் பாட வியனுலகைத்
தாவும்புக ழமர்மால் பிரதாபன் தடவரைவாய்ப்
பூவஞ்சரமத ராஜன் பணிசெயப் போந்தமின்னீர்
கோவஞ் சனைசெய் திருதனமுற்றவிக் கோலமென்னே.

விசுவாசகாதகன்.—

விருத்தம்.

கேளுமென் பிரதரேயிந்தக் கின்னரி பாடும்பாட்டை
வேளுமே கேட்டுச்சொக்கி விழுவனே யென்னசொல்வாம்
நாளுமிப் பாட்டைக்கேட்டு நம்மனங் களிக்கிற்சொர்க்கம்
ஆளுகை செய்யுமிந்திர னரும்பதம் வேண்டலேனே.
சந்திர னொளிபரப்பச் சைகதக் குவியலார்ந்த
விந்தையாம் புதரினூடு விநோதமாய்த் தென்றல்வீச
இந்தநல் லணங்குநம் முனினிமையா மிசைகள்பாட
அந்தமாய் வீற்றிருக்கு மநுபவ மதிற்கீ டுண்டோ.

அண்ணே! சங்கீதத்திற்கு மிஞ்சின சுகமெங்கே யிருக்கிறது! அது எல்லாவித்தையிலு மேலான காந்தருவ வித்தை, கேளுங்கள்.

கலித்துறை.

பாலுண் குழந்தையொடு நற்பசுவும் பணியுமின்னும்
ஞாலத்தமர் பண்டித யோகிகளுடன் ஞானிகளும்
கோலத்தமரரும் நான்முகன் முக்கணன் கோவலனும்
சாலச்சுக முறவோங்கிய நற்கலை சங்கீதமே.

என்னஸா ரிந்தநாளில் நல்ல சங்கீத மெங்கே யிருக்கிறது? நான் வீணை குருமூர்த்திசாஸ்திரியார், தியாகய்யர், சாமா சாஸ்திரியார், தீட்சிதர், வீணை சாம்பய்யர், வீணை சுப்பண்ணு, வீணை சுப்புகுட்டி யையர், இவர்களைப்பற்றி விசேஷமாய்க் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்பேர்கொத்த வித்துவான் களுக்குச் சன்மானம் செய்யத்தக்க பிரபுக்கள் விசேஷமா

யில்லே. ஆ! தஞ்சாவூர் சமஸ்தானமென்ன? மைசூர் சமஸ்தானமென்ன? விஜயநகர சமஸ்தானமென்ன? மலேயாள சமஸ்தானமென்ன? இந்த சமஸ்தானங்களில் எத்தனே வித்துவான்கள் பாடிப் பரிசுபெற்றிருக்கிருர்கள். அண்ணே! ஆரூர் கமல மென்னப்பட்ட தாசியைப்பற்றி யுங்களுக்குக் கேள்வியுண்டோ?

பாவாடைஜித்தர்.—அப்பனே நானறிவேன். அவளாடினு மரப் பாச்சிபோலிருப்பா; பட்டிமுண்டை புருவத்தைத் திருப்பினு பூலோகம் மயங்கும்.

விசுவாசகாதகன்.—ஓ டாம் நேரமாய்விட்டது; வெல் ஷோக் சுந்தரம் ரொம்ப நல்லாபாடினுய், நாமுனக்கு வெகு திரவியஞ் செலவழித்து இங்கிலீஷ் லேடிகளுடைய ஆட்டங் கற்றுக்கொடுத்திருக்கிறேமே! அதை நீயும் மத்தாப்பும் சற்றேற ஆடுங்கள் பார்ப்போம்.

திருவேங்கடத்தானு.—தாஸிகி ஜோடுகாவலெனே.

பாவாடைஜித்தர்.—அடேதாதா; என்னடா, ஆடச்சொன்னுல் செருப்பைக் கட்டச்சொல்லுகிறையே.

திருவேங்கடத்தானு.—ஓரே பாஷண்டி முண்டாகொடுகா, என் யென்யோ வாகனுலுண்டகா எத்துமீத எக்கி திரிகேவாடு நீ தேவுடு. பூசெதி பூடித, நீ புத்தி யிந்ததா.

பாவாடைஜித்தர்.—அடே தப்புகொட்டிப்பயலே, ஆரெண்டு நினேச்சே, உன் சாமி குருவியேறுங் கோவாலன், நீ மூஞ்சி யிலே அப்பறது மண்ணு, உன்புத்தி சொல்லவந்தையோ.

விசுவாசகாதகன்.—சஸ், நான்சென்ஸ், வாயை மூடுங்கள். ஓய் திருவேங்கடத்தானு நீவேமி செப்பினுவு.

திருவேங்கடத்தானு.—தேவரா! ஒக்கொக்க தொரனு, ஒக்கொக்க தொரஸாநி பட்டுகொனி ஜோடுகா ஆடேதி; அட்லாஷோக் சுந்து, மத்தாப்புனு ஒகறுநி ஒகறுநி பட்டுகொனி யாடிதே பாகாவுண்ணு. இந்ததா செப்பிதினி.

குசும்பாமாஸ்டர்.—(குதித்தோடி யவள் கையைப் பிடித்துக்கொண்டு.) ஓ நானும் ஷோக்கும்.

இடிமுழுங்கி.—(குதித்தோடிக் கை பிடித்துக்கொண்டு) ஓயெஸ் ஐ, அண்டு மத்தாப்பு.

(ட்ரம் வாசிக்கப்படுகிறது.)

தரு. இராகம் - பிலகரி. தாளம் - ஆதி.

பல்லவி.

பாரடிபிரதாபசந்திர - பணைமுடிபுனை மகிபதியையு நீ (பாரடி)

அநுபல்லவி.

தேரடிகடலுலகினி லிவனிகர்
ஆரடிசம்பத்தினி லழகினில். (பாரடி)

சரணங்கள்.

1. அக்கிரமங்கள்புரியுந்தீயரை யடலொடுமெனுதினமணுகவிடா
விக்ரமாதித்தனுமிவனிணையென விளம்புதற்குங்கிளம்புவாரெவர் (பாரடி)
2. போஜனென்னவேபுவிதனிலெங்கும் புகழுமரதிபதியிவனிணையா
தேஜமிகுரவிகோடியழகுறு தேவேந்திரனுமாவானுஇணை (பாரடி)
3. பாதுஷாவெனடில்லியாண்டுள பஹதருமிவனிணையெனவருமா
சோதிமகுடச்சோழன்பாண்டிய துரைகளையுஞ்சரியெனவசமா (பாரடி)

விசுவாசகாதகன்.—ஆ! ஆ! ஆ! வெகு நேர்த்தியா யிருக்கிறது, ஓடாம் ஆலங்காட்டிலரனுர் நர்த்தனஞ் செய்தாரென்றும், ஆயர்பாடியில் பெருமாள் நடனம் பண்ணினுரென்றும் சில புராணக் கிழங்கள் சொல்லிக்கொண்டு திரிகிறதுகள். இன்றைக்கு நம்முடைய ஷோக்கு ஆடினஆட்டத்தைப் பார்த்தாலதுகள் சிவலோகத்தையும் வைகுண்டத்தையும் மறந்துவிடும். அண்ணே பிரதாபசந்திரரே, தேவடியாக்களுடைய மகிமை தெரிந்தவர்களுக்குத்தான் தெரியும். அதிலும் நம்முடைய ஷோக்கு ரொம்ப புத்திசாலி.

திருவேங்கடத்தானு.—தேவரா! ஈ முண்ட எக்கடநேர்ச்சுகொனிந்தோ தெலியலேது, அடுகுகு ஐதுலட்சலிவ்வவச்சுநு.

பாவாடைஜித்தர்.—அடபோங்காணும், இது என்ன ஆட்டம்; தாழங்காட்டுச் சாத்தாயி சாணிமெரிச்சாப்போ லிருக்கிறது. சீகாளியில் வெள்ளிமலைத் தம்பிரான் மெய்ச்சிவங்கண்டார், நந்தியடிகள், வில்வநாதர், ஒட்டைப்பரதேசி, இவர்களெல்லாம் மகா சிவபத்தாள்; காலில் சஜ்ஜை கட்டி யாடினுர்களானல் கண்ணில் கலகலவென்று கலத்தண்ணீர் வரும்.

திருவேங்கடத்தானு.—அன்தயேடு அனி அர்த்தம்.

பாவாடைஜீத்தர்.—அட பம்பிப் பரத்தைப்பிள்ளை கொட்டாள கிண்டிமக நாட்டுப்புளுக்கை சிவத்தின் பெருமை தவத்தாலறியவேண்டும்.

விசுவாசகாதகன்.—ஏது சித்தரே, வழிக்கு வந்துவிட்டீரா பிறத்தும் ; ஸ்டாப் !—அண்ணே ! பிரதாபசந்திரரே, இந்த ஆட்டம் பாட்டமெல்லா மென்னமாயிருக்கிறது, வசிஷ்டர், வாயினாலல்லவோ பிரமரிஷியாகவேண்டும்.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

உலகினி லிங்கிலீஷ் ஜாதியேயதனிலுள்ள
கலைகளை யுணர்ந்தோர்க்கிந்தக் கருத்துக ளிசையாதென்றும்
நலமுறு மொழுங்கந்தன்னை நவில்வது நன்மையன்றிச்
சிலைமதன் சிங்காரத்தைச் சிறப்பென வுரைத்தல்நன்றோ.

விசுவாசகாதகன்.—ஆ ! ஆ ! ஆ ! அண்ணே! மன்மதன், அஷ்டதிக்கு விஜயங்கொண்ட அடங்காப் பெருஞ்சாமி. அவனுடைய திருவிளையாடல்களைப் பாடாதவர் யார்.

திருவேங்கடத்தானு.—வாண்ணி பெத்தி வேஸ்தே நாலாயிரம்லோ அனேகம் பாடலு போதுந்தி.

பாவாடைஜீத்தர்.—அப்பனே! அறுபத்துமூவருடைய பாட்டில் அனேகம் ஆற்றில் கலக்கவேண்டி வரும்.

குசும்பாமாஸ்டர்.—அண்ணே ! மன்மதன் மன்மதன் என்கிறார்களே, அந்த ஜெண்டில்மென் எப்படியிருப்பார், என்ன தலைகுட்டைடையென்ன சொக்காய் போட்டுக்கொண்டிருப்பார் ?

விசுவாசகாதகன்.—ஆ ! ஆ ! ஆ! அவர்விஷயமாய் நானொரு பாட்டுப்பாடியிருக்கிறேன், அதைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

தரு. இராகம் - பந்துவராளி. ஆதிதாளம்.

பல்லவி.

கண்டவனார் மதன்பெருமை-கண்டவனார்.

அனுபல்லவி.

பண்டுமின்றுமென்றுமுள்ள பண்டிதர்
பனுவலால் நனியுரைத்ததன்றி. (கண்ட)

சரணங்கள்.

1. விண்ணுலவுமதி யவன்றன்குடையாக - வியப்புறவே
பண்ணுலவுகிளிமீ தினிலவனேக தவத்தமர்முக்

கண்ணனையுமொருகை பார்ப்போமென
திண்மாய்நண்ணு மண்ணல்பெருமை. (கண்ட)

2. மாதவமுடையவிருடிகள்மனநோக பெண்பயித்தியம்
மீதெழுந்துமவன் கணையனலினில்வேக இனிமேல்தவம்

ஏதுசெய்வதென்ற காததுயரமுற்று
ஓதொணுவகையி லோடியலையவே. (கண்ட)

3. பாரெனுமொருகுள மதில்வலைவீசி அதனுட்சிக்கி
நேருமுயிர்களா மீன்களைக்கொடுவேசி மார்களுக்கீந்து

ஜாரசோரர் அரசென்றுவழங்கவே
தீரமாரனென்று பேர்முழங்கவே. (கண்ட)

பிரதாபசந்திரன்.—அண்ணே! லோகத்தில் தங்கள் தங்க ளிஷ்ட தேவதையின்பேரில் சாகித்தியம் செய்வது வழக்கம்; நீங்கள் மன்மதன்பேரில் செய்திருப்பதைப் பார்த்தால், அவனே யுங்களிஷ்டதேவதைபோ லிருக்கிறது.

விசுவாசகாதகன்.—அவனெல்லா இஷ்டதேவதைகளுக்கு மிஷ்ட தேவதையாச்சே.

திருவேங்கடத்தானு.—வாடு லேகபோதே மனமந்தா எக்கடனண்டி, வாடே சிருஷ்டிகர்த்த.

பாவாடைஜீத்தர்.—ஆமாமப்பனே, அவன் சிறுபிள்ளையானாலுஞ் சிவத்தையுஞ் சீண்டியிருக்கிறான்; கன்னல்வேளுக்கு முன்னில்வேளில்லை.

விசுவாசகாதகன்.— வெல் நேரமாய்விட்டது, ஷோக் நம்முடைய பிரதாபசந்திரர் விஷயமாய் நீ தயார்செயத மங்களத்தைச் சொல்.

பிரதாபசந்திரன்.—நமக்கதெல்லா மென்னத்துக்கு ஸார்.

விசுவாசகாதகன்.—இது நம்முடைய வீட்டு மரியாதை; பிரபுக்கள் வந்தா லவர்களுக்குச் சுபமுண்டாக வாழ்த்துகிறது எங்கள் சம்பிரதாயம்; மேலு மிதற்குதாரணம் வேண்டுமானால் கேளுங்கள்.

விருத்தம்.

மகுடவிக் டோரியம்மை மைந்தனால் பார்ட்டுமன்னன்
தகுபுக ழுடனேசென்னைச் சதிரினில் வீற்றிருக்க
சொகுசுட னணிகள்பூண்ட சுந்தர வேசைமாதர்
அகமகிழ் வுடனேதங்க வாலத்தி யெடுத்தாரண்ணே.

பிரதாபசந்திரன்.—நாமென்னஸார் மகாராணி பிள்ளையா?

விசுவாசகாதகன்.—

விருத்தம்.

அட்சயச் செல்வத்தோடு மளவிலா ஜமீன்களோடும்
பட்சமாய்த் தன்னையண்டும் பண்டிதர் கூட்டத்தோடும்
ரட்சணை செய்துமிக்க ராச்சியந் தன்னையாளும்
லட்சுமி விலாசர்பெற்ற லாவண்ய மதலாய்கேளாய்.

தாரகையின் கூட்டமதை யொருகோடி சேர்த்தாலுஞ் சந்திரனாமோ
பேரிகைக ளொருகோடி யடித்தாலுங் கடல்முழக்கிற் பெரியதாமோ
காரிகைக ளொருகோடி சேர்ந்தாலும் அரம்பையெனுங் கன்னியாமோ
பாரகத்தி லொருகோடி பிரபுக்கள் தமிலும் பிரதாபனுக் கீடுண்டோ.

என்ன அண்ணுத்தைதகளை நாம் சொல்வ தென்னமா யிருக்கிறது?

எல்லோரும்.—ஓயஸ் வெரிட்ரு, கொயட் ரைட்.

விசுவாசகாதகன்.—அடே சட்டபட், அடே, படீல், நாம் தங்கத்தட்டு களில் தயார்செய்திருக்கு மாலத்திகளைக் கொண்டுவாருங் கள். வெல் ஷோக் ஆகட்டும்.

ஷோக்சுந்தரம்.—

தரு. இராகம் - பரசு. ஆதிதாளம்.

பல்லவி.

மங்களம் - ஜெய - மங்களம்.

1. வாமாட்சிகள்மனங்கவர் வடிவமர்ந்தமாரனுக்கு (மங்களம்)
2. சோமசூரியாக்னியின்மிக்க சோதியமர்ந்தவனுக்கு (மங்களம்)
3. ஞானபானுவெனத்தோன்றி நற்கலைபயின்றவற்கு (மங்களம்)
4. கார்த்திகேயனதிவீரர் கண்டஞ்சுஞ்சவுரியனுக்கு (மங்களம்)
5. தாமரையாளருள்பல சம்பதைமிகுந்தவற்கு (மங்களம்)
6. கோடிகோடியாகத்தனம் கொடுத்தருளும்போசனுக்கு (மங்களம்)
7. நேமமுடன்தன்னையண்டும் நேசர்தமைக்காப்பவற்கு (மங்களம்)
8. ராஜாதிராஜர்புகழும் ராஜன்பிரதாபசந்திரற்கு (மங்களம்)

**விசுவாசகாதகன்.**— வெல் ஷோக் மாகாபிரபுவுக்கு ஆலத்திப் பொட்டிடு. மறந்துபோகவேண்டாம்.

**பிரதாபசந்திரன்.**— இதெல்லாமேன் ஸார், நீங்க ளிதுவரையிற் செய்ததிலேயே உங்கள் பிரீதி வெளிப்பட்டது.

**விசுவாசகாதகன்.**—ஆ! அப்படியா! இருக்கட்டும்; மரியாதைக்கு விரோதமாய் நடக்கக்கூடாது, ஆகட்டும் ஷோக்.

(ஷோக்சுந்தரம் வெகு அபிநயத்தோடு பொட்டிடுகின்றாள். எல்லோரும் மேடைவிட்டு நீங்குகிறார்கள்.)



# அங்கம்—V

## களம்—I.

இடம்: பிரதாபசந்திரன் மாளிகை.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், வித்தியாசாகரர், குணலயர், நிபுணர் முதலியோர், விசுவாசகாதகன், திருவேங்கடத்தானு, பாவாடைஜித்தர், சட்பட், படல், டாகர், செட்டி.

[பிரதாபசந்திரனும், வித்தியாசாகரர் முதலிய அவனது சிநேகிதர்களும் தத்தம் ஆசனங்களில் அமர்ந்திருக்கின்றனர். வித்தியாசாகரர் பிரதாபசந்திரனை நோக்கி.]

**வித்தியாசாகரர்.—**

விருத்தம்.

அண்ணலே ப்ரதாப சந்திர வருமையாம் நண்ப ரேநாம்
திண்ணமாய்க் கூடா தென்று செப்பிய வார்த்தை தள்ளி
எண்ணெணுத் தீயன் வீட்டிற் கேகினீ ரங்கு சேர்ந்து
பண்ணிய காரி யத்தைப் பகருவீர் தயவு செய்தே.

**பிரதாபசந்திரன்.—**

ஆயவன் றன்னை நீங்க ளநியாய மாக வேண்ணே
தீயனென் றுரைக்க வந்தீர் செகத்தினி லவனைப் போல
ஞாயமு நட்பு முள்ள நண்பனைக் கண்ட தில்லை
போயவன் வீட்டிற் கண்ட புதுமையைச் சொல்வேன் கேளீர்.

**நிபுணர்.—**ஆ! ஆ! அப்படியே சொல்லுங்கள், கேட்கத்தானே வந்தோம்.

**பிரதாபசந்திரன்.—**

விருத்தம்.

கண்டன மின்றே யென்றுங் கண்டிலா வணங்கை நாமும்
கொண்டலோ கூந்தல் கண்கள் கூர்வடி வேலோ மார்பம்
செண்டெனத் திரண்ட பொன்னே சிற்றிடை மின்ன லென்னே
மண்டலத் துதித்த பெண்ணே வானவர்க் கரசி தானே.

**வித்தியாசாகரர்.—**ஆ! ஆ! ஆ! வெகுநேர்த்தியா யிருக்கிறது, அந்தப் பெண்ணின்னுமெப்படி யிருக்கிறாள் அதைச் சொல்லுங்கள்.

**பிரதாபசந்திரன்.—**

விருத்தம்.

ரோமியோ மனங்க வர்ந்த ரூபமார் ஜூலி யட்டோ
நேமமார் பீட்ராக் குக்கே நேர்ந்தநல் லாரா மாதோ
காமியாம் பாஸ்னூன் காதற் கன்னியாம் லீலா வென்னோ
பாமரன் சீலிம் பற்றும் பாரொளி நூர்ஜி ஹானோ.

**நிபுணர்.**—அண்ணே பழம் நழுவிப் பாலில் விழுந்தாற்போலிருக்கிறது, இன்னுஞ் சொல்லுங்கள்.

**பிரதாபசந்திரன்.—**

தரு. இராகம் - உசேனி. ஆதிதாளம்.

பல்லவி.

என்னவென்றுதுதித் தேத்துவேன் - அம்மாதரசை
என்னவென்றுதுதித் தேத்துவேன்.

அனுபல்லவி.

என்னவென்று துதிப்பேனான் எங்குங்கண்டிலாதவெழில்
தன்னையேயுருவாக்கொண்டுந் தன்னிகர் தானாகக்கண்டும். (என்ன)

சரணங்கள்.

1. கன்னல்மொழியின ளென்றாலும்—கருத்துருக்குங்
காவிவிழியின ளென்றாலும்—துவண்டிலங்கும்
மின்னலிடையின ளென்றாலும்—மேருநிகர்த்த
மென்றனமுடைய ளென்றாலும்—இன்னும்பலவாய்க்
கவிக ளுரைக்கு மெல்லாக் கற்பனை களையு மீறிப்
புவியி லுதித்த வளின் பொற்பையு நானின்று தேறி. (என்ன)

**குணலயர்.**—ஆ! ஆ! ஆ! அண்ணே போதும்போதும், நிறுத்துங்கள், தெவிட்டுகிறது. நரகத்துக்குப் போனவன் சொர்க்கத்தைக் கண்டாற்போலிருக்கிறது. அசனமில்லாதவனுக் கமுதங்கிடைத்தாற்போலிருக்கிறது.

**பிரதாபசந்திரன்.—**

விருத்தம்.

சொல்லலோ சுலப மாகுஞ் சுந்தர வடிவ மார்ந்த
மெல்லியர் நோக்கிற் பட்டு மெலிவுறா திருக்கு மாந்தர்
இல்லையிவ் வுலகந் தன்னி லென்பதை யறிந்தி லீரோ
அல்லல்செய் மதனன் வாளிக் ககப்படா தவரு முண்டோ.

நிபுணர்.—

தரு. இராகம் - பியாகடை. சாபுதாளம்.

பல்லவி.

பெண்களர்முகம்பாராப் பேதையைப்பேர் நும்மைப்
பிழைத்திருக்கச்சொன்னமோ.

அநுபல்லவி.

கண்டவ ளிடத்தெல்லாங் காமுற் றிருப்போ மாயின்
கனத்திற்குந் தனத்திற்கு மனத்திற்குங் குறைவன்றோ. (பெண்)

சரணங்கள்.

1. நீர்கண்டவளைப்போலிந் நீணிலத்தினிற்கோடி
நேரிழையர்க ளுண்டவரை நாடி
போர்கொண்டமதன்விடுந் தூதுபோன்றவரென்றே
புகழ்ந்துபுகழ்ந்தவரைக் கொண்டாடி
சீர்கொண்டநம்புகழ் கெடவேயவரைச்சேர்ந்து
தீராப்பிணியதனு லுடலுமிகவேசோர்ந்து
ஆர்கண்டிடினும்நம்மை யவமதிப்பரெனத்தேர்ந்து
அரற்றல்நன்றலவென்றே யுரைத்தோமெல்லாமோர்ந்து. (பெ)

2. மேனியைமினுக்கிமெய் மறக்கும்படியேபேசி
வேண்டியபொருள் கவர்தலும்வசிக்
கானதொழிலன்றி யாடவர்மேலவர்க்
கன்பில்லையென்பதை நீயோசி
மீனுந்தூண்டிற்பட்ட விதத்திற் பெருமூச்சு
விட்டுப்பின்வருந் திறலென்னுச்சு
ஏனினியதைப்பற்றி வீணுய்ப்பலபேச்சு
ஏற்காததுநமக்குமென் றென்றைக்குமேயேச்சு. (பெண்)

3. காதலிருவருக்குங் கருத்திசைந்தவிடம்
காணப்படுமின்ப மல்லோதிடம்
சூதுவாதுகள்செய்யுஞ் சூளையர்களினைட்டிச்
சுகத்தைக்கெடுக்கவருங் கொடியவிடம்
ஈதரிச்சந்திர னிராமன்நளனோடு
மின்னும்பலபேர்க ளிணையில்காதலர்நாடும்
ஆதரமுற்றசுக மடையேயெவ்வகையீடும்
அற்றவரேநீரும் முற்றுமடையத்தேடும். (பெண்)

**பிரதாபசந்திரன்.—**

விருத்தம்.

நன்றுநீர் சொல்வ தெல்லாம் நண்பரே யிந்த மாது
அன்றுசெய் வினையால் வேசை யாகவே தோன்றி னாளே
யன்றியக் குலத்திற் குள்ள வவநீதி யவளி டத்தில்
ஒன்றுமே யில்லை நீங்க ளுறுதியாய் நம்பு வீரே.

**வித்தியாசாகரர்.—**ஆ! ஆ! ஆ! சூரியகாந்தத்திற் சுடரென்று நெருப்பு விழுவதைப்போல், உங்களுக்கெவ்வளவு அபிமான முண்டாய்விட்டது, பார்த்தீர்களா!

தரு. இராகம் - பைரவி. ரூபகதாளம்.

பல்லவி.

கண்டவுடன்கருத்துருகிக் கனிந்ததுவோ நெஞ்சமுமே.

அநுபல்லவி.

கொண்டலைக்கண்டுருகிமயில் கொண்டமையல்போன்றுமக்கும். (கண்ட)

சரணங்கள்.

1. பண்டழகிமேனகையைப் பார்த்தவுடன்தவநெறியை
விண்டவிச்வாமித்ரமுனி மெய்மறந்தாற்போலுமக்கும். (கண்ட)

2. கல்வியெனுங்கடல்கடந்தும் காரிழையைக்கண்டவுடன்
பில்கணனுன்றுபடும் பெருந்துயரந்தானடைந்தே. (கண்ட)

3. சுகந்தருநற்றவமியற்றுந் துய்யமுனிவனத்தில்மன்னன்
சகுந்தலையைக்கண்டுமதன் சரங்கள்படமெலிந்ததுபோல். (கண்ட)

**பிரதாபசந்திரன்.—**ஆனால், நான் பார்த்தவுடனே யவளிடத்தில் மோகங்கொண்டு சொல்லுகிறேனென்பதை விட்டுவிடுங்கள் அண்ணே.

விருத்தம்.

எவ்விடத் தினிலே ரூப மிசைந்துகண் களிப்புண் டாமோ
அவ்விடத் தமர்ந்தி ருக்கு மருமையாங் குணங்க ளென்றே
செவ்வினின் ஷேக்ஸ்பீ ராதி சிறப்புறு கவிக ளெல்லாம்
இவ்வுல கத்து ரைத்த வின்சொலும் பிழைய தாமோ.

**குணலயர்.—**

கவுதம னென்ன வன்றிக் கடவுளர் குருவு மென்ன
இவர்களுக் கிசைய கல்வை யிணையிலாத் தாரை யென்ன
கவின்பெறு மிந்த்ர னென்னக் கலைமிகு சந்த்ர னென்ன
செவியினுற் கேட்டி லீரோ சிறப்பிலா ரழிந்த செய்தி.

பிரதாபசந்திரன்.—

ஏதுக்கு நீங்க ளிவ்வா றென்னுட னின்று வீணாய்
வாதுக்கு வந்தீ ரந்த மடந்தையின் தன்மை நானும்
சோதிக்க வேண்ட லேனோ சுந்தரி யுங்கட் கெல்லாம்
போதிக்க வல்ல சத்தி புத்தியு மமர்ந்த மாதே.

குணலயர் —

கிணறுதான் வெட்டப் போகக் கிளம்பிடு பூதம் போல
குணமுட னுமக்குப் புத்தி கூறவே வந்தா லெங்கட்
கணிமிகு மவ்வ ணங்கே யறநெறி சொல்வா ளென்றீர்
அணைகடந் திட்ட வெள்ள மாசசுதே யுங்கள் தன்மை.

நல்வழி யன்றி வேறு நடப்பதே யில்லை யென்று
சொல்லிய நீரு மந்தத் துர்ச்சனன் வீட்டிற் கேகி
கல்வியு மறிவும் விட்டுக் காமமே மிகுந்து மப்பால்
பல்வித மாக வெம்மைப் பழிக்கவுந் தலைப்பட் டீரே.

வந்தது வரட்டு மின்னும் மகிழ்வுட னெம்மை நீரும்
சந்தத நண்ப ராக நினைத்தலாற் சாற்ற வேண்டும்
முந்திய யெண்ண மின்றி மூடர்தம் வழியிற் சென்றால்
அந்தியத் துண்டாந் துன்ப மளவிலா தென்பா ரண்ணே.

தரு. இராகம் - முகாரி. சாபுதாளம்.

பல்லவி.

நிறுத்தமாட்டீரோ - போவதையின்னும் - நிறுத்தமாட்டீரோ.

அநுபல்லவி.

உறுத்திப்பல்விதமா யினியும்மோடு
ஓதுவதாலெங்க ளுளம்பதைக்குது. (நிறுத்த)

சரணங்கள்.

1. மழைக்குக்குறியென் றோதுவர்மின்னலை
மனதிவ்வாறு வருத்தமுற்றலைதை
அழைக்குந்தீமைக்குக் குறியென்றோதுவர்
ஆதலினலெங்கண் மீதுதயைசெய்து. (நிறுத்த)

2. மாமுடிமன்னவ ராயினுமென்றைக்கும்
வறுமையேகதி யானவராயினும்
தீமைக்குறியைத் தெரிந்துகொள்ளாரெனின்
சித்தமவர்பல வித்தில்கெடுவது. (நிறுத்த)

3. நண்பராகையால் நாங்கள்சொன்னேமிதை
ஞாயமென்றேயிவ்வு பாயத்தைக்கைக்கொண்டு
பண்படுவீராகி லும்மைவெல்வாரில்லை
பார்த்துக்கொள்வீரிந்த வார்த்தையினுண்மையை. (நிறுத்த)

[வித்தியாசாகரர், குணலயர், நிபுணர் மூவரும் மனவருத்தத்துடன் எழுந்து போகின்றனர்.]

**பிரதாபசந்திரன்.—**

கைக்கிளை விருத்தம்.

யன்றலந் தார்பு னைந்த மாதரா ரிடத்திற் சென்றே
நின்றிவ தாய நந்தம் நெறியிலா மனத்தை யந்தோ
தென்றலந் தேர்மீ தேறித் தீங்கனை பிடித்த மாரன்
என்றுகொல் விடுவா னந்த விளங்கொடி மருங்குல் சேர்த்தே.

கல்வி யிருந்துமென் கடலைப் போற்பெருஞ்
செல்வ மிருந்துமென் திறமி ருந்துமென்
வில்லினை வுற்றதன் புருவ வெம்மையால்
வெல்விழி யன்பு நம்மீ திலாமலே.

தரு. இராகம் - தன்னியாசி. சாப்புதாளம்.

பல்லவி.

சென்றதுவுன்னிடத் தென்மனதுமினி-செய்வதுமென் சொல்லடி.

அநுபல்லவி.

அன்றுனைக்கண்டதுமுத லாகநானும்வே
றொன்றும்நினைந்தில னுன்றனைகேளடி. (சென்றது)

சரணங்கள்.

1. பொருளிருந்ததினாலென் புகழிருந்ததினாலென்
புவிமன்னரெல்லோரும் போற்றநின்றதினாலென்
அருளொடுநீபார்த்தே யாதரிக்கப்பெற்ற
ஆடவர்செல்வமற் றோர்க்குளதடிமானே. (சென்றது)

2. நஷ்டமெத்தனைவகை யானாலுமாகட்டும்
நாடெங்குமொன்றாகி நகைத்தாலும்நகைக்கட்டும்
கஷ்டமெத்தனைவிதம் பட்டாலுமேபட்டும்
கன்னல்மொழியேயுன் கடைக்கண்நோக்கினிதென்றே. (சென்றது)

3. சுவர்க்காதிபோகங்கள் மேலானவைகளென்று
சொல்லுஞ்சொல்லன்றியச் சுகத்தைக்கண்டவரார்
எவர்க்காயினுமிந்த வின்பங்கிடைக்குமோ
இகபரமிரண்டிலு மென்னுயிர்க்குயிர்நீயே. (சென்றது)

[விசுவாசகாதகன் தன் சினேகிதர்களோடு வருகின்றான்.]

**பிரதாபசந்திரன்.—** அண்ணே வாருங்கள், உட்காருங்கள். உம்மைக் கண்டு வெகுசாலமானதுப்போலிருக்கிறது.

[விசுவாசகாதகன் முதலியோர் ஆசனத்தமர்கின்றனர்.]

**விசுவாசகாதகன்** —அண்ணே, நேற்று நம்முடைய வீட்டிற்கு வந்து நம்மைக் கவுரவப்படுத்தினீர்களே.

**பிரதாபசந்திரன்.**—விசேஷமாய் நம்மிடத்திற் பிரீதியுள்ளவர்களைப் பார்க்காத ஒரு நொடிக்காலமும் ஒரு யுகமாயிருக்கின்றதண்ணே.

**விசுவாசகாதகன்.**—சிநேகிதர்களின் தன்மையை யறியுஞ் சக்தி யுங்களுக்கன்றி மற்ற யாருக்கிருக்கிறது? ஆமண்ணே, அன்னத்தைப்போலப் பகுத்தறியவேண்டும்; எல்லாரும் நல்ல சிநேகிதராவார்களா?

**பிரதாபசந்திரன்.**—அண்ணே அன்றிராத்திரி பாடிய மாதாசியார்?

**விசுவாசகாதகன்.**—என்ன ஸார், அவளுடைய சங்கதியைச் சொல்லவேண்டுமானு லொரு ராமாயணம்; ஆயினும் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேளுங்கள்: தஞ்சாவூர்ச் சீமையிற் பிரபல ஜமீன்தார ரொருவரிருந்தார். அவர் நமக்கு ரொம்ப வேண்டியவர். அவரொரு உத்தம தாசியை வைத்துக் கொண்டிருந்தார். அவள்வயிற்றிற் பிறந்தவ ளிந்த மாது சிரோமணி; இவள் தந்தை தானிறந்து போகும்போது குழந்தையாயிருந்த இவளை நம்மிடத்தி லொப்புவித்தார்; நாம் தகப்பனைப்போ லிவளைக் காப்பாற்றிச் சகல சிங்காரங்களையுங் கற்றுக்கொடுத்திருக்கிறோம். இவள் இன்னுமொருவர் முகமுங் கண்டறியாள்.

**பிரதாபசந்திரன்.**—ஆனால் கச்சேரிக்கு வந்து பாடலாமா?

**விசுவாசகாதகன்.**—என்ன ஸார், கண்டவர்களின்முன் கச்சேரிக் கழைப்பேனு? தாங்கள் மகாபிரபு, ரொம்பவுஞ் சிங்கார புருஷர்; நமக்கு வேண்டியவராகையால்தான் பாடச் சொன்னேன்.

**பிரதாபசந்திரன்.**—ஓ! மெத்த சந்தோஷம்; அண்ணே யவள் ரொம்ப புத்திசாலி, அப்பேர்க்கொத்த பெண்ணைப் பார்த்ததுமில்லை கேட்டதுமில்லை. நாம் வந்தபின்பு அவளென்ன சொன்னுள்?

**விசுவாசகாதகன்.**—அண்ணே, அந்தச் சங்கடத்தையேன் கேட்கிறீர்கள், தங்களோடு சொன்னுல் தாங்களென்ன நினைப்பீர்களோவென்று சங்கோசமாயிருக்கிறது.

**பிரதாபசந்திரன்.**—அண்ணே, உங்களுக்கும் நமக்கும் சங்கோசமேன், பிரீயாயச் சொல்லுங்கள்.

விசுவாசகாதகன்.—

தரு. மோகனராகம். ரூபகதாளம்.

பல்லவி.

பார்த்துப்பார்த்து மனஞ்சலித்துப் பைந்தொடியும்மனது நைந்தனளே.

அநுபல்லவி.

சேர்த்துச்சேர்த்துச் செங்கையைக்கூப்பி
தெண்டனிட்டாளதைக் கண்டுகொள்ளாததை. (பார்த்து)

சரணங்கள்.

1. காற்றின்சுழலிற் சிக்கியதுரும்பின்
கதையாய்மதன் வதையாய்
தூற்றுங்கணைகள் தைத்திடவருந்தித்
துக்கமெனுங்கடல் சிக்கியவளும்மை. (பார்த்து)

2. மதியைநோகுவள் வாட்டுதென்றுமந்த
மாருதம்நோகுவள் சோருவளன்றித்தன்
விதியைநோகுவள்மெய்ம்மறந்தோதுவள்
மேதினிதன்னில்வேறுதரவேதென்று. (பார்த்து)

3. சுந்தரபிரதாப சந்திரனேனின்னும்
வந்திலரென்றுமைச் சொந்தங்கொண்டாடுவள்
இந்திரனேயவள் தொந்தரைதீர்த்திட
வந்தமென்றேநானி னைந்துவந்தேனின்று. (பார்த்து)

பிரதாபசந்திரன் —

விருத்தம்.

ஐயநீர் கேளு மிந்த அம்புவி தன்னில் மாதர்
மெய்யுணர் வில்லா ரேனு மேன்மையிற் குறையா ரிந்தத்
தையலோ சொல்லொ ணாத தகைமைய ளிவளே நம்மேல்
மையல்கொண் டிருக்கும் புண்ணியம் வாய்த்ததற் கென்சொல் வேனே.

விசுவாசகாதகன் —அண்ணே, அமுதந் தேவர்களுக்குத்தான் கிடைக்கும், அதுபோல நல்லவர்களுக்குத்தான் நல்லவஸ்து சித்திக்கும்.

பாவாடைஜீத்தர்.—அப்பனே, சிவனடியார்களுக்குத்தான் திருநீறகப்படும்.

திருவேங்கடத்தானு.—தேவரா, மிர்முலுநந்நு மன வேஷாக்சுந்தரானின்னி ஓசடிகா கூர்ச்சுண்டபெட்டிதே, மீரோ ஓகரி கொக்கரு தக்குவலேதண்டி.

பாவாடைஜீத்தர்.—அப்பனே, சிவபெருமானும் தேவியும், குமார குருவும் வள்ளியும், சுந்தரனும் சங்கிலிநாச்சியும் உட்கார்ந் தாப்போலிருக்கும். இந்தப் பாழுங்கண் அப்படிப் பார்க்கப் புண்ணியஞ்செய்ததோ இல்லையே.

திருவேங்கடத்தானு.—அன்தா உடையவரு கிருபஜேஸ்து.

விசுவாசகாதகன்.—ஓய் ஜிக்தரே, க்ஷாக்சுந்தரத்தினுடைய அதிருஷ்டமே அதிருஷ்டம். ஆனால் லவள்படும் பரிதாபத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை.

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - இந்துஸ்தான். தாளம் - ஆதி.

பல்லவி.

ஆகாமாதரசென்னவருந்தினை ளோகாதல்மிகவுற்று
நம்மிடந்தன்னில். (ஆகா)

அனுபல்லவி.

போகாதிருப்பதுசரியலவுடனே புறப்படும்புறப்படும்
புறப்படல்கடனே. (ஆகா)

சரணங்கள்.

1. ஏகாதிருந்தா லென்னநினைப்பாள்
எழுந்திருமெழுந்திரும் பேசுவமப்பால். (ஆகா)

2. இனிமேலரைநொடித் தாமதமேனோ
இளங்கொடிநோக்கிலா திருப்பதும்நானோ. (ஆகா)

3. அவனியிலெல்லவித வாழ்க்கையுந்துன்பம்
அவளைவிட்டகலா திருப்பதேயின்பம். (ஆகா)

விசுவாசகாதகன்.—நீங்கள் படுகிற வருத்தமோ இப்படியிருக்கிறது. அவளைப் பார்த்தால் கண்ணில் ஜலம் கலகலவென்று வருகிறது. நானென்ன செய்யப்போகிறேன். எனக்கொன்றுந் தோன்றவில்லை, அண்ணே.

தரு. இராகம் - யமுநாகலியாணி. ஆதிதாளம்.

பல்லவி.

எதிதுவாகுமோலேசாய்-அண்ணே
எதிதுவாகுமோ லேசாய்.

அனுபல்லவி.

ஓதுவதேனோநா னுமக்குத்தெரியாததோ
ஒண்டொடித்தாய்மன முணராதே. (எதிது)

சரணங்கள்.

1. தாயெனிலோ அவள் தாசியேயாயினும்
தக்கவளாதலினாலே. (எதிது)

2. சேற்றினில்தாமரை பூத்ததுபோலவள்
ஸ்திரியெனவோநீர் அறியீரோ. (எதிது)

3. நாரிசிரோமணி நம்மவளாகிலும்
நடுவிலிருப்பன பலவாலே. (எதிது)

4. தாமரையாயினும் நாமடைவோமோநீர்
தக்கவழியினிற் கடவாதே. (எதிது)

**பிரதாபசந்திரன்.**—அண்ணே! அவளுக்கும் நமக்குமென்ன ஆடங்கமிருக்கிறது, அதினால் லட்சம்லட்சமாய்ச் செலவாகட்டும் கொடுக்கிறேன். என்னுடைய ஜமீன்களைக் கொடுத்துவிடுகிறேன். எங்கள் பெரியோர்கள் பாரம்பரியமாய்ச் சம்பாதித்திருக்கும் யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், விசித்திரம் விசித்திரமான ஆபரணங்கள் இன்னு மென்னென்ன வேண்டுமோ அதையெல்லா நம்முடைய ராஜ்ஜியத்திலிருந்து அழைப்பித்துக் கொடுத்துவிடுகிறேன். இப்பொழுது நம்முடைய தகப்பனார் ஊரிலில்லை; ஆகையால் விசேஷ திரவியமில்லை, நீங்கள் நமக்கு வேண்டியமட்டும் கடன் கொடுக்க மாட்டீர்களா?

**விசுவாசகாதகன்.**—அண்ணே! நீங்கள் கேட்டாற்கூட நானில்லையென்று சொல்வேனா, ஆனா லிப்பொழு தென்னிடத்தில் ரொக்கமில்லை. இன்னுமிரண்டு மூன்றுநாளில் இருபத்தைந்து லக்ஷம்வரையில் கவர்ன்மெண்டார் நமக்குக் கொடுக்க வேண்டிய பாக்கி வரும்.

**பிரதாபசந்திரன்.**—ஆனாலென்ன செய்யலாம், ஒருபாயஞ்சொல்லுங்கள்.

**திருவேங்கடத்தானு.**—மநடாகருகு செப்பிபம்பிஞ்சேதி தானே.

**பாவாடைஜீத்தர்.**—அப்பனே! நம்முடைய நாட்டுக்கோட்டை நஞ்சுண்ட கண்ட செட்டியை யழைப்பிக்கிறதுதானே.

**பிரதாபசந்திரன்.**—இவர்களெல்லாம் யார் ஸார்?

**விசுவாசகாதகன்.**—இவர்களெல்லாம் நம்மிடத்தில் கடன்வாங்கி வியாபாரம் பண்ணப்பட்டவர்கள், இந்தச் சென்னப்பட்டணத்திலுள்ள குஜாரத்பேட்டையிலிருக்கும் உபேந்திர

தாசுக்கு நாம் கொடுத்திருக்கிறது ஒரு லட்சம். மோகனராம் தர்வாடிக்குக் கொடுத்திருக்கிறது மூன்று லட்சம். குமார கிருஷ்ணதேவுக்குக் கொடுத்திருக்கிறது ஐந்து லட்சம். குபேரசந்திரடாகருக்கு கொடுத்திருக்கிறதுக்குக் கணக்கில்லை. மேலும் நாட்டுக்கோட்டையார்களில், கையங்கி செட்டிக்குக் கொடுத்திருக்கிறது ஏழு லட்சம்; மலைமகளாண்டான்செட்டிக்குக் கொடுத்திருக்கிறது எட்டு லட்சம்; வெள்ளிமலையான் செட்டிக்குக் கொடுத்கிருக்கிறது ஒன்பது லட்சம்; நஞ்சுண்டகண்டசெட்டிக்குக் கொடுத்திருக்கிறது நாற்பது லட்சம்.

**பிரதாபசந்திரன்.**—ஆ! ஆ! ஆ! என்ன அண்டைசுவரியம் அண்ணே! குபேரசம்பத்தைக் காட்டிலும் கொழுத்த சம்பத்தாயிருக்கிறது.

**விசுவாசகாதகன்.**—அதைப்பற்றி யிப்போ பேசுவதி லென்னபிரயோஜனம்? அடே சட்பட் (ஸார்) அடே படீல் (ஸார்) நீங்களிரண்டுபேரும் நாயோட்டம் பேயோட்டமா யோடி நம்முடைய டாகரையும் செட்டியாரையு மிட்டுக்கொண்டு வாருங்கள்! (ஆகா, இதோ) பிரதாபசந்திர ரழைக்கிறதாய்ச் சொல்லுங்கள்.

[சட்பட், படீல் இருவரும் போகின்றனர்.]

**விசுவாசகாதகன்.**—அண்ணே பிரதாபசந்திரரே, இந்த டாகரும் செட்டியும் வந்தால் நீங்களே யவர்களை யொரு பேச்சுக் கேளுங்கள். ஏனென்றால், என்னிடத்திலவாள் விசேஷ கடன் வாங்கியிருப்பதனால் அவர்கள் கொடுக்கும் பணத்தை நான் வட்டிக்குச் செல்லுவைத்துக்கொள்வேனென்று நினைத்து இல்லையென்பார்கள். மேலுமிந்த நாட்டுக்கோட்டையார்கள் மெத்தக்கெட்டவர்கள் எப்பொழுது பார்த்தாலும் சமாராதனைகளையும் கும்பாபிஷேகங்களையும் கோயிற்றிருப்பணிகளையும் செய்கிறார்களே யொழிய நல்ல பிளஷர்களை யனுபவிக்கிறதில்லை. ஆகையால் நாமவர்களை லைக் பண்ணுகிறதில்லை, நானிங்கேயிருந்தா லவர்கள் பயப்படுவார்கள். நானுள்ளே போயிருக்கிறேன். (உள்ளே போகிறான்.)

[சட்பட் படீல் இவர்கள் ஒருசெட்டியாருடனும்
டாக்கருடனும் வருகிருர்கள்.]

சட்பட்.—இதோ வந்துவிட்டார்கள்; உட்காருங்காணுஞ் செட்டியாரே - கூர்ச்சுண்டண்டி டாகருகாரு.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

தண்டமோய் குபரே சந்திர டாகரு மாகு பாங்கி
பண்டுலோ நுஞ்சி வச்சே பைகமு ராலே திங்கா
அண்டிமாட் லேக நீவு ஐதுவே விச்சி ரேபு
தண்டலு லெக்க லோன தாகலு சேஸு கோமீ.

டாகர்.—

ஐதுவேல் ரூபா கேமி அடிகின மட்டு மீகு
லேதனி செப்து மாமீ லெக்கலு கூடனேலா
பாதுஷா மீரு மேமு பண்ணியன் கனக னேமீ
ஆதா வுண்டே மாகு அந்தனே சாலு னையா.

இங்கா மீகேமி காவலெனோ அந்தா செப்பண்டி இப்பிஸ்தாம்.

பிரதாபசந்திரன்.—ஓய் செட்டியாரே, நீர் க்ஷேமமாயிருக்கிறீரா? உமக்கெங்கே வியாபாரம் நடக்கிறது?

செட்டி.—திருவுளம்பற்றவேண்டும்: நாமிருக்கிறது தேவகோட்டை. தின்னல்வேலிச் சீமை. தூத்துக்குடித்துறை. கொளம்பிலெ கோட்டையிருக்கு. மெத்த யாவாரம் நடக்கிறது. கொச்சி-பொம்பாய்-காசி-கலிக்குத்தா-கோரங்கி-சிங்கப்பூர்-பிநாங்கு-யாவா-பொறணு-மலாக்கா-சலப்பே-ஜப்பான்-சீனு-சீயம்-இங்கே யெல்லாங் கப்பல் யாவாரமுண்டு. உங்கள் புண்ணியத்தில்வேண்டிய சம்பத்திருக்கு. நேற்றுப் பட்டாங்குக்கு இரண்டு கப்பலரிசி யேத்தினேன், ஒரு கப்பல் பணம் வரும்.

பிரதாபசந்திரன்.—நல்லது சில வஸ்துக்கள் உம்மிடத்தில் நமக்கு வேண்டியிருக்கிறது. அதைக் கடனுகக் கொடுத்து அப்புறம் வாங்கிக்கொள்ளும்.

செட்டி.—திருவுளம்பற்றவேண்டும்: நாட்டுக்கோட்டையானில்லெயெண்டு நாவால் சொல்லான், உடுக்கிறது முண்டானுலும் ஊழியன் மேலான காரியம் செய்திருக்கு.

பாவாடைஜித்தர்.—அப்பனே, செட்டியார் மெத்த மகாத்துமா. நம்மிடத்தில் ரொம்ப பக்தியுள்ளவர். நந்தியடிகளுக்குச் சமானமானவர்.

பிரதாபசந்திரன்.—நல்லது செட்டியாரே, நீர் போய்வாரும். நமக்கு வேண்டியபோது உமக்குச் சொல்லியனுப்புகிறோம்.

(செட்டியார் செல்கிறார்.)



# அங்கம்—VI



## களம்—I.

இடம்: விசுவாசகாதகன் வீடு.

பாத்திரங்கள்: விசுவாசகாதகன், பாவாடைஜித்தர், திருவேங்கடத்தானு, சட்பட், படீல், வேஷாக்சுந்தரம் முதலியோர்.

**விசுவாசகாதகன்.—**

விருத்தம்.

வாருமோய் ஜித்த ரேநம் வகையுள வையரே நாம்
தீரனும் ப்ரதாப சந்த்ரன் சிந்தையை மயக்கி விட்டோம்
கோரிய படியே யின்னுங் குரங்கைப்போ லாட்ட வேண்டும்
நீரும்நாம் சொல்லு கின்ற நிலையினில் நிற்கின் றீரா.

**பாவாடைஜித்தர்.—**அப்பனே, பூதகணங்கள் சிவபெருமானிலையி லெப்படி நிற்குமோ அவ்விதமாக நிற்கிறேன். காற்றுள்ள போதே தூற்றவேண்டும்.

**திருவேங்கடத்தானு—**தேவரா, நேனேமி தூளியண்டே நிர்த் தூளியனேவாடு தமலேவகுடனு, சூசிரம்பண்டே கால்சி வஸ்தானு; நந்நுகுறிஞ்சி சிந்தவத்து.

**விசுவாசகாதகன்.—**அடே சட்பட்.

**சட்பட்.—**ஸார்.

**விசுவாசகாதகன்.—**வேஷாக்சுந்தரத்தைக் கூப்பிடு.

**சட்பட்.—**அப்படியே.

[சட்பட் செல்கிறான். சற்றுப் பொறுத்து வேஷாக்சுந்தரத்தோடு வருகிறான். விசுவாசகாதகன் வேஷாச்சுந்தரத்தை நோக்கி.]

**விசுவாசகாதகன்.—**

தரு. இராகம் - நாராயணி. சாபுதாளம்.

பல்லவி.

இதுதானடி சமயம் - பணம்பறிக்க-இதுதானடி-சமயம்.

அநுபல்லவி.

ததியிதாமடி பலவிதத்தினில்
சாரமாய்-தீரமாய்-தூரமாய்-பாரமாய்
சதியிலவனை மாட்டிவிடவே. (இது)

சரணங்கள்.

1. சென்றேனவனிடத்தில் பலவிதமாய்
என்றுமொருவருஞ் சொல்லொணுவிதம்
இட்டமாய்-சட்டமாய்-திட்டமாய்-ஸ்பட்டமாய்
உனைவியந்து பேசினேனடி. (இது)

2. மையல்கொண்டுனையே அழைத்துவர
வெய்யமாரன்சரந்தைக்கவே
வேகமாய்-ஏகமாய்-தாகமாய்-சோகமாய்
விடுத்தானென்னையெனச் சொன்னேனே. (இது)

3. உடனேயவளிடம்நாம் போவோமென்று
படபடப்புடனெழுந்தான் மிக
பாடியே-நாடியே-ஓடியே-தேடியே
பதறவேண்டாமென்று வந்தனன். (இது)

ஷோக்சுந்தரம் —

கரு. இராகம் - கலியாணி. ஏகதாளம்.

பல்லவி.

நீடாழியுலகினில் நிகருண்டோ வுமக்கு.

அனுபல்லவி.

கோடானகோடிபேர்களென்னசொன்னாலும். (நீடாழி)

சரணங்கள்.

1. வேசைகளுக்குமைவிடவிதியுண்டோ
விரும்பியுமையடுத்தோர் வீணவதுண்டோ
காசினியிலுமைப்போலக் கர்ணனுண்டோ
கல்வியினிலுமைப்போலச் செல்வனுமுண்டோ. (நீடாழி)

2. தந்திரங்கள்செய்வதி லுமைப்போலுண்டோ
சாதுரியவார்த்தைதேவ மந்திரிக்குண்டோ
சந்திரனுக்குமும்மைப்போலழகுண்டோ
சகலசுகந்தருவாருமைப்போ லுண்டோ. (நீடாழி)

3. எடுத்ததைமுடிப்பதிலுமைப்போ லுண்டோ
எவராயினுமுமக்கிணங்காருண்டோ
படித்திலாதபேதைநான்பகரலுமுண்டோ
பணிபதியுஞ்சொல்லவென்றாலாவதுமுண்டோ. (நீடாழி)

விசுவாசகாதகன் —ஆ! ஆ! ஆ! ஷோக்! உனக்கு நம்மிடத்தில் எவ்வளவு பிரீதியிருக்கிறது, இப்படி யாருக்கிருக்கும்! நல்லது நான் சிலவிஷயங்கள் சொல்லுகிறேன், கவனமாய்க் கேள்,

தாசி வீட்டுக்குப்போகிறவர்களில் பிரபுக்களிருக்கிறார்கள், சாமானியருமிருக்கிறார்கள், பஞ்சைகளு மிருக்கிறார்கள். இவர்களிற் சிலருக்கு வாங்கபோங்கவென்று விசேஷமரியாதை செய்யவேண்டியது; சிலருக்கு வாபோவென்று சமானமாய்ச் சொல்லவேண்டியது; சிலருக்கு வாடாபோடாவென்று பிரியாய்ச் சொல்லவேண்டியது; இதெல்லாமுனக்குத் தெரியுமே.

**ஷோக்சுந்தரம்.**—ஆ! என்ன போங்க, மீன்குட்டிக்கு நீச்சல் கற்பிக்க வந்தீர்களே. இருளனுக் கெலிபிடிக்கத் தெரியாதா? தாசிக்கும் டக்குகள் சொல்லிக்கொடுக்கவேண்டுமா ?

**விசுவாசகாதகன்.**—வெல், அது அப்படியிருக்கட்டும். பிரதாபசந்திரன் மகாபிரபு வெகு மரியாதையான மனிதன். அவனிடத்தில் நீ முதலில் வெகு மரியாதையாய் உனக்குத் தெரிந்த இந்திரஜாலம், மகேந்திரஜாலம், கஜகர்ணம், கோகர்ணம் இதுகளையெல்லாங் காட்டவேண்டும். உனக்கென்ன வயது?

**ஷோக்சுந்தரம்.**—ஆ! அதென்ன அப்படி கேட்கிறீர்களே, எனக்குப் பன்னிரண்டுவயதிலே டாகர் வைத்துக்கொண்டார். அஞ்சு வருஷங்கழித்து முதலியார் வைத்துக்கொண்டார். அப்புறம் நாலுவருஷம்பொறுத்து உங்களிடத்தில் வந்தேன், இப்போதுதான் நாலுவருஷமாச்சே.

**விசுவாசகாதகன்.**—ஆ! அப்படியா, பிரதாபசந்திரனுக் கிது நல்ல கொழுத்த பத்தொன்பது வயது. சிறு பிள்ளை.

**ஷோக்சுந்தரம்.**—இருக்கட்டுங்க; ஆரூர்க் கமலம் கிழவியாய்ப் போனபின்பும், சிங்காரித்துக்கொண்டு கச்சேரிக்கு வந்தால் சிறுபிள்ளைகளுக்கெல்லா மனங் கலங்கும்.

**விசுவாசகாதகன்.**—ஓய் திருவேங்கடத்தானு, நேரமாய்போயிந்தி, தோமதிரை கட்டில் சிங்காரிஞ்சினுவா, நேனு செப்பின தாராய்களெல்லாங் கொண்டுவந்து கட்டினுவா, மல்லிகை, முல்லை, இருவாட்சி, சம்பகம், மனோரஞ்சிதம், ரோஸ், பாரிஜாதம் முதலிய புஷ்பங்களைப் பரப்பி அதன்மேல் ரவைசல்லா விரித்துப் பன்னீர் தெளிச்சினுவா, விசித்திரமான பொம்மைகள், படங்கள், கொண்டுவந்து படுக்கைவீட்டில் கட்டினுவா?

**திருவேங்கடத்தானு.**—தேவரா, அந்தா சேசினுனு.

பாவாடைஜித்தர்.—அப்பனே! கூண்டு தயாராச்சுது, குருவிதா னின்னும் வரவில்லை.

விசுவாசகாதகன்.—ஓய் ஜித்தரே, நாம் சொன்னபிரகாரம் நீர் போய், புனுகு, ஜவ்வாது, ரோஜத்தர், சந்தனஅத்தர், ஹிரா னத்தர் இவைமுதலிய பரிமளதிரவியங்களை தயார்செய்தீரா?

பாவாடைஜித்தர்.—அப்பனே யெல்லாந் தயாராயிருக்கிறது.

விசுவாசகாதகன்.—அடே சட்பட், (ஸார்) அடே படீல், (ஸார்) நம்முடைய பாய் முத்தையன், மெக்டோவல் ஷாப்புக்குப் போய் நாம் சொன்னபிரகாரம் விதம்விதமான ஸ்வீட் ஒயின் களையும், சேம்பர் ஒயின்களையும் கொண்டுவந்தானா?

பாவாடைஜித்தர்.—அப்பனே, யெல்லாம் நான்தான் வாங்கிவைத் தேன். ஒவ்வொரு புட்டியைப் பார்த்தாற் கெம்புவை யுருக் கிக் கொட்டினாற்போலிருக்கிறது; எடுக்கும்போ தொன் றுடைந்து போய்விட்டது; வாயில் வார்த்துக்கொண்டேன். ஆகா! அது எவ்வளவு ருசியாயிருக்கிறது.

விசுவாசகாதகன்.—ஓய் திருவேங்கடத்தானு, நல்லது நேரமாய் விட்டது, போய்ப் பிரதாபசந்திரனை யிட்டுக்கொண்டுவாரும். அடே சட்பட், படீல், நீங்களிருவரும் வெகு ஜாக்கிரதையாய் வெய்ட்பண்ணவேண்டியது. வெல் ஷோக், நாய்வேஷம் போட் டால் குலைக்கவேண்டும். நானுன்னைத் தந்தைபோற் காப் பாற்றினேனென்று சொல்லியிருக்கிறேன். ஆகையால் நீயு மிவரு மொன்றாயிருக்கும்பொழுது நானிங்கே யிருக்கக் கூடாது.

தரு. இராகம் - தோடி. ரூபகதாளம்.

பல்லவி.

பார்க்கவேண்டுமெடி - உன்திறத்தை - பார்க்கவேண்டுமெடி.

அனுபல்லவி.

ஆர்க்குமகப்படாத பெருஞ்சாமி
அன்றியுந் துஷ்டருக்குக் காலநேமி
தீர்க்கயோசனையற்ற பெருங்காமி
செயலிலாதவனென்றேசொல்லும் பூமி. (பார்க்க)

சரணங்கள்.

1. எத்தனைபேரையோ மயக்கினவுனக் கிதுசெயலரிதா
மத்தகஜத்தை விழுங்கிய அம்மைக்கு மசகமும்பெரிதா
சித்தஜன்பாதையால் நாணமும்விலங்க
செயலறியாத பேதையாத்துலங்க
பத்திரவிழிக ளவன்மேலிலங்க
பைந்தொடியேயவன் மதியுங்கலங்க. (பார்க்க)

2. மயிலேகுயிலேயுனையன்றி வேறுவழியில்லையென்னவே
பயிலுமன்மதன்கணைவருத்துது பாரடியென்றுபன்னவே
தயவுசெய்து சற்றுமுகங்காட்டி
தந்திரமாயங்களி லவனைமாட்டி
பயமில்லாமலே காமத்தணல்மூட்டி
பாரடிவந்தமட்டுக்கு மென்சீமாட்டி. (பார்க்க)

3. அவனுக்குள்ளபொருளுக்குலகினி லளவேயில்லையடி
கவலைதீரநீயதைக்கிரகிக்கின்ற காலமுமொருநொடி.
நவமணியேயுனை யென்றுமடுத்து
நாங்களிருக்கின்றே மெங்கட்குக்கொடுத்து
குவலயவாலிபர் களைக்கெடுத்து
கோதையேவாழடி நல்லபேரெடுத்து. (பார்க்க)

திருவேங்கடத்தானு.—தேவரா - நந்நு மறசிபோவத்து, மீகு தாஸாநு தாஸுண்ணி.

பாவாடைஜீத்தர்.—அப்பனே, நானுன்னை வெள்ளிமலையாய் நம்பியிருக்கிறேன் - உன் தயவால்தான் நம்முடைய பிட்சாடன மடத்தைச் சரியாய்க் கட்டவேண்டும்.

விசுவாசகாதகன்.—நல்லது அல்லாம் நமக்குத் தெரியுங்காணும்.

(விசுவாசகாதகன் போகிறான்.)

ஷோக்சுந்தரம்.—அடி மத்தாப்புசுந்தரம், அடி பத்மாட்சி, (எனம்மாள்) நம்முடைய தம்புரைக் கொண்டுவாருங்கள். அடே சட்பட் படீல் (எனம்மாள்) நீங்கள் பிரதாபசந்திரர் வருகிறாரா பாருங்கள்.

சட்பட்.—அம்மா அதோ வருகிறார் - கருந்தூள் செந்தூள் பறக்குது.

படீல்.—ஆகா! அந்தக் குதிரை யெப்படி யோடுகிறது! அடே சட்பட் கோச்சுமாம போட்டிருக்கிற டொப்பியே கோடி ரூபாய் பெறும்போலிருக்கிறது.

சட்பட்.—ஏண்டா பொட்டைக்கண்ணு, அவன் டொப்பி போன்னுடா?

படீல்.—அடே நாம் பொட்டைக்கண்ணனுடா? ஆகட்டும் நீ நேற்றுக் கள்ளுக்குடித்ததையே அதைச் சொல்லுகிறேன்.

சட்பட்.—டா யெம்மன்னு, யாரோரடேடா.

படீல்.—ஸாரோரடேடா.

சட்பட்.—யோக்கியா யோக்கியஸ்தா வானரா உற் எண்ணுனும், ஸார் ஆச்சு, கிராச்சு, அவன் கெட்டான்போடா; ஊராம் வீட்டுப் பிள்ளைகளையெல்லாங் கெடுக்கிறான்; எங்கப்பாணை யெனக்குக் கள்ளுக்குடிக்கவே தெரியாது - அவன்தாண்டா கத்துக்கொடுத்தாம்.

படீல்.—ஆமாண்டா, எனக்குச் சுருட்டுபிடிக்கவே தெரியாது-அவன்தாண்டா கத்துக்கொடுத்தாம்.

சட்பட்.—அடே அவன் எதிரே வந்தானு (விரலை மடக்கி.) இப்படி குத்துவேண்டா (என்றிடிக்கிறான்.) அதோபார், அவன் பெயரென்ன? பரிதாபசந்திரன்-ஆப்பிட்டுக்கின்னு பார்த்தையா?

படீல்.—அடே - தூ! நோவுதடா.

சட்பட்.—வந்தான்டா-வந்தான்டா-அம்மா வண்டி வந்துவிட்டது.

(பிரதாபசந்திரன் வருகிறான்.)

பாவாடைஜீத்தர்.—அப்பனே! நீ வந்தது நல்ல சமயம்! என்ன போ ஷோக்சுந்தரமிருக்கிறளே, உன்னிடத்திலுள்ள பிரீதியினாலே வாடி வதங்கியிருக்கிறாள். திருஞானசம்பந்தமூர்த்தியாருடைய அங்கம்பூம்பாவைக் கதையாய் அவளுக்கு நீ மறுபடி யுயிர்கொடுத் தெழுப்பவேண்டும்.

திருவேங்கடத்தானு.—ஒரே பாவாடா, இதோ நேறுந்நு வச்சினுநு, மகாபிரபு வச்சினுறு. ஆகா! வாரி சுந்தராணிகின்னி போகாணிகின்னி நேனேமி செப்பபோதானு.

பாவாடைஜீத்தர்.—அடேபோடா, அவரழகைப்பார்த்தால் அவரைக் கவ்விக்கொள்ளலாமாவென்று தோன்றுகிறது; போகமென்கிறையே அந்தப் பேச்செனக் கேதுக்கடா? பேரின்பங் கண்டார்க்குப் பெண்ணைப்பற்றி யாவதென்ன?

திருவேங்கடத்தானு.—ஒரே முண்டாகொடுகா, நீயப்பதோடு நீகு தெலியதா ரவந்தசெப்பு.

பாவாடைஜீத்தர்.—அடே அது எப்படியென்றால், நல்ல துவையல், பருப்பு, நெய், பாயசம், வடை, போளி இதுகளையெல்லா மொன்றாய்ப் பிசைந்து சாப்பிட்டாற்போலிருக்கும்.

திருவேங்கடத்தானு.—ஒரே திண்டிபோது முண்டாகொடுகா, சாலு நிலுபுறு.

பிரதாபசந்திரன்.—(பாவாடைஜீத்தரையும் திருவேங்கடத்தானுவையும் நோக்கி,) அய்யா ஜீத்தரே, யேமோய் அய்யவாரு; மனம் லோநா போவச்சுநா?

பாவாடைஜீத்தர்.—அப்பனே இந்த வேடிக்கை சற்றே பார்; உன்னிடத்திலென்ன மந்திரமிருக்கிறதோ தெரியவில்லை. இந்தப் பெண்ணினுடைய மனமெப்படி கலங்கிப்போச்சுது பார்த்தையா? அடி மத்தாப்புசுந்தரம், அடி பதுமாட்சீ, உள்ளே வரலாமா?

மத்தாப்புசுந்தரம்.—(ஸ்கிரீன்டோருக்குள்ளிருந்து.) நல்லா வரலாமாவென்று கேட்டீர்கள். அம்மாள் சாகப்பிழைக்கக் கிடக்குறாளே இன்னுமவர் வரவில்லையா?

திருவேங்கடத்தானு.—அவரவ்வளவு சீக்கிரத்தில் வந்துவிட்டாரா?

ஷோக்சுந்தரம்.—(கொஞ்சம் மூர்ச்சை தெளிந்ததுபோல் நடித்து) ஆ! ஆ! ஆ!

தரு. இராகம் - சஹானு. சாபுதாளம்.

பல்லவி.

மாரன் பிரதாபசந்திர - தீரனுமேனினி-வந்திலனேபாரடி.

அனுபல்லவி.

சோருதடிமனந் தோகையே யீதெல்லாந்
துரைக்குப்போய் நீ சொல்லடி-மனங்கல்லடி. (மாரன்)

சரணம்.

1. இதுவரையிலுமவள் எவர்முகமும் பார்த்ததில்லை சத்தியமென்றும்
பதுமினியும்மீது மோகங்கொண்டிருப்பது-பார்க்கப்படாதென்றும்
மதன்விடுந்தூதைப்போ லதிவேகமாய்ச்சென்றே
விதம்விதமாயுரைப்பீர்-மனங் கரைப்பீர். (மாரன்)

(தம்புரைக் கீழேவைத்துவிட்டுச் சோர்ந்து சாய்கிறாள்)

பிரதாபசந்திரன்.—ஓ டீயர்!

(குதித்தோடி ஸோபாமேலுட்கார்ந்து மூர்ச்சையிலிருக்கும் ஷோக் சுந்தரத்தைப் பார்க்கிறான். தோழிகள் வெட்டிவேர் விசிறி வீசுகிறார்கள்.)

திருவேங்கடத்தானு.—புலி போனுலோ படிந்திரா.

பாவாடைஜீத்தர்.—அப்டே நாம் போகலாம்வா. தேவியாரோடு சிவ பெருமானே யிருக்கவேண்டியது. நம்முடைய குருவிடத் திற்போய் நடந்த சங்கதியைச் சொல்லுவோம்.

திருவேங்கடத்தானு.—ஓரே வாடு குருவா? ஏமகாதகுடு முண்டா கொடுகு, எந்தபனி சேசினுடு.

(இருவரும் போகிறார்கள்-ஸ்கிரீன்டோ ரெடுத்துவிடப்படுகிறது.)

மத்தாப்புசுந்தரம்.—

கொச்சகம்.

பன்னாளு மும்முடனே பழகின வளைப்போல
மின்னாளிவளடையும் வேதனையைச் சொல்வதற்கு
என்னால் முடியுமோ நீ ரெதிராக வந்துவிட்டீர்
மன்னா இனிமேலிம் மாதரசி யும்வசமே.

பதுமாட்சி.—

மாயப் பொடிதூவி மதிமயங்கச் செய்துவிட்டீர்
தாயென்றுந் தோழியென்றுஞ் சற்றேனும் பார்ப்பதில்லை
வாயுமிக நொந்திந்த மாதரசைத் தேற்றுதலால்
ஆயினும்நீர் வந்துவிட்டீ ரம்மாளுந் தெளிவாளே.

மத்தாப்புசுந்தரம்.—அடியம்மா இதோ வந்துவிட்டார், இன்னு மேன் வருத்தப்படுகிறாய்.

பதுமாட்சி.—எனக்கும் பதினாறு வயதாய்விட்டது, நான் புத்தி யறிந்து இப்படித் துக்கப்பட்டவளைப் பார்க்கவில்லை. என் னடி எனக்கண்ணா மூணுவயது சின்னவள், நானென்ன சொன்னாலுங் கேட்கவில்லையே - அடியம்மா சுந்தரம் எழுந் திரடி.

மத்தாப்புசுந்தரம்.—அடியவள்பேர் அதல்லடி; அய்யா சும்மா செல் வத்திற்கு ஷோக்சுந்தரமென்று பேரிட்டார்; அவள்பேர் ஜகன்மோகன.

ஷோக்சுந்தரம்.—(விழித்துப் பார்த்து.)

தரு. இராகம்-கண்டா. சாபுதாளம்.

பல்லவி.

ஏனேயித்தனை கல்நெஞ்சுமக்குமே யேற்கா தேற்காதிதே.

அநுபல்லவி.

ஆனாலுமிப்படிசெய்யலாமோ
அரிவையர்மனநொந்தாலாடவர்க்கென்னமோ. (ஏனே)

சரணங்கள்.

1. வையகத்தின்வழி யொன்றுந்தெரியாமல்
வளர்ந்துதாய்க்கீழ்ப்பிள்ளை யாகியிருந்தேனை
மையல்மூட்டியே மதிமயங்கச்செய்த
மாரனேயென்னைக்கை சோரவிட்டிருந்தீரே. (ஏனே)

2. வந்ததும்போனது மாச்சுதல்லாலன்று
மனமகிழ்ந்தென்னேடு வார்த்தையாடினதுண்டோ
நொந்தரைப்பட்டது மென்மனதேயன்றி
சுந்தரரேநீர் மறந்தீரையோவென்னை. (ஏனே)

3. மாதர்மனதேழை மனதென்றுசொல்கிற
வார்த்தைபழுதோவீண் வார்த்தையதைப்பற்றி
எதுக்குஇத்தனை நாள்சென்றபின்னுமை
எந்தத்தெய்வந்துணை வந்துதந்ததோசாமி. (ஏனே)

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - கவுளிபந்து. தாளம் சாபு.

பல்லவி.

நானென்னசெய்வேனடி.

சரணங்கள்.

1. நானென்னசெய்வேனே நடுவிற்பலதடை
யானதைச்சொல்வேன்கேளடி - அவைகளினூற்
போனதுமித்தனைநாளடி - மனவருத்தம்
எனதைவிட்டுமீளடி - தயையுடன்
மானேயெனையாளடி - என்றென்றைக்கும். (நானென்ன)

2. தோகையேநீயன்று தூதாயனுப்பிய
ஸ்நேகன்செய்தானத்தனே - உன்னிடத்திற்
போகவேண்டுமென்றெத்தனை - சொன்னாலுமே
ஆகட்டுமென்றித்தனை - நாளோட்டினன்
நோகவேண்டுமெப்பித்தனை - பெண்ணரசே. (நானென்ன)

3. அன்னமேயுனைவிட்டே அப்புறம்போனபின்
என்னென்றுசொல்வேனடி - நான்பட்டது
பின்னெவனறிவானடி - அதையெல்லாம்
பன்னிறுலென்னமடி - போனதுபோச்சு
இன்னும்துயரமேனடி - பெண்ணரசே. (நானென்ன)

ஷோக்சுந்தரம்.—

தரு. இராகம் - கன்னடா. ஆதிதாளம்.

பல்லவி.

என்னசெய்தான்கேளுமே கன்னல்வில்வேளுமே.

அநுபல்லவி.

மன்னவீரன்றுவந் தென்னைவிட்டுச்சென்றபின். (என்ன)

சரணங்கள்.

1. அன்னமேதாகாரமே தாசையுமற்றொன்றிலே
துன்னையன்றிநெஞ்சம்வே றொன்றையுநினைத்ததே
தின்னவிதமாகநா னிம்சைப்படும்வேளையில்
சின்னபின்னமாகவே செந்தணலில்வேகவே. (என்ன)

2. அப்போதைக்கப்போது நீரண்டையில்வந்தாற்போல
திப்பிரமைகொண்டெங்கணும் தேடியுங்காணமலே
எப்படிசகிப்பதென் றேங்கிக்கண்ணீர்சோர்கையில்
தப்பிப்பிழைப்பேனென சாமிநினைத்தேனுநான். (என்ன)

3. பாங்கியரென்வேதனை பார்த்துச்சகிக்காமலே
தேங்கித்திகைத்தெப்படித் தேற்றுவதிம்மாதையென்
றேங்கவர்தஞ்சிந்தைநொந்தழுதுவிதிநோகையில்
வேங்கையைப்போற்பாய்ந்துதன் வெங்கணையாற்காய்ந்துமென். (என்ன)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

கேளடி பெண்ணே யுன்னைக் கிருபையின்றி வாட்டிவந்த
வேளுமென் மதிமயங்க விடுகிறான் கணைக ளந்தோ
காளையா மவனை வெல்லக் கருணையோ டின்று நீயு
மாளடி யென்னைச் சற்று மாடங்க மின்றித் தானே.

ஷோக்சுந்தரம்.—ஆ! என்னபோங்க, இந்தத் தேகம் உங்களுக் கன்றி மற்ற யாருக்கு. ஆனால் நான் சாதாரணமான தேக சுகங்களின்பொருட்டல்ல உங்களிடத்தில் பிரீதிவைத்திருக் கிறது; நானிதுவரைக்கும் அனேக ஜன்மங்களிற் பண்ணி யிருக்கும் புண்ணியமெல்லாம் ஒரு ரூபமாய் வந்திருக்கிற வரைப்போலும் கேவலம் தெய்வீகமான சுகத்தை யெனக் களித்து என்னைச் சுகிப்பிக்கவந்த கடவுளைப்போலும் இம் மையி லென்னைவிட்டுப் பிரியாத கணவரைப்போலும் நினைத் திருக்கிறேன். ஆனால் மகாபிரபு உங்களுடைய சித்தமெப் படியோ.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

ஏதுக்குப் பெண்ணே நீயு மிப்படி சொல்லுகி ன்றாய்
சோதிக்க வேண்டா மென்னைச் சுந்தரி யொன்று கேளாய்
ஆதித்த னுதித்தல் மேற்கி லானாலு மாகு நானுன்
மீதினில் வைத்த வாசை விடுவேனென் றெண்ண வேண்டாம்.

ஷோக்சுந்தரம்.—மஹாபிரபு! பவுர்ணமியில் சந்திரகாந்திக்குச் சந் தேகமுண்டா? உங்களுக்கென்னிடத்தி லன்பிருக்கிறதற்குக் கேட்கவேண்டுமா? ஆனாலந்தச் சந்திரனை மேகங்கள் மறைக் கிறதுபோல உங்கள் மனதை யார் கலைத்துவிடுகிறார்களோ வென்றென் னேழைமனது கலங்குகிறது. பிரீதிக்குப் பங்கம் வந்தால் நான் பிழைக்கமாட்டேன், என்னவென்று கேட் பீர்களோ?

தரு. செஞ்சுருட்டி ராகம். ஆதிதாளம்.

பல்லவி.

என்னத்துக்கோவுயிர் - இன்னல்படுவதற்கன்றி.

அநுபல்லவி.

மன்னவரேயென்னை மறந்துநீர்விடுங்காலே. (என்ன)

1. கண்களிருந்துமென்னே கண்டுகளிக்காமலும்மை
பெண்டுகளிகழ்வாயென்னைப் பேசிக்கொண்டிருக்கையில் (என்ன)

2. கன்னமிருப்பதினாலென் கனிக்குநல்முத்தமின்றி
அன்னநடையாரென்னை யலட்சியமாய்ப்பேசுங்காலே. (என்ன)

3. தேகமிருந்துமென்னோ சேர்ந்துமையணையாமல்
தோகையர்களென்னையெங்கும் சொற்பமாய்ப்பேசும்போதே. (என்ன)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

அந்தணர் மீதி லாணை யன்புட னமைய ளித்த
தந்தைதாய் மீதி லாணை சகலதெய் வத்தி னாணை
சுந்தரி யுன்மீ தன்பு துரும்புமே பிசகா தென்றும்
இந்தநல் வார்த்தை நம்பி யென்னைநீ யாண்டு கொள்ளே.

ஷோக்சுந்தரம்.—ஆ! மகாபிரபு, என்னைப்போல பாக்கியசாலி யெவளிருக்கிறாள்; இந்த லோகமெங்கும் புகழும்படியான அழகும் கல்வியும் செல்வமும் பெற்றிருக்கும் நீங்க ளிவ்வளவாசை யென்மீதில் வைத்திருக்க எனக்கென்ன குறை. எங்க ளக்காள் பதுமநயனா இருந்தாள், அவளுக்கிப்படி கிடைத்ததா? எங்கள் சித்தி ஹம்ஸகமனா இருந்தாள், அவளுக்கிப்படியுண்டா? எங்களத்தை சொர்ணவல்லி இருந்தாள், அவளுக்கிப்படி யுண்டா? ஆகா எப்படி யிசைந்துவிட்டது.

கொச்சகம்.

மணமார் திருமலர்க்கும் வண்டினிற்கு மொத்ததுபோல்
குணமா ருமக்கிசைந்த கோதையென்றீ ராதலினால்
கணிகா குலத்துதித்த கர்மந் தொலைத்துவிட்டேன்
துணையாக வென்னுயிர்க்குத் தோன்றிவந்த சுந்தரரே.

(பிரதாபசந்திரனும் ஷோக்சுந்தரமும் ஸோபாவிட்டெழுந்து நிற்கிறார்கள்.)

மத்தாப்புசுந்தரம்.— அடி பதுமாட்சி, பார்த்தையா, நம்முடைய அக்காளிருக்கிறாளே அத்தான் மயக்கத்தில் விழுந்துவிட்டாளேயன்றி, நாம் படும் வருத்தத்தைப் பார்த்தாளா?

பதுமாட்சி.—ஆமாண்டி; நாமித்தனை நாழிகையாய் விசிறுகிறோமே ஏதோ நிறுத்து செய் என்று ஒரு பேச்சுண்டா?

மத்தாப்புசுந்தரம்.—அடிபோடி அத்தானைப் பார்ப்பாளா. மத்தாப்பைப் பார்ப்பாளா?

பதுமாட்சி.—அடிகெட்டேனே, கெட்டேனே, பக்கத்துப்புருஷனைப் பார்ப்பாளா பதுமாட்சியைப் பார்ப்பாளா?

மத்தாப்புசுந்தரம்.—அடி எனக்கிப்போதுதா னக்கா சம்புனு பண்ணிக்கொடுப்பா.

பதுமாட்சி.—ஆ! நீமாத்திரம் குலுக்கலாமென்று பார்க்கிறையோ, எனக்கு வங்கி பண்ணிக்கொடுப்பா.

ஷோக்சுந்தரம்.—மகா பிரபு, இந்தப் பெண்கள் ரொம்பவுஞ் செல்வமாய் வளர்ந்தவர்கள்; ஒருநாளும் விசிறியெடுத்து விசிறினதில்லை. ஆனால், தாங்கள் வரும்போது என் வேலைக்காரிகள் கிட்ட வரக்கூடாதென்று இவர்கள் விசிறிக்கொண்டிருந்தார்கள். இவர்களுக்குக் கபடங் குச்சிதம் ஒன்றுந் தெரியாது, இல்லாவிட்டால் இப்படிச் சொல்லுவார்களா?

பிரதாபசந்திரன்.—ஓ! மெத்தவும் புத்திசாலிகள்-தாசிகள் வீட்டில் இவ்வளவு மரியாதையும் பெரியமனுஷத் தன்மையுமிருக்கிறதென்று நமக்குத் தெரியாமற் போய்விட்டது. இப்படியிருக்க லோகத்தில் ஏனோ வீணாயவர்களை யவதூறு செய்கிறார்கள். ஆனால் தோண்டத் தோண்டக் கிணறூறும் என்பதுபோல நமக்கு மின்னும் போகப்போக இவர்களின் பெருமை தெரியும்.

ஷோக்சுந்தரம்.—

கொச்சகம்.

பார்த்தவுட னும்மிடத்திற் பதிந்தமைந்த தென்மனமும்
கீர்த்தியுள வென்துரையே கிளர்மா முடியரசே
சேர்த்தணைத்து முத்தமிட்டுச் சிந்தைமகிழ்ந் தென்மையல்
தீர்த்திடுதலுன்கடனே திரிலோக சுந்தரனே.

பிரதாபசந்திரன்.—

(ஷோக்சுந்தரத்தின் தோளிற் கைபோட்டுக்கொண்டு.)

தரு. இராகம் - ஹம்ஸத்வனி. ஏகதாளம்.

1. வாடிகண்ணே வாடிகண்ணே வாடிகண்ணே நீ
தாடிமுத்தந் தாடிமுத்தந் தடையேனினி

2. மோடிசெய்வ தேனோஇனி முன்பின்பாராமல்
வாடிபிழைக் கேனடிநீ வந்துநேராமல்

3. மாரன்ஜய வீரனினி வாட்டச்சகியேன்
காருணியத் தோடுமெனைக் காக்கத்தடையேன்

4. கேளடியென் கண்மணியே கேளடியேனுன்
ஆளடிநீ யாளடிஎன் னுவிசோராமுன்.

(பிரதாபசந்திரனும் ஞானசுந்தரமும் உட்செல்கிறார்கள்.)



# அங்கம்—VII

## களம்—I.

இடம்: ஒரு சிங்காரத்தோட்டம்.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், ஷோக்சுந்தரம், விசுவாசகாதகன், திருவேங்கடத்தானு, பாவாடைஜித்தர், சட்பட், பஉல் முதலியோர்.

[பிரதாபசந்திரனும் ஷோக்சுந்தரமும் ஒரு சோபாவில் அமர்ந்திருக்கின்றனர். வானத்தில் சந்திரன் உதயமாகிறது. அதை ஷோக்சுந்தரத்துக்குக் காட்டி.]

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

என்னடி பெண்ணே யின்றைக் கெழுந்திட்ட திங்க ளந்தோ
தன்னிற மாறி வீணாய்த் தவிக்கிறான் களங்க முற்றே
உன்னுதல் கண்டோ வன்றி யுன்னொளி தனக்க ழிந்தோ
என்னுயிர்க் குயிராய் நிற்கு மிறைவியே சொல்லாய்ச் சற்றே.

உண்மைநான் சொல்வ திந்த ஒப்பற்ற தோட்டந் தன்னில்
தண்மையாய் வீசுங் காற்றுந் தையலே யுன்னு யிர்ப்பே
வெண்மையாய்க் குவிந்த முல்லை மெல்லரும் புந்தன் பல்லே
திண்மையோ டனங்கன் வீசல் தெரிவைநின் விழிவே லன்றே.

ஷோக்சுந்தரம்.—ஆ! என்ன போங்க, உங்களழுகுக்கு மொயிலுக்கு நானெங்கே! மகாபிரபு நீங்கவென்னிடத்து வைத்திருக்கு மன்பினால் இப்படி சொல்லுகிறீர்களேயன்றி நானென்ன கோண்மெச்சிய குரூபி. (தம்புரெடுத்துக்கொண்டு பாடுகிறாள்.)

தரு. இராகம் - நவரோஜ். சாபுதாளம்.

பல்லவி.

இணையெவரோ-என்தன்துரை தனக்கிணையெவரோ.

அநுபல்லவி.

கணையைந்துமொன்றாகக் கைக்கொண்டமாரனுக்கு. (இணை)

சரணங்கள்.

1. ஜன்மம்பலவெடுத்துத் தழுவவேண்டியவர்க்கு. (இணை)
2. பார்க்கவாயிரங்கண்ணும் பற்றாதவருக்கு. (இணை)
3. பணைமுடிச்சேஷனும் பகரவொண்ணாதவர்க்கு. (இணை)

பிரதாபசந்திரன்.—

கொச்சகம்.

மானே யுனைப்போல மனதுருகி நம்மிடத்தில்
தானே யிருக்கின்ற தையலரு மெங்குளரே
நானே பலவிதத்தில் நன்று யறிந்துவிட்டேன்
தேனே யெனதுயிர்க்குத் தெவிட்டாத தெள்ளமுதே.

பெண்ணே நீ யுன்னை யிவ்வளவிழிவாய்ச் சொல்லிக்கொள்வது சரியல்ல. இந்திரனிடத்தி லிந்திராணிக்குஞ் சந்திரனிடத்தில் ரோகணிக்கு மிணையற்ற பிரீதியுண்டென்று புராணத்திற் சொல்லியிருக்கிறது. ஆனாலதையெல்லாம் காதாற் கேட்டோமேயன்றிக் கண்ணாற் பார்க்கவில்லை. ஆகா! உன்னைப்போன்ற வுண்மையான அன்புள்ள பெண்ணையடைந்த பின்பும் நமக்குக் குறைவுண்டோ.

(திருவேங்கடத்தானு, பாவாடைஜீத்தர் இருவரும் வருகிறார்கள்.)

பாவாடைஜீத்தர்.—இப்படித்தானிருக்கவேண்டும்; இதைப் பார்த்துத்தான் கண்குளிரவேண்டும்.

திருவேங்கடத்தானு.—ஓரே பாவாடா? நேநுந்நு, அனேக தேசாலுசுட்டி சூஸ்தினி இடுவண்டிரூபமுன்னு யவ்வனமுன்னு கலிகியுண்டே ஸ்திரீபுருஷுலனு சூசிந்திலேதுரா; ஈதோட என்னடுலேனி காந்தி கலிகியுன்னதிரா.

பாவாடைஜீத்தர்.—அடபோடா தாதப்பயலே யுனக்கு நன்றாய்ச் சொல்லத்தெரியவில்லை. வடமேருமுதல் கன்னிமுனைவரையில் இப்பேர்க்கொத்தவர்களை நான் பார்த்ததில்லை. தாமரைப்பக்கத்தி லன்னமிருப்பதைப்போலிருக்கிறது. இவர்களென்றைக்கு மிப்படி யிருக்கவேண்டுமென்று கோரடா.

திருவேங்கடத்தானு.—ஓரே தானிகி சிந்தபடவத்து? ரேபு சூரியுடு உதயமுகாக போயினு போனேகானி ஷோக்சுந்தரமுமீத மகாபிரபுகாரிகி பிரீதியுண்டகபோது.

பாவாடைஜீத்தர்.—அவரென்னடா தேடிப்பிடித்ததைத் திரும்பி விடுவாரா? அவளினிமே லவர் சொத்து, அதைக் காப்பாற்றுவ தவர்பாரந்தானே.

(விசுவாசகாதகன் வருகிறான்.)

விசுவாசகாதகன்.—அண்ணே பிரதாபசந்திரரே, வெகுசந்தோஷம். நான் வந்துவிட்டேனென்று சங்கோசப்படவேண்டாம், நீங்கள் பிரீயாய்ப் பேசுங்கள். என்ன இன்றைக்கிருப்பவர்கள் நாளைக்கில்லை; கண்டமட்டுங் காட்சி, அநுபவித்தமட்டுமானந்தம், இதையறியாதவர்க ளறிந்தவர்கள். உங்கள் பருவத்திற்கு மழகுக்குஞ் செல்வத்திற்கு மிதுதான் தகுதி. நான் சொன்னேனே ஷோக் கிப்பேர்க்கொத்தவளென்று அது சரிதானே.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

அன்புட னன்று நீரு மடிக்கடி யுரைத்த வார்த்தை
பின்புநா னறிந்தே னென்றும் பெற்றிலாச் சுகமடைந்தேன்
மன்பதை பலவா றாக வதறிலென் னென்னைப் போல
இன்பத்தை யனுப விப்போ னெவனுள னுலகத் தண்ணே.

எழுபிறப் பெந்தன் முன்னோ ரியற்றிய தவமோ வன்றி
பழுதிலா நெஞ்சத் தோடு பண்ணிய புண்யந் தானோ
நழுவியே பாலில் வீழும் நற்கனி போலிந் நங்கை
தழுவியே நம்மை யாளுஞ் சன்மம்நா மெடுத்த தின்றே.

விசுவாசகாதகன். — பார்த்தையா ஷோக் - இதெல்லா மெப்படியிருக்கிறது.

ஷோக்சுந்தரம்.—எல்லாமுங்கள் தயவுதான், நானென்ன கிழக்கு மேற்கு தெரியாதவள். என்னையு மொருவழியாக்கி இந்த விளக்குவைத்த துங்கள் புண்ணியந்தான்.

விசுவாசகாதகன்.—அதெல்லாமிருக்கட்டும் அந்த விளக்கவியாமல் தகுந்த சினேகத்தோடிரு. பெண்களுக்கு அடக்க மணிகல மென்பார்கள். அப்படியே நீயும் மகாபிரபுவினிடத்தில் வெகுபயபக்தியோ டிருக்கவேண்டியது. அவரோ உன்னிடத்தில் வெகு பிரீதி வைத்திருக்கிறார், அதற்கு நீ யெப்படி நடந்துகொள்ளவேண்டுமோ அது உனக்குத் தெரியுமே.

ஷோக்சுந்தரம்.—ஆ! என்னபோங்க, அது தெரியாதா? எதெதுக்கெப்படி நடக்கவேண்டுமோ அது ஒருவர் சொல்லித்தானா வரவேண்டியது.

விசுவாசகாதகன்.—ஆமாம்-அதெல்லாம் சுபாவத்திலேயே யிருக்க வேண்டும். கரும்பைக் கசக்கச்சொன்னால் கசக்குமா? வேம்பைத் தித்திக்கச்சொன்னாலுந் தித்திக்குமா? அப்படியே யுனக்குப் பிரதாபசந்திரனிடத்துள்ள பிரீதியை விடும்படியாய்ச் சொன்னாலும் நீ கேட்பையா? நல்லது, நீங்க ளென்றென்றைக்கும் பிரீதியாய் வாழ்ந்திருந்தா லதுவே போதும். ஓய் ஜித்தரே, ஓய் திருவேங்கடத்தானு மனமெல்லாம் போதாம் வாரும்.

(விசுவாசகாதகன், திருவேங்கடத்தானு, பாவாடைஜித்தர் மூவரும் போகிறார்கள்.)

ஷோக்சுந்தரம்.—மகாபிரபு, எங்கள் தாயார் சுத்த பயித்தியக்காரி. என்னோ டென்ன சொல்லுகிறாளென்றால் அடியம்மா ஜகன்மோகனா, பொம்மனாட்டிகளுக்குப் புத்திமயங்க கேட்க வேண்டுமா. அப்படியே உன் மனதையு மிந்தப் பிரதாபசந்திரனிடத்தில் வைத்துவிட்டாய், அப்படிச் செய்யாதே. புருஷனென்று ஆசையிருந்தா லது உள்ளே இருக்கட்டும். உள்ளே யிருப்பவ ளுத்தமி, வெளியே வந்தவள் வெள்ளாட்டியென்பார்கள். அன்றியும் நீ யுன் பிரீதியை யெல்லாம் தீவட்டிபோட்டாற்போல் தெரியப்படுத்திவிட்டா லுன்னிடத்தி லவருக்குள்ள மதிப்புக் குறைந்துபோம், மரத்திலிருக்கு மட்டும் மாங்காய், கீழே விழுந்தால் வீண்காய் என்பார்கள். ஆகையால் நீ ஜாக்கிரதையா யிரடி என்கிறாள். இப்படியுமுண்டா மகாபிரபு. நீங்களென்ன நானென்ன, நம்மிருவரைப் பற்றியும் இவளிப்படி சொல்லலாமா. இதை நான் கேட்டு ஆகட்டு மவர்வந்தா லிதை யவருக்குச் சொல்லி யுனக்குத் தகுந்தபடி செய்விக்கிறேனென்றேன். நீங்களவளைக் கூப்பிட்டு இனிமே லிப்படி யவள் சொல்லி என் மனதைப் புண்ணாக்காதிருக்கும்படி செய்யவேண்டியது.

பிரதாபசந்திரன்.—அடே சட்பட் (சட்பட் வருகிறான்.) அடே படீல் (படீல் வருகிறான்.) நீங்களிருவரு மோடிப்போய் மேல்மெத்தையிலிருக்கும் நம்முடைய மாமியம்மாளை வெகு சீக்கிரத்தி லழைத்துக்கொண்டு வாருங்கள்.

(சட்பட், படீல் போகிறார்கள்.)

கொச்சகம்.

நாளாக நாளாக நல்லறிவு நீங்குமென்பார்
கேளாய் மடமயிலே கிழவியிவ ளப்படியே
மீளா துனக்குநம்பால் மெய்யன் பிருப்பதையோர்
கோளாகச் சொல்லவந்தாள் குற்றமில்லை முற்றிழையே.

(ஷோக்சுந்தரம் தாய் வருகிறாள். அவளைப் பார்த்துப் பிரதாப சந்திரனிடம்,)

ஷோக்சுந்தரம்.—

கொச்சகம்.

பிரியாத அன்புவைத்த பிராணேசன் மீதுபல
தெரியாமற் சொல்லியென்னைச் சிந்தைதடு மாறிடவே
உரையா துரைத்திட்ட வுத்தமியும் வந்தனள்நீர்
மரியாதை யாயவளை வார்த்தையொன்று கேட்பீரே.

தாய்.—என்னடியம்மா நான் செய்யாதகாரியத்தைச் செய்துவிட்டது. ஊருக்கிளைத்தவன் பிள்ளையார்கோவி லாண்டியென்பார்கள். அப்படி யாய்விட்டேனே! கொழுத்தவன் கோமுட்டி, கொண்டுபோனவன் பாளையக்காரன் என்பதைப்போல நானுன்னைப் பெற்று வளர்த்து சீர் சிங்காரங்களெல்லாம் செய்து குழந்தையைக் குமரியாக்கி மகாபிரபுவுக் கர்ப்பிதஞ்செய்தேன். இனிமேல் பேசுவதற்கென்ன? தள்ளினமட்டுந் தாய் தள்ளாதுபோனாற் கிழவிதானே? உன் கண்ணுக்கு நானப்படியாய்விட்டேன். அதுபோகட்டும், நீங்களெப்போது மிப்படியே இருந்தால் அதுவே போதும்.

தரு. சங்கராபரணம். சாபுதாளம்.

பல்லவி.

வாடிமகளே-நீ-என்றென்றைக்குமிப்படி
வகையாயிருந்தாற்போதும் - அடிபெண்ணே.

அநுபல்லவி.

காடு வாவென்றுசொல்ல வீடு போவென்றுதள்ளுங்
கட்டைக் கினிமேல்வீணாய்ச் சட்ட திட்டங்களேனோ. (வாடி)

சரணம்.

அவர்மனம் நோவாம லன்புடனே நீயும் அநுசரித்து வாடி
தவஞ்செய்து னக்குக் கிடைத்தவ ராகவுன் சாமியைநீ யெண்ணடி
புவிதனி லிவரைப்போற் புருஷ சிங்கமு முண்டோ
பூலோக மன்மத னிவரன்றி வேறுண்டோ
எவரென்ன சொன்னாலு மதனாற் பழுதுண்டோ
இவருக் கிவரேயிணை யென்பதிற் சந்தேகமுண்டோ. (வாடி)

ஷோக்சுந்தரம்.—அதெல்லா மிருக்கட்டுண்டி. நீ யென்னை யேனப்படி சொன்னாய்? புருஷனைச் சொன்னால் பொம்மனாட்டி மனம் நோவாதா? அர்ச்சகனைத் திட்டினா லாண்டவனைத் திட்டினதல்லவோ? இத்தனைநாள் பிழைத்தையே யுன்னறிவெங்கேபோச்சு.

தாய்.—பாருங்கள் பாருங்கள், மகாப்பிரபு, நீங்களே பாருங்கள். என்னதான் கெட்டுப்போனாலு மிவளிப்படிப் பேசலாமா? நானென்ன சொன்னேன், உன் புருஷனுக் குன்மே லெவ்வளவு பிரீதியிருந்தாலு மதை வெளியிற் சொல்லாதே? உள்ளுக்குள் வைத்துக்கொண்டு ஜாக்கிரதையாயிரு வென்றேன். என்ன போங்க. இவள் முரட்டுத்தன மெப்போது மிப்படிதான். பிடித்தால் ஒரே பிடி. பேசினா லொரே பேச்சு. இன்னைக்குக் காலமே முதல்கொண்டு சாப்பிடாமலிருந்தாள். நீங்கள் வரப்போகிற சமாசாரம் வந்தபிறகுதான் வாயில் தண்ணிவிட்டாள். அடி, உடம்பு கெட்டுப்போகும்; வீணாயுடம்பைக் கெடுத்துக்கொள்ளாதே யென்று வெள்ளிக் கிண்ணியிற் பாலும் தட்டிற் பழமும் வைத்துக்கொண்டு எத்தனை நாழி காத்திருப்பேன். அதுதான் போகட்டும் வெற்றிலை பாக்காவது போட்டுக்கோடி யென்றேனே, அதையாவது கேட்டாளா! அப்புறம், அடி உன்னிடத்தில் அவருக்குப் பிரீதியிருக்கிறதோ இல்லையோ, நீயேன் வீணாய்ப் பிராணத்தை விடுகிறாயென்று இவள் மனதைத் திருப்பி சாப்பிடச்செய்யலாமென்று வேடிக்கைக்குச் சொன்னால் அதற்கென்மேல் நாய்விழுகிறாப்போல் விழுகிறதா? நல்ல துணி துப்பு கட்டிக்கொள் நகை நட்டு போட்டுக்கொள் என்று சொன்னால், நீ போடி கிழமுண்டை நீ போட்ட நகை நட்டும் வாங்கிக்கொடுத்த துணி துப்பு மெனக்கு வேண்டாம். எனக்கு வாங்

கிக் கொடுப்பவ ரிருக்கிறார்கள் என்கிறாள்; நானென்ன செய்கிறது. சொல்லு நாவெழுமேயொழிய அடிக்கக் கையெழுமா! கண்ணின்மணியைப்போ லருமையாய் வளர்த்தேனே. என்னை யிவளிப்படி பேசலாமா! இதற்குத்தானா மகளென்று மலைத்ததும் குழந்தையென்று கொண்டாடினதும்.

(முன்தானையை முகத்தில் வைத்துக் கண்ணீர் விடுகிறாள்.)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

எனம்மா வீணாய் நீங்க ளிப்படி யழுவ திந்த
மானினி சொன்ன வார்த்தை மனதாரச் சொன்ன தல்ல
ஆனதா லவளை நீங்க ளன்புட னணைத்தோர் முத்தம்
தானினிக் கொடுப்பீ ராகிற் சகல தோஷங்கள் போமே.

தாய்.—மகாப்பிரபு! முத்தத்துக்கென்ன வேண்டியமுத்த மிருக்கிறது. பாருங்கள் என்னைப் பார்க்கவுங் கூடாதென்று அந்தப் பக்கந் திருப்பிக்கொண்டாளே. (ஷோக்சுந்தரத்தி னருகிற் செல்கிறாள்.)

ஷோக்சுந்தரம்.—(முகத்தைத் திருப்பிக்கொண்டே) நீ போடி - உன்னை யாரிங்கே வரச்சொன்னது? என்னைத் தொடாதேடி. அந்த மட்டும் போதும்.

பிரதாபசந்திரன்.—

கலித்துறை.

வாராத வாபத்தை வந்துழிக் காக்கும் வரமித்ரனும்
தாரா தலத்துப் பிரமோப தேசஞ்செய் சற்குருவும்
தீராத அன்புள தந்தையும் தாயுநற் றெய்வமென்றே
நேரா யுலகினிற் பூசனை செய்குவர் நேரிழையே.

ஷோக்சுந்தரம்.—ஆ! மகாபிரபு, நீங்க ளிவ்வளவுதூரஞ் சொல்வதனால் நான் கூடாதென்பேனா அப்படியே யாகட்டும் நானினிமேலவளை யப்படி பேசுவதில்லை.

தாய்.—

(வெகு சந்தோஷத்தோடு தன் மகளை முத்தமிட்டுப் போகிறாள்.)

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - சஹானா. சாபுதாளம்.

பல்லவி.

என்னென்று சொல்வேனடி - நான் படுந்துயர்
எவ்வாறு சகிப்பேனடி.

அனுபல்லவி.

அன்னமே யென்னைமாரன் - அடிக்கிறான் கணையாலே
இன்னுமேனோ வுன்தன் இதயங் கரையவில்லை. (என்)

சரணங்கள்.

பாவையே யென்மனம் பதைத்துப் புண்ணாவதைப்
பரிவுடனே பாரடி
தேவதையா யுன்னை பாவித் திருக்கையில்
செய்வதேன் வீண்போரடி
கோவையே நான்பல குற்றஞ்செய் திருந்தாலும்
கோபத்தைநீ தீரடி
ஆவிக்கமுதமாகு முன்னையன்றி யென்னைக் காக்க
ஐயோவேறாரடி வந்துநேரடி. (என்)



## இரண்டாங் களம்.

இடம்: குணலயர் வீடு.

பாத்திரங்கள்: குணலயர், நிபுணர், சுதேசமித்திரர், சட்பட், படீல், பிரதாபசந்திரன்.

[நிபுணர், குணலயர், சுதேசமித்திரர் மூவரும் வார்த்தையாடிக் கொண்டிருக்கின்றனர்.]

நிபுணர்.—என்ன ஸார் நான் சொல்வதை நீங்கள் சற்றுக் கேட்க வேண்டும். நேற்றுச் சாயந்திரமோர் தந்திரஞ்செய்தேன். அதாவது பிரதாபசந்திரர் எப்பொழுது பார்த்தாலும் நம்மை யெல்லாம் விட்டு வெகு இழிவான வெள்ளாட்டி யொருத்தி வசத்திலகப்பட்டிருப்பதைக் கண்டு வெகு துயருற்று அவ ரவள் வீட்டில் காலம்போக்கும் விதம் எப்படியென் றறிந்து கொள்ள அங்கேயிருக்கு மிரண்டு வேலைக்காரப் பயல்க ளாகிய சட்பட் படீலென்பவர்களுக்கு கொஞ்சம் பொருள் தந்து, எச்சரிக்கையாய் வைத்திருந்தேன். அவர்களங்கு நடந்ததையெல்லாம் சொல்லிவிட்டார்கள். நீங்களும் கேட்க வேண்டும். அடே சட்பட் (ஸார்) அடே படீல் (ஸார்) எடோ அங்கு நடந்ததையெல்லாம் சற்றுச் சொல்லுங்கள்.

சட்பட்.—அவ்வளவு சீக்கிரத்திலது சொல்லிமுடியுமா, ஆனாலும் சொல்லுகிறேன். இராத்திரி ஒருமணிவரையில் வேஷாக் சுந்தரமும் பிரதாபசந்திரரும் கடுதாசி ஆடிக்கொண்டிருந் தார்கள்.

குணலயர்.—அண்ணே, இதென்ன விபரீதம்! அவரென்ன! அவர் குணாதிசயங்களென்ன! அப்பேர்க்கொத்தவ ரிப்படி யாய் விட்டார். ஒரு அற்பஜந்துவாகிய தேவடியாள் வீட்டுக்குப் போய் அவளோடு கடுதாசி ஆடுகிறதா! சிச்சீ இது வெகு அவகீர்த்தி.

நிபுணர்.—

### விருத்தம்.

அப்படி சொல்ல வேண்டா மையகோ இந்த வூரில்
எப்படி யெதும்போ ளுலு மிரவுடன் பகலி லெல்லாம்
செப்பொணு மோசஞ் செய்யுந் தேவடி யாள்க ளோடு
துப்பற்றுக் காலம் போக்குந் தூர்ச்சனர் பலருண் டண்ணே.

சட்பட்.—அதிருக்கட்டுமையா, அப்படி கடுதாசி ஆடும்பொழுது அந்தத் தேவடியாக்கள் ரவிக்கையில் வைத்துக்கொண்டிருக்கும் வெள்ளி டப்பியிலிருந்து வெகு ஒயலாய் ஒரு சிட்டிகை பொடி கொடுக்கிறார்கள். அதை வாங்கிக்கொள்ள எனக்குனக்கென்று ஒருவர்மேலொருவர் விழுந்து மாரியாத்தாளுக்கு மாவுபடைக்கையில் சின்னப்பசங்கள் சண்டை செய்வதுபோல் சண்டை செய்கிறார்கள். அப்படியே ராத்திரி இடிமுழுங்கிக்கும் குஸாம்பாமேஸ்டருக்கும் சண்டையுண்டாய், இடிமுழுங்கி குஸாம்பாமேஸ்டரை மூக்குமேற் குத்தினான்; அவன் குடிவெறியா லிடிமுழுங்கி காதைக் கடித்தான். அப்புற மிரண்டுபேரும் ஒவ்வொரு க்ளாஸ் ஸோடாவாட்டர் வாங்கிக்கொண்டு ஷேகாண்டு செய்தார்கள்.

சுதேசமித்திரர்.—அமீட் படீல், குடிவெறியா லடித்துக்கொண்டபொழுது பிரதாபசந்திரரு மேதாவது தொட்டுக்கொண்டாரோ.

படீல்.—ஆம் ஸார், நான்தான் மெக்டோவல் ஷாப்புக்குப் போய் நல்ல நல்ல ஒயின்களையெல்லாம் நித்தியம் வாங்கிக்கொண்டு வருகிறது. ஆனால் முதலிலவருக்கு குடிக்கவே தெரியாது சாமீ! விசுவாசகாதகன்தான் கற்றுக்கொடுத்தான். ஒருநாள் ஷோக்சுந்தரத்தைக்கொண்டு ஒரு கிளாஸ் ஸம்பொயின் கொடுப்பித்தான். அப்புறமதுவே வழக்கமாய்விட்டது.

நிபுணர்.—குழியிலிட்ட பிள்ளையும் குடியில் விழுந்த வாயும் திரும்பாதென்பார்கள். அப்படியே இனிமேலும் நம்முடைய பிரதாபசந்திரர் சரியான வழிக்கு வரப்போகிறாரா? அநியாயமாய் நம்மூரிலுள்ள சிறுவர்கள் குடித்துக் கெட்டுப்போகிறார்கள்; இங்கேதானிப்படி யிருக்கிறதென்றாலோ எங்கே பார்த்தாலும் அப்படியேயிருக்கிறது.

சுதேசமித்திரர்.—ஆமண்ணே நீங்கள் சொல்வது சரிதான். நான் பங்காளத்துக்குப் போயிருந்தபொழுது ஒரு பிரபுவின் பிள்ளை என்னை யொரு பெரிய ஹோடலுக்கு இட்டுக்கொண்டு போனார். அங்கே போனவுடனே பட்ளரைக் கூப்பிட்டு பொரித்த கோழியும் சாராயமும் கொண்டுவரச் சொன்னார். அதைக் கேட்டு, ஐயா வங்காளத்திலுள்ள இந்

துக்களாகிய நீங்கள் கோழிதின்னக் கூடாதே, உங்கள் மதத்திற்கு விரோதமாச்சே, உங்கள் தாய்தந்தை சிநேகிதர்கள் கேட்டால் வெகு சங்கடப்படுவார்களே யென்றேன். அதற்கவர் ஓ நெவர்மயிண்ட்; அவர்கள் கெட்டார்கள். உங்களைப்போன்ற ஸிவிலைஜ்டு-ஜெண்டில்மேனு மிப்படி சொல்லலாமா வென்றார். இதைக்கேட்டு ஆ! காலமென்ன கெட்டுப்போச்சு தென்று நினைத்துச் சும்மாயிருந்தேன்.

நிபுணர்.—அடே சட்பட், இன்னு மென்னசங்கதி.

சட்பட்.—முந்தாநாள் ராத்திரி ஒரு பெரிய விருந்து நடந்தது. அதில் பிரதாபசந்திரர் குடித்து நினைவு தப்பிக் கீழே விழுந்தார். உடனே விசுவாசகாதகன் அவரை ஒரு வீட்டிற்போட்டுப் பூட்டி வேஷாக் சுந்தரத்தோடு படுத்துக்கொண்டிருந்தான். விடிந்தபிறகு என்னஸார் இராத்திரியெல்லாம் விளக்கேற்றி வைத்துக்கொண்டு ஜகன்மோகனும் நானும் தூக்கமில்லாமல் காத்துக்கொண்டிருந்தோம். இவ்வளவு தானு உங்கள் பலம். நான் ஒரு புட்டி பிராந்தியைக் கழுத்தைத் தட்டிக் குடித்து ஒரு சபையிற் போய்ப் பேச்சுத்தவருமல் பிரசங்கஞ் செய்வேன். அப்படியிருக்க நீங்களிதுக்கே யிப்படியாய்விட்டீர்களே யென்றான். உடனே பிரதாபசந்திரர் நானும் சீக்கிரத்தில் வழக்கப்படுத்திக்கொள்ளுகிறேனென்றார்.

குணலயர்.—

விருத்தம்.

விந்தையா யிருக்கு திந்த விபரீதந் தன்னைக் கேட்டால்
எந்தநன் னுட்டி லேனு மிப்படி நடப்ப துண்டோ
புந்தியில் லாத மாந்தர் புரியுமா றையோ நந்தம்
சுந்தர பிரதாப சந்திரர் செய்திடிற் சொல்வ தென்னும்.

சட்பட்.—ஸார், எப்பொழுது பார்த்தாலும் வேஷாக்சுந்தரத்தின் வீட்டிற் கெதிரில் பிரதாபசந்திரருடைய இரட்டைக் குதிரை வண்டி நின்றுகொண்டிருக்கிறது.

நிபுணர்.—கோவில் குளத்திற்குப் போனுல் குதிரைக்கு நிற்பதிற் கால் நோகுமென்று வெகு சீக்கிரத்தில் வந்துவிடுகிறார்கள். இப்பேர்க்கொத்த இடங்களில்மாத்திரம் எவ்வளவு நேரம் நின்றாலும் சந்தோஷந்தா னென்கிறார்கள்.

குணலயர்.—ஆம் ஸார், எங்கள் தகப்பனார் ஒருநாளொரு சங்கதி சொன்னார்: அதாவது, முற்காலத்தில் இச்சென்னையிலுள்ள பிரபுக்கள் தம்முடைய வைப்பாட்டிகளிடம் போகவேண்டுமானால், பெரியோர் சிறியோருக்குத் தெரியாமல் வெகு ரகசியமாய் இருட்டில் முக்காடு போட்டுக்கொண்டு போவார்களாம். இப்பொழுதோ பெரியோர் சிறியோரென்னும் வரன்முறையில்லாமல் தாந்தோணித் தம்பிரான்களாய்விட்டார்கள்.

சுதேசமித்திரர். — ஆமண்ணே! நானுமறிவேன். உருக்கியோட விட்ட தங்கத்தைப்போன்ற மேனியும், சந்திரனைப்போன்ற முகமும், அன்னத்தைப்போன்ற நடையும், தேன்போலினிய மொழியும், பார்ப்போரெல்லாம் வியந்து சந்தோஷிக்கும் பதவிசும் உள்ள ஸ்திரீகளாகிய தம்மனைவியரைப் பாய்க்குந் தலையணைக்கும் பாணிக்கிரகணம் செய்வித்துப் பல நோயால் வருந்தும் குரூபிகளிடத்தில் தங் காலத்தைக் கழிக்குங் கனவான்களனேக ரிருக்கிறார்களண்ணே!

குணலயர்.—மேலு மிக்காலத்திற் படித்துத் தேர்ந்த ஜெண்டில்மேன்களிற் சில ரிப்படிச் சொல்லுகிறார்கள். அதாவது, ஸ்திரீகள் விஷயத்திலும் மத விஷயத்திலும் நாம் யாரிடத்திலும் தப்புக் கண்டுபிடிக்கக்கூடாது. பிறர்மனை புகாமல் மற்று எந்தெந்த ஸ்திரீயினிடத்தில் எவரெவருக்கு எப்படி இஷ்டமோ அப்படியே யிருக்கலாம். இவ்வாறே எந்தெந்த மதத்தில் யாராருக்கு அபிப்பிராயமோ அவரவரப்படியே யிருக்கலாம். அன்றியு மிக்காலத்தில்,

விருத்தம்.

கடவுளே யில்லை யென்று கருத்தினிற் கொண்ட பேரைக்
கொடியவ ரென்று கூறுங் கொள்கையுள் ளோர்கள் கெட்ட
மடையர்க ளவர வர்க்கு மனம்போன வழியே யெந்தப்
படியினில் நடந்திட் டாலும் பழுதில்லை யென்பா ரண்ணே.

படீல்.—ஸார், நாளைக்கொரு காரியம் நடக்கப்போகிறது. அதாவது, முன்னமே மருந்து தயாராயிருக்கிறது. அதை நாளைத் தொடங்கிக் கொஞ்சங் கொஞ்சமாக ஏற்றப்போகிறதாகக் கேள்விப்பட்டேன்; அந்த மருந் துள்ளேபோனால் பிரமதேவனாலு மதை வெளிப்படுத்த முடியாது. அதைப் பார்த்தால்

காலகோடி விஷத்தைப்போலிருக்கிறது. தொட்டால் சுறீ லென்னும்; துணியிலெடுத்தால் தீய்த்துவிடும்.

சட்பட்.—அடபோடா! நானதை மோந்துபார்த்தேன், குடலை வெளியே பிடுங்கிவிடும்போலிருந்தது இன்று காலையிற் கிழவி அதை யெடுத்து டப்பியிற்போட்டு சாம்பிராணி தூபங்கொடுத்தாள். ஐயோ! பரிதாபசந்திரருக்குமாத்திரம் அதைக்கொடுப்பார்களாகில் அநியாயமாய்ப் போய்விடுவார்.

குணலயர்.—அண்ணே! இடுமருந்தென்கிறார்களே அது வாஸ்த வந்தானா?

நிபுணர்.—என்னஸார ரதைப்பற்றிச் சந்தேகமேன்.

விருத்தம்.

ஆதிநாள் தொடங்கி நல்ல அறிஞரை யெல்லா மந்தப்
பாதக வேசை மாதர் பதராக்கித் தங்கள் மீது
காதலே மிகுந்து நித்தங் கடைகாத்து நிற்கச் செய்தல்
ஓதொணா இடுமருந்தின் ஒப்பற்ற மகிமை தானே.

(பிரதாபசந்திரன் வருகிறான்.)

நிபுணர்.—அண்ணே! வாருங்கள், உங்களைப் பார்க்க வெகு சந்தோஷமா யிருக்கிறது.

விருத்தம்.

கானலை நீரென் றெண்ணிக் கடுகியே சென்று வந்த
மானென வந்து விட்டீர் மனதினி லென்று மில்லா
ஆனந்த முண்டாய் விட்ட தண்ணலே யிதுவ ரைக்கும்
போனது போது மின்னும் போவதை நிறுத்து வீரே.

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - சுருட்டி. ஆதிதாளம்.

பல்லவி.

போதுமெனநீ ருரைசெயினும்நான் போவதை விடுவேனா.

அனுபல்லவி.

மாதரசியவ ளிணையாரோ இம்
மண்டலத்தும் விண்டலத்து மெங்கணும். (போது)

சரணம்.

சீதமதியினு மொளியுள்ளதெனவே - தெரிவை நுதலிலங்கும்
கோதைமேனிநற் பொன்னினுமழகெனக் - குணமுற்றே துலங்கும்
நாதமனைத்தினு மேலாயவளது - நாவின்வார்த்தை விளங்கும்
ஓதலேனோநான் ஒருதரங்கண்டா-லுங்கள்மனமுங் கலங்கும். (போது)

குணலயர்.—என்ன ஸார், எப்பொழுது கேட்டாலும் மதியைப் போன்ற முகமும் பொன்னைப்போன்ற மேனியும் நீங்கள் கண்டால் உங்களுக்கு மனங் கலங்கிப்போமென்று பழங் கதைகளைச் சொல்லுகிறீரேயன்றி சங்கதி இத்தன்மைய தென் றறிந்துகொள்ளாமற் போனீர்.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

எல்லா மறிவே னிதுசங் கதிநான் இனிமே லிப்படி வீணுகக்
கல்லா தவருக் குரைசெய் வதுபோற் கருதிய படிநீ ரென்னோடு
சொல்லா தவராய்ச் சுந்தரி தனையுந் தூற்றுதல் விட்டால் நலமாகும்
நல்லோ ருக்கோர் தரமன் றியுமே நவில்வது முண்டோ புலவோரே.

(பிரதாபசந்திரன் போகிறான்.)

நிபுணர்.—அண்ணே! இப்போ பிரதாபசந்திரரைக் கெடுத்த மடையர்களில் குசும்பாமேஸ்டர் என்றொருவ னிருக்கிறான். அவனை நானறிவேன். அவன் வீட்டுக்கின்று விசுவாசகாதகன் வருவதாகக் கேள்விப்பட்டேன். அவ்விடத்திற் போய் நாம் மறைந்திருந்தால் அவனைச் சமயம்பார்த்து நன்றாயடித்துப் புத்திவரும்படிச் செய்யலாம்.

குணலயர்.—அண்ணே, அவன்தான் போக்கிரியா யிருந்தாலும் நாமு மவனைப்போல் நடக்கிறதா! அப்படிச் செய்தால் நம்முடைய கவுரவத்திற்குக் குறைவுண்டாகும்.

நிபுணர்.—அண்ணே! பாம்பைக் கண்டு பாவதோஷங்களெண்ணுவதுண்டோ? புலியைக் கண்டாற் பூசனை செய்வாருண்டோ? சூரியன் பனியை யுலர்த்தாமல் விடுவானோ? அப்படியே நல்லோர் தீயோரைக் கண்டும் தண்டிக்காமல் விலகிப்போகலாமா? நீங்கள் வந்தாலும் வராமற்போனாலும் நா னவனை

விடமாட்டேன். அடே பாய் சிவகாருண்ணியம், நம்முடைய பெரிய குதிரைச் சவுக்கைக் கொண்டுவா. நாமணிந்து கொள்ளும் தோல் பெல்ட்டைக் கொடு. சீக்கிரமாய் வண்டி போடச்சொல். நம்முடைய கோச்சுமானையும் குதிரைக்காரர் களையும் இழுத்துக் கட்டிக்கொண்டு கூப்பிட்டால் திடீ ரென்று உள்ளே வந்து நாம் சொன்னபடிச் செய்யச் சித்தமா யிருக்கச்சொல்.

(சினேகிதரைப் பார்த்து,)

விருத்தம்.

புறப்படும் புறப்ப டும்நீர் புருஷசிங் கத்தைத யிவ்வா
றறப்பழு தடைந்தே வீணு யலையுமா றமைத்த வந்த
முறிப்பயல் தன்னை நன்றாய் முன்பின்பா ராமல் மாட்டி
சிறப்பைநா மடைவோம் நந்தம் சிந்தையுங் குளிரு மாறே

(எல்லோரும் போகின்றனர்.)

—⁂—

## மூன்றாங் களம்.

இடம்: குசும்பாமேஸ்டர் வீடு.

பாத்திரங்கள்: நிபுணர், குணலயர், சுதேசமித்திரர், விசுவாசகாதகன், குசும்பாமேஸ்டர்.

[குசும்பாமேஸ்டர் தரையில் அமர்ந்திருக்கிறான். நிபுணர் முதலி யோர் அவனைச் சென்று காண்கின்றனர்.]

நிபுணர்.—என்னஸார், குசும்பாமேஸ்டரே உம்முடைய வீடு வெகு பழையதாயிருக்கிறது.

குசும்பாமேஸ்டர். — போங்களஸார், இந்தநாளைய கட்டிடங்கள் இதற்கிணையாமா. எங்கள் பாட்டனார்நாளில் ஒரு வருடம் சூளைபோட்டு ஒன்றரை வருடம் வெந்த கற்களாலும் கோழி முட்டையின் வெளுப்பெடுத்துப் பிசைந்த சாந்தினாலும் இந்த வீடு கட்டப்பட்டது. உட்காருங்கள் ஸார். நம்மிட வீட்டிலிருந்த சேர்களையெல்லாம் இரவல் வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள். அடே ரத்தினக்கம்பளி எங்கேடா! ஓகோ! அதுவு மிராத்திரி இரவல் கொடுத்துவிட்டேன். கொண்டுபோனாற் கொஞ்சத்திற் கொடுக்கிறார்களா? போகட்டும் இந்தப் பாய்மேலாவ துட்காருங்கள். இது கிழிந்து பழசாய்விட்டதென்று நினைக்காதேயுங்கள். இது லார்ட் எல்பின்ஸ்டோன் எங்கள் பாட்டனாருக்குக் கொடுத்தது. இதை என்னிடத்திலிருந் தடித்துக்கொண்டு போக வனேகர் பார்த்தார்கள். ஆனால், நா னேமாறவில்லை. ஸார், கொஞ்சம் டீ தயார் செய்யச் சொல்லட்டுமா?

நிபுணர்.—வேண்டாம் ஸார்.

குசும்பாமேஸ்டர்.—போகட்டும் கொஞ்சம் காபி தயார் செய்யச் சொல்லட்டுமா?

நிபுணர்.—அதுவும் வேண்டாம் ஸார்.

குசும்பாமேஸ்டர்.—போகட்டும் கொஞ்சம் பலகார மழைப்பிக் கட்டுமா?

நிபுணர்.—அதுவும் வேண்டாம்.

குசும்பாமேஸ்டர்.—வெல் கொஞ்சம் தாம்பூலம் போட்டுக்கொள்ளுகிறீர்களா? அதுகூட வேண்டாமென்றால் நான் விடமாட்டேன். (உள்ளே போய்வந்து.) சாவி யெடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அட என்ன இன்றைக்கு எல்லா மிப்படியாய் விட்டது.

நிபுணர். — பரவாயில்லை ஸார்; உங்களுக்கு நம்மிடத்துள்ள பிரீதியே போதும்.

குசும்பாமேஸ்டர்.—பைகாட்! வெறும் பிரீதியினா லென்னபயன், காரியத்தினாற் கருத்து வெளிப்படுமென்பார்கள். நாயனாரு மப்படியே சொல்லியிருக்கிறார். உங்களுக்குத் தெரியாதா?

(விசுவாசகாதகன் தெருக் கதவிடிக்கிறான்.)

ஒகோ! தாளன் வந்துவிட்டான், நீங்கள் சற்று மறைந்திருங்கள் (அவரப்படியே செய்ய விசுவாசகாதகன் உள்ளே வருகிறான்.)

குசும்பாமேஸ்டர்.—(விசுவாசகாதகனைப் பார்த்து.) என்ன அண்ணாத்தே ஷோக்கும் நீரும் சுகமாயிருக்கிறீர்களா?

விசுவாசகாதகன்.—ஓ டாம், நமக்கொன்றும் தோன்றவில்லை ஸார், இராத்திரியில் தூக்கம் பிடிப்பதேயில்லை.

குசும்பாமேஸ்டர்.—ஷோக்குக்கு நீங்களெத்தனை நாளைக்கு லீவு கொடுத்திருக்கிறீர்கள்.

விசுவாசகாதகன்.—

விருத்தம்.

பெடையுட னிருந்த வன்னம் பிரிவினால் வருந்து மாபோல்
இடையொரு பிடிய டங்கு மென்தன்கா தலியை விட்டே
படுவதற் கரிய துன்பம் படுகிறேன் மதனே வென்னில்
விடுகிறான் வரிவில் லேந்தி மெய்யெலாந் தொளைக்கும் வாளி.

குசும்பாமேஸ்டர்.—நல்லது அதற்கு ஷோக் கென்ன சொல்லுகிறாள்.

விசுவாசகாதகன்.—அண்ணே! அவள் வெகு புத்திசாலி, பிரீதிக்கு நம்மிடத்திலும் பிரயோஜனத்திற்குப் பிரதாபசந்திரனிடத்திலும் சினேகஞ் செய்திருக்கிறாள். ஆச்சுது, சீக்கிரத்தி லவனைத் தட்டிவிட்டு நம்மிடத்திற்கு வந்துவிடுவாள். போகட்டும், உங்கள் லேடிகளெல்லாம் க்ஷேமமாயிருக்கின்றார்களா?

விருத்தம்.

மின்னலைப் பழிக்கு மேனி மின்னல்நற் கொடியு மன்றிக்
கன்னலி னினிய வேசி கனகாங்கி சொர்ண வல்லி
கின்னரி கிர்ஷ்ண வேணி கிளிமொழி பத்மா பாலா
தன்னிக ரில்லா ஞானு சகலரும் க்ஷேமந் தானு.

குசும்பாமேஸ்டர்.— எல்லோரும் க்ஷேமந்தான். இருந்தென்ன பிரயோஜனம். நம்மிடத்திலுள்ள காசோடு அவர்கள் பிரீதியும் வறண்டது. இப்பொழுது போனால் தலைவாசல் காத்திருந்து தவிக்கலாம். அதெல்லாமிருக்கட்டும் ஸார், பிரதாப

சந்திரனைக் கெடுத் தெத்தனைநாளாய்விட்டது. அப்படி யிருக்க இன்னும் எங்களுக்கொரு காசும் கொடாமலிருக்கி றீர்களே இதென்ன அநியாயம்.

விசுவாசகாதகன்.—தூரத்திலுள்ள மலைக்கு மழுமழுப் பதிகமென் பார்கள். அப்படியே நாமுமிந்தப் பிரதாபசந்திரனைப்பற்றி வெகுசாய் மலைத்துவிட்டோம். இப்பொழுதவனைக் கேட் டால் எங்கள் தகப்பனுரூரிலில்லை, வடக்கே போயிருக்கிருர், வந்தவுடனே வேண்டிய பணந் தருகிறேன். இப்பொழுது கடன் வாங்கிக்கொள்ளுமென்கிருன். என்னசெய்கிறது?

குசும்பாமேஸ்டர்.- நல்லது ஸார், ஷோக்கு சுந்தரத்துக்கு ரவை வங்கியும் ரத்தின ஜடைபில்லையும் ரவை கத்திரிபாவிலும் காப்பு கொலுஸும் இவைபோன்ற வேறு ஆபரணங்களும் பண்ணிக்கொடுக்கமாத்திரம் பணமிருந்ததோ? அன்றியும், பாபம்ஸ் பிராட்வேயிலுள்ள ஷாப்புகளிலும் மவுண்ட் ரோட்டிலுள்ள ஷாப்புகளிலுமிருந்து விதவிதமாய் பர்னி சாகளும் பட்டு கின்காப்பு முதலியவைகளாற் செய்த பாவாடைகள் ரவிக்கைகள் முதலிய ஆடைகளும் இன்னும் பற்பல விலையுயர்ந்த விநோதமான சாமான்களும் வாங்கி வரப் பணமிருந்ததோ? என்னஸா ரிவ்வளவு லையராய்விட் டீர்கள். நீர் விருந்து செய்தபொழுது நாங்கள் சாராயம் முதலியவற்றிற்காகச் செலவழித்ததைக்கூடக் கொடாமல் ஏமாற்றுகிறீர். இலேசில் செரிக்குமென்று பார்க்கிறீரோ?

விசுவாசகாதகன்.—என்னஸார், கொஞ்சமேனும் மரியாதையில் லாமல் லையரென்கிறீர்கள். நானென்ன அப்பேர்க்கொத்த பொய்யனு? ஓ நான்ஸென்ஸ், மொட்டைப்பசங்களுடைய சகவாசத்தை யொரு துட்டுக்கொடுத்தாவது நீக்கவேண்டு மென்று ஷோக் சொல்லுவாள். அது சரிதான்.

(நிபுணர் ஈசலடிக்க, கோச்சுமானுங் குதிரைக்காரரு முள்ளேவர, விசுவாசகாதகனைக் காட்டி.)

நிபுணர். — அவனைப் பிடித்திந்தத் தூணிற் கட்டு. சவுக்கைக் கொண்டுவா. (குதிரைக்காரர் பறப்பேச்சுகளால் திட்டித்திட்டி எழும்பி யெழும்பிப் பாய்ந்து பாய்ந்து குத்த, நிபுணர் சவுக்காலடித் துக்கொண்டே.)

தரு. பந்துவராளிராகம். ரூபகதாளம்.

பல்லவி.

லகாவ் - லகாவ் - லகாவ் - இந்த லண்டனைப்பாவிச்
சண்டாளனையும் நன்றாய். (லகாவ்)

அனுபல்லவி.

சகாயமாயிவன் விஷயத்திற்பரி
தாபப்படாமலே கோபம்விடாமலே. (லகாவ்)

சரணங்கள்.

1. தகாதகாரியஞ் செய்துவிட்டானிவன்
சற்சனரையும் வீணாய்க்கெடுத்தான்
அகாதவழும்பன் கூட்டிக்கொடுப்பவன்
அகப்பட்டமட்டுஞ் சுருட்டியோடுவன் (லகாவ்)

2. வேசையர்வீட்டில் வயிற்றைவளர்ப்பவன்
வித்தைபுத்தியொன்று மென்றுமில்லாதவன்
மோசடியாய்ப்பல பேசத்தெரிந்தவன்
முரடன்மடையன் முன்பின்பாராதவன் (லகாவ்)

3. குடியன்வெறியன் குடிகெடுப்பவன்
குட்டிக்கலகங்கள் செய்துமுடிப்பவன்
அடித்தடித்திவ னெலும்பெலாம்பொடி
யாகப் - போக - நோகச் - சாக. (லகாவ்)

(எல்லோரும் போகிறார்கள்.)



# அங்கம்—VIII



## களம்—I.

இடம்: ஒரு மாளிகை.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், ஷோக்சுந்தரம், விசுவாசகாதகன்.

[விசுவாசகாதகனும் ஷோக்சுந்தரமும் ஒரு சோபாவில் அமர்ந்திருக்கிறார்கள்.]

விசுவாசகாதகன்.—

தரு. பந்துவாராளிராகம். ரூபகதாளம்.

பல்லவி.

சபாஸ் சபாஸ் சபாஸ் - தையலே நீயந்தப் பையலைச் செய்தது. (சபாஸ்)

அநுபல்லவி.

பிரபாவமுடைய பண்டிதனென்று
பேர்பெறுமவன் சீர்கெடச்செய்தது. (சபாஸ்)

சரணங்கள்.

1. பலுக்கிக்குலுக்கிப் பலவாய்க்கலக்கிப்
பக்குவமாகவே சிக்கிவலைதனில்
மலைக்குமானெனப் பிடித்தவனை நீ
மாட்டிவெகுமையல் மூட்டிவிட்டவிதம். (சபாஸ்)

2. போச்சுதடியவன் புத்தியும்சக்தியும்
புகழும்மேனியும் நிகழும்கல்வியும்
ஆச்சுதடியுன்னை விட்டரைநொடியும்
அப்புறம்போகாமல் திக்பிரமைகொள்ளவும். (சபாஸ்)

3. உன்னைப்போல்வேறொரு பெண்ணைத்தேடினாலும்
உலகிலெங்கணு மிலையென்றேசொல்ல
என்னசந்தேக மிருக்குதினிமேலும்
என்தன்மனதுக் கிசைந்தகண்ணாட்டி. (சபாஸ்)

ஷோக்சுந்தரம்.—ஆ! என்னபோங்க. எல்லாமுங்களுடைய தயவு தான். நீங்கள் வைத்தால் குடுமி சிரைத்தால் மொட்டை. நானென்ன உங்கள் கையில் மணி, நீங்கள் எப்படி ஆட்டினாலும் ஆட்டலாம்.

விசுவாசகாதகன்.—வெல்ஷோக்! அதெல்லாமிருக்கட்டும், நமக்குச் சினேகிதர்களாகிய இடிமுழுங்கி, குசும்பாமேஸ்டர் முதலியவர்கள், நல்ல பெரியமனுஷியாள் வீட்டுப்பிள்ளைகள்; இவர்களையெல்லாம் நாம் கெடுத்துவிட்டோம், அவர்களுக்குள் ஒவ்வொருவனுக்கு மொவ்வொரு தாசி யிருக்கிறாள். கையிலிருந்த பணமெல்லாஞ் செலவழிந்துபோச்சுது. இப்பொழுது அவர்களுக்குக் கொடுக்க சக்தியில்லை; ஆகையால் நம்முடைய பிரதாபசந்திரரை யவாளவாள் வீட்டுக் கிட்டுக்கொண்டுபோய்ப் பணஞ்சம்பாதிக்கப் பிரயத்தினப் படுவதாகக் கேள்விப்படுகிறேன். அந்த டாம்பூல்களுக்கு நான் தம்பிடிகூடக் கொடுக்கவில்லை; நீயு மப்படியே ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். மேலும் பிரதாபசந்திரனை விட்டு அப்புறம் போகாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

ஷோக்சுந்தரம்.—அவர்கள் கெட்டார்கள்போங்க, இந்த ஓடிவான்களுக்கெல்லாம் நான் பயப்படுவேனா? நீங்கள் மலைபோலிருக்க அவர்களைப்பற்றி யாகவேண்டியதென்ன? நீங்கள் கொள்ளென்றால் கொள்ளுவேன், தள்ளென்றால் தள்ளுவேன்.

விசுவாசகாதகன்.—ஆ! ஆ! மைடியர் வெகு சந்தோஷம். உன்னைப்போ லெனக்கினி யார் கிடைக்கப்போகிறார்கள்! சீக்கிரத்தி லிந்தப் பிரதாபசந்திரனைச் சக்கையாய்ப் பிழிந்து விட்டு முன்போல் நீயும் நானும் பிரீதியாயிருக்கப்பார்.

ஷோக்சுந்தரம்.—

கொச்சகம்.

ஒருகொடியில் நானவனை யோட்டாண்டி யாக்கியுங்கள்
திருப்பணிக்கு வந்துவிடல் சித்தமென வேநினைப்பீர்
பிரியமுள வுங்களைநான் பிரிந்தும் பிழைப்பேனோ
இரவியின்றித் தாமரையு மிருப்பதுண்டோ வென்துரையே.

(விசுவாசகாதகன் ஷோக்சுந்தரத்தைக் கட்டியணைத்து முத்தமிடுகிறான். பிரதாபசந்திரன் வருகிறான்.)

விசுவாசகாதகன்.—அண்ணே! வாருங்கள் வெகு சந்தோஷம். நானிவளைத் தகப்பனைப்போல வளர்த்துங்களுக் கர்ப்பிதம் பண்ணிவிட்டேன்; அவளுங்களிடத்தில் வைத்திருக்கும் பிரீதியையும், நீங்க ளவளிடத்தில் வைத்திருக்கும் விசுவாசத்தையும் என்னோடு சொன்னாள். அதைக்கேட்டு நான் சந்தோஷப்பட்டேன்.

(விசுவாசகாதகன் போகிறான்.)

பிரதாபசந்திரன்.—ஓகோ! பெண்ணே! இதென்ன இன்றைக் கிப்படியிருக்கிறாய்? உனக்கும் நமக்கும் சினேகமுண்டானது முதல் இதுவரையிலிப்படி யிருந்ததில்லையே; ஆடையெங்கே ஆபரணமெங்கே.

ஞானசுந்தரம். — ஆ! மகாபிரபு! எனக்காடையேன் ஆபரணமேன்? நீங்களே பெரிய ஆபரணம். எனக்கு வேண்டிய வாபரணமிருக்கிறது. ஆனாலென்னுயிரு முடம்பும் உங்களதாயிருக்க ஒருவர் பண்ணிக்கொடுத்த ஆபரணத்தைப்போட்டுக்கொள்வது சரியல்லவென்று தள்ளிவிட்டேன்; தாலி கட்டினால்தானா புருஷன்? நீங்கள் கொடுக்கவேண்டும் நான் போட்டுக்கொள்ளவேண்டும்.

பிரதாபசந்திரன்.—ஆ! அப்படியா? உனக்கின்னு மென்னென்ன ஆபரணம் வேண்டுமோ சொல். லட்சமல்ல இரண்டுலட்சமல்ல பண்ணிக்கொடுக்கிறேன். ஏனின்னு மொருவாக்காயிருக்கிறாய்?

ஞானசுந்தரம்.—என்னபோங்க இராத்திரி யொரு கனவுகண்டேன். அதாவது - நீங்களும் நானும் திருவெற்றியூருக்குப் போனாற்போலவும், அங்கே அம்மன் தரிசன மானபின்பு மஞ்சள், குங்குமம் கையில் வாங்கிக்கொண்டு, மஞ்ச ளென் கையிற் கொடுத்துக் குங்குமத்தை யென் னெற்றியிலிடப் போனபொழுது கைதவறிக் கொட்டுண்டுபோனாற் போலவுங் கண்டேன்; அதுமுத லென்மனந் தத்தளிக்கிறது அந்த வடிவாம்பிகைக்குத்தான் தெரியும்.

தரு. இராகம் - காம்போதி. சாபுதாளம்.

பல்லவி.

என்தன் துரைமன மெவர்வந்துகலைப்பாரோ என்னென்னசெய்வாரோ.

அநுபல்லவி.

சுந்தரரேமனந் துடித்தலைகிறதைநான்
சொல்லிமுடியுமோ தொல்வினைப்பயன்தானோ. (என்தன்)

சரணங்கள்.

1. மாதேயுனையன்றி வேறொருபெண்ணைநான்
மனதில் நினைக்கேனென்று
ஆதிநாட்சொன்னவார்த்தை யனைத்தும்மறந்தென்னை
அலைஞ்செய்திடுவாரோ விடுவாரோ. (என்தன்)

2. அன்பர்மனதில்வாறே யாறலைவனியில்
அப்புறமும் பிழைத்தே
என்போலிருக்கின்ற மாதர்கள்முன்பாக
எங்ஙனிருப்பேனோ பொறுப்பேனோ. (என்தன்)

3. இப்படிச்செய்பவர் என்னவாரிக்கொள்வார்
என்பாவ மவரைவிடாதே
துப்பற்றவருக்குத்துணை தெய்வமென்றெவரும்
சொல்லும்வார்த்தை பொய்யோ ஐயையோ. (என்தன்)

பிரதாபசந்திரன்.—வெல் வைடியர் நீயேன் வீணாய்ச் சொப்பனங்களை நம்பி மனந்தடுமாறுகிறாய், நானுன்னைக் கைவிடுவேனென்று இப்படியே அடிக்கடி பயப்படுகிறாய்; சொன்னதைதையே சொல்லுகிறாய் போதும் போதும். உன்னிடத்தில் விழுந்த மனம் மற்றோரிடத்திற் செல்லுமா?

கொச்சகம்.

தேனார் மொழியரசே சித்திரத்தை யொத்திலங்கும்
வானார் மதிமுகத்தின் வண்மையமர் பெண்மயிலே
மீனார் கொடிமதனன் விடுங்கணையுஞ் சுடுதடிநீ
தானே யெனையாளும் தந்திரமார் சுந்தரியே.

(இருவரும் போகிறார்கள்.)

—⁂—

# இரண்டாங் களம்.

இடம்: குசும்பாமேஸ்டர் வீடு.

பாத்திரங்கள்: இடிமுழுங்கி, குசும்பா மேஸ்டர், ஸண்டேமேஸ்டர், வெட்டுணி, பத்தாயி, பாவாடைஜித்தர், திருவேங்கடத்தானு முதலியோர்; பிரதாபசந்திரன் முதலியோர்.

[இடிமுழுங்கி முதலானோர் கூட்டமாய் இருக்கின்றனர்.]

இடிமுழுங்கி.—என்ன அண்ணைத்தைமாரே, அந்தப் பிரதாபசந்திரனைக் கெடுத்தெத்தனை நாளாய்விட்டது. இதுவரையிலெவ்வளவு பணம் சேர்ந்திருக்கும், நமக்குத் தம்பிடியாவது கொடுக்கவில்லையே பிரதர்.

குசும்பாமேஸ்டர்.—நமக்கு மெஜண்டா பொடிக்குக் கூடக் காலணா கொடுக்கவில்லை.

ஸண்டேமேஸ்டர்.—ஜீடாம், நம்மேல் வெகுநாளாயொரு வாரண்டிருந்தது, அதற்குப் பணங் கொடுக்கிறேனென்று நம்மை மோசம்பண்ணிவிட்டார்கள்.

வெட்டுணி.—என்ன ஸார், நமக்கு க்ஷவரத்துக்குக்கூட ஒரு அணா கொடுக்கமாட்டேனென்றார்கள்.

பத்தாயிமேஸ்டர்.—நமக்கு ஒரு டிராம் பட்டைசாராயத்துக்குக்கூட இல்லாமற்போனதல்லவா. நானந்த மடையனை விட்டேனா. ஆகட்டுமொரு கை பார்ப்போம்.

பாவாடைஜித்தர்.—என்ன அப்பனே நான் மடத்தில் திருப்பணி செய்துகொண்டிருந்தாலுமிருப்பேன், என்னேடென்னென்னவோ புளுகிக் கடசியிற் காஷாயத்துக்குக்கூடக் காசில்லையென்டான்.

திருவேங்கடத்தானு.—மா அப்பதோடு நாகு ஸ்ரீசூர்ணிகிகூட ஒக தம்மிடி யிவ்வலேது முண்டாகொடுகு.

ஸண்டேமேஸ்டர்.—

விருத்தம்.

தடநெடு முலகி லிந்தத் தப்பிலிப் பயலைப் போலக்
கிடைப்பதே யரிதா குங்காண் கிட்டிய மட்டு நம்மைத்
தடவியே தலையின் மூளை தனையுறிஞ் சிட்ட கெட்ட
மடையன்றன் வார்த்தை நம்பி மதிமோசம் போய்விட் டோமே.

எல்லோரும்.—(சேர்ந்து.)

தரு. இராகம் - சாவேரி. சாபுதாளம்.

பல்லவி.

என்னென்னவோசொல்லி நம்மைமோசஞ்செய்தான்
இனியவனை விட்டோமா.

அநுபல்லவி.

கன்னக்குறவன்பைகாட்ட அவனைநாமே
சின்னபின்னமாக்கிச்சீர் குலைத்திடுவோமே. (என்)

சரணங்கள்.

1. ஜம்பமாயவனுக்கு விருந்துசொன்னானன்று
சாராயம் நாம்கொடுத்தோம் - ரத்ந
கம்பளியுடன் லஸ்டர்க்ளோபுவால்வேஷ்டிகள்
கவுரமாய்த் தொடுத்தோம்
தம்பியிப்போது தலைநாறிப்போகிறான்
வம்புந்தும்புமாக வாய்விட்டுப்பேசுறான். (என்)

2. கண்டாலெதிரினில் நின்றுபேசுவதில்லை
கம்பி காட்டுகிறான்
கொண்டாட்டமாய்த்தலை குட்டைசொக்காயுடன்
குலுக்கிக்கை யாட்டுகிறான்
அண்டாதடாம்பூல் அவனையும்நாமே
சண்டமாருதம்போலச் சாடுவோமே. (என்)

3. அவனிடகூத்தியா ரவனைக்காட்டிலும்
அநியாய மானமுண்டை
பவுஷு கெட்டடர்ட்டி ஸ்கவுண்ட்ரல்நம்முடனே
பலவாய்ச் செய்தாள்சண்டை
எவரைக்கண்டாலுமே ஈபீடாமென்றுதள்ளும்
இவளுக்கித்தனைகர்வம் யார்கொடுத்தாரோசொல்லும். (என்)

இடிமுழுங்கி.—

விருத்தம்.

ஆகையா லினிமேல் நாமு மழகனும் பிரதாப சந்திரன்
த்யோகியாம் தாசி வேஷாக்கு சுந்தரத் திடத்தில் வைத்த
மோகத்தைக் குலைத்து வேலை முடிக்கவே வேண்டு மிப்போ
காகத்தி னுறவைப் போன்று கலந்துநீர் வருவீ ரண்ணே.

திருவேங்கடத்தானு.—அதிசெடிந்திமுண்டா? தானிவலே யிங்க எந்தரு அம்மாயிலு உந்நாறு. ஒக்கதெ ஒக்கதெ வத்தி பெட்டிந்தண்டே பிரம்மதேவுடுவல்ல கூட ஆர்ப்பேதானிகி சரிபடது.

பாவாடைஜீத்தர்.—ஆமாமப்பனே யவன் சிறுபிள்ளை; செடிக்கொரு பூவாயும் மரத்துக்கொரு பழமாயும் அனுபவிக்க வேண்டியகாலம்; நாம் போய்ச் சொன்னால் கேட்பான். உபதேசமில்லாம லொருகாரியமும் முடியாது.

ஸண்டேமேஸ்டர்.—அடசே, இந்த ஷோக்சுந்தரமென்ன கெட்டுப்போன முண்டை, இவளை நானறியமாட்டேனு, ஆயிரமாகிலுமையம்பதினுயிரத்துக் கச்சாரந் தட்டியிருக்கிறுள்.

குசும்பாமேஸ்டர்.—ஆமண்ணே, அவள் பயல்களை மயக்கவந்த பரதேவதை, அவளைப் பார்த்தவுடனே எல்லாருக்கு மொரு நிராத மோகமுண்டாய்விடுகிறது. எல்லாம் தருப்பு நகையிலும் சரிகைச்சேலையிலும் ஜவ்வாதுபொட்டிலும் சிக்ஸாபொடியிலு மிருக்கிறது.

பத்தாயிமேஸ்டர்.—அண்ணே, யவளுக்குச் சாராயத்தின்மீது ரொம்பப் பிரியம். நித்திய மிரண்டுபுட்டி வேண்டியது. நானெவ்வளவோ வாங்கிக் கொடுத்திருக்கிறேன். அதையாவது நினைத்தாளா?

திருவேங்கடத்தானு.—தானிகி அடகவலெனு, மண்டே தீபானிகி நூனெனு, தாசிலகு சாராயந்து ஒகடி.

பாவாடைஜீத்தர்.—கண்டவர் விண்டிலர் - விண்டவர் கண்டிலர். அடே தாதா எல்லாருங் குடிப்பார்களா, சிலருக்கு புட்டி சிலருக்குக் குளிகை இப்படி மாறிமாறியுண்டு - அட அதெல்லாம் பரமரகசியம்.

வெட்டேணி.—அடபோங்காணும் தேவடியாக்கள் பிழைப்பெல்லாந் தெருவாசற்படியில்; அதுதானவர்களுக்கு ஆபீஸ்; பட்சமெல்லாம் பணங்கொடுக்கிறவரைக்கும்; காசுவறண்டால் கழுதை; பேசி யெதிர்த்தாற் பேயே நாயே; இது தெரியாதா; நாமென்னமோ இப்படி புத்திகெட்டுப்போய்த் திரிந்துகொண்டிருக்கிறோம்.

இடிமுழுங்கி.—ஏதண்ணே வெட்டுணியவகளே, வேதாந்தத்தில் முழுகிவிட்டாற்போலிருக்கிறது. அல்லா தாசிகளு மப்படியல்ல; நம்முடைய மின்னல்கொடி யிருக்கிறாளே அவள் ரொம்பவும் நல்லவள். நம்மைவிட மற்றாரையு மறியமாட்டாள். நாமவளுக்கு ரொம்பப்பணங் கொடுதிருக்கிறோம். இப்பொழுது நம்மிடத்தில் ஒருகாசு இல்லாமற்போனாலும் பிரீதியிற் குறைவில்லை.

திருவேங்கடத்தானு.—ஆகா அட்ளானு தேவரா! ஆமூட விப்பிதே மீ மனசுகு எமிகாவுண்ணே.

பாவாடைஜித்தர்.—அட போங்காணும், அம்பலத்திற்கு வந்தபின் ஆடாமலிருக்கலாமா? அப்பனே, இந்த வூரிலாரார் தேவடியாள் வீட்டிற்குப் போய்க்கொண்டிருக்கிறார்களோ அவர்களெல்லா மவளுக்கு ஸ்நேகம்.

இடிமுழுங்கி.—ஆ! ஆ! ஆ! அப்படியா! (மூக்குமேல் விரலைவைத்துக் கொள்ளுகிறான்.)

ஸண்டேமேஸ்டர்.—என்ன அண்ணாத்தை, இவ்வளவாச்சரியப் படுகிறீர்கள். ஒரு தாசி யுங்களைவிட மற்றாரையுங் கண்ணெடுத்துப் பார்க்கிறதில்லையென்று தன் நாயகனுக்கு ஸ்டாம்பிலெழுதிக்கொடுத்தாள்; அவனுக்குப் பணமிருக்கிற வரையிலும் அவனில்லாதவேளையில் மற்றவருக் குபயோகப் பட்டுக்கொண்டிருந்தாள். இப்போ அவனிருந்தாலு மில்லாமற்போனாலும் ஜாரியாய்விட்டது; என்னடியென்றால் ஆ! என்னபோங்க தாசிவீடென்னிருந்தால் பத்துப்பேர் வரப் போக யிருப்பார்கள். இதுக்கெல்லாம் நீங்கள் கோபிக்கலாமாவென்று ஒரு முத்தங்கொடுக்கிறாள். இதனால் சகல தோஷ பரிகாரமாய்விடுகிறதாம்.

குசும்பாமேஸ்டர்.—அட போங்காணும், ஒரு தாசிக்கும் ஒருவனுக்கும் முதல் முதல் ஸ்நேகமுண்டாகும்போது படுக்கைவீட்டிலிருந்த விளக்கை யவித்துச் சத்தியம்பண்ணிக் கொடுக்கச் சொன்னாள்; மறுநாளவளும் மற்றொருவனும் பேசிக்கொண்டிருக்கும்போது அந்த விளக்குத்தா னெரிந்துகொண்டிருந்தது.

(இடிமுழுங்கி முதலியோர் செல்கின்றனர். பிரதாபசந்திரன், குணலயர், நிபுணர் இவர்கள் வருகிறார்கள்.)

குணலயர்.—என்னஸார், பிரதாபசந்திரரே, நாங்கள் சொன்னதெல்லாம் விழலுக்கிறைத்த நீராய்விட்டதே.

நிபுணர்.—என்னஸார் மனம்போன வழியெல்லாம் விட்டுவிட்டீர்கள்! ஆ! உங்களுடைய கவுரவமென்ன! கல்வியென்ன! புத்தியென்ன! எல்லாமென்னவாய்ப் போய்விட்டது.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

நண்பரா யிருக்கும் நீங்கள் நமதுநெஞ் சத்தில் வீணாய்
புண்படும் விதமா யேனோ புகலவே வந்தீ ரையோ
எண்படா திந்த வார்த்தை யினியதைத் தள்ளி நீங்கள்
பண்படும் வேறு வார்த்தை பகருவீர் தயவு செய்தே.

நிபுணர்.—

தரு. இராகம் - தர்பார். சாபுதாளம்.

பல்லவி.

உன்மகிமையெங்கு நீக்கிவிட்டாயோ - உளமயங்கிக்கெட்டாயோ.

அநுபல்லவி.

துன்மதிகளுரை வார்த்தையைக்கேட்டு
பன்மதிநாம்சொல்லி யுந்தள்ளிப்பிரதாப. (உன்)

சரணங்கள்.

1. வேசையரால்வரும் வேதனையீதென்று
விவரமாகவே சொன்னோம்
மோசவலையிற்பட்டு முற்றும்நன்னெறிகெட்டு
மூடர்வழியைத்தொட்டு முழுதுமெங்களைவிட்டு. (உன்)

2. ஐயோஇனிமேலங்கு போகவேண்டாமென்று
அன்புடனே சொன்னோம்
குய்யோமுறையோவென்று கூவியழுதிட்டோம்
கொஞ்சமேனுமுன்தன் நெஞ்சங்கரையவில்லை. (உன்)

3. என்னஸாரொருபண் டிதன்கெட்டுப்போனானு
மெல்லோர்க்கு மல்லோவரும்
உன்னையொத்தவனேயீ துணராமற்போனால்
பின்னையாரறிவாரோ பிரபஞ்சத்திலெங்கணும். (உன்)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

போதும்நீர் நமக்குச் சொன்ன புத்திக ளெல்லாம் வீணாய்
வாதுக்கும் இனிமே லிங்கு வருவதை விட்டு வேசை
மாதரைத் தூஷிக் காமல் மகிமையைக் காத்துக்கொள்ளும்
பேதமில் லாமற் சொன்னேன் பிரியமாய்க் கேட்டுப் போவீர்.

நிபுணர்.—அண்ணே! குணாலயரே நாம் போவோம் வாரும்.

[நிபுணரும் குணாலயரும் மிகவும் வியாகூலத்தோடு செல்கின்றனர். இடிமுழுங்கி முதலியோர் வருகின்றனர்.]

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

அன்றுநான் விருந்தி லும்மை யன்புடன் பார்த்த பின்பு,
இன்றுமே காண லாச்சு தித்தனை நாளாய் நீரும்
சென்றதும் எவ்வி டத்தோ சிந்தையு மகிழு மாறு
ஒன்றிய வன்பு நம்மே லுற்றநம் பிரதரே சொல்வீர்.

இடிமுழுங்கி.—

அல்லோவென் பிரதரே யுங்க ளன்பைநா னென்ன சொல்வேன்
நல்லோர்கள் வாயி லென்றும் நன்மைதா னேபி றக்கும்
பல்லோர்க ளென்சொன் னாலும் பாரினி லும்மைப் போல
வல்லோரைக் கண்ட தில்லை வாஸ்தவ மீதா மண்ணே.

அண்ணே பிரதாபசந்திரரே, ஸகிண்ட்லயன் பீச்சில் நமக்கெப்பொழுது பார்த்தாலும் வேலையிருக்கிறது, அதனால் வரக்கூடவில்லை.

பிரதாபசந்திரன்.—ஐயா ஜித்தரே, ஏமையா விஷ்ணுபாகவதாலு, நீங்களெல்லாமே னடிக்கடி வருகிறதில்லை.

திருவேங்கடத்தானு.—எக்கடனண்டி தாமுதா ஷோக்குசுந்தரமூர்தா கூடனே யுந்நாரு, ஏமைய மெட்ளவுண்டேநா அனிநேநு வச்சேதிலேது.

பாவாடைஜீத்தர்.—அப்பனே, சிவபெருமானைப்பார்க்க நந்தியடிக ளுத்தரவில்லாமற் போகக்கூடாது ; அப்படியே யுங்களைப் பார்க்க க்ஷோக்சுந்தரத்தி னுத்திரவு வேண்டியிருக்கிறது. எப்படியானாலும், நீங்கள் சந்தோஷமாயிருந்தால் போதும். நானென்ன நாடோடிப்பயல். இன்றைக்கிங்கே யிருப்பேன், நாளைக்குப் பொதியமலைக்குப் போவேன்.

இடிமுழுங்கி.—அண்ணே என்னபோங்க, எந்த விஷயத்திலு மாராய்ந்து பார்க்கவேண்டியது. ஒன்றைப்பிடித்தா லதனோடே யிருக்கக்கூடாது ; க்ஷோக்சுந்தர மிருக்கிறாளே ரொம்ப ரூபவதி, ரொம்பப் புத்திசாலி, ஆனா லின்னு மவளைப்போ லெத்தனைபே ரிருக்கிறார்கள் தெரியுமா ?

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

அவளைப்போ லுலகி லின்னு மழகுடன் குணமு மென்றும்
தவறிலா வன்பு முள்ள தையலு முண்டோ வீணாய்
கவலையுற் றேனே சொல்வீர் கண்டவர் போன்றே யிந்த
நவமணி சிறப்பை நீரும் நன்றாக வறிந்தி லீரோ.

இடிமுழுங்கி.—என்னஸார் எனக்கிந்த விஷயங்களி லுங்களைவிட ஸர்வீஸ் அதிகமாக வுண்டு.

திருவேங்கடத்தானு. — தேவரா ! வாறு செலவிச்சேதி சரியைன மாட, நாகு வாரிகண்டே ஸர்வ்ஸ் ஜாஸ்தி.

பாவாடைஜீத்தர்.—அப்பனே, யெனக்குக் கைலாயம்முதல் கன்னி முனைவரையுமுள்ள சங்கதிகள்தெரியும். அப்பனே, அவர் சொல்லுகிறது சத்தியமான வார்த்தை, நம்பினவருக்குப் பலனுண்டு.

இடிமுழுங்கி. — அண்ணே பிரதாபசந்திரரே, நல்ல பருவம் நாளைக்கு வருமா ? இப்பொழுதுதான் நீங்கள் நல்ல பிளஷர்களை யனுபவிக்கவேண்டியது; நீங்கள் சும்மா மயங்காதீர்கள்.

விருத்தம்.

நமதிளமைக்கா லத்தில் நலமான பிளஷர்க ளெல்லாம்
குமரிக ளோடி ருந்து குலாவியே யனுப வித்தல்
அமைதியாம் சுகமென் பார்க ளப்புறந் துன்ப முற்றால்
உமையும் படைத்த தெய்வம் ஒயிலையும் படைத்த தன்றே.

பிரதாபசந்திரன்.—அவளுடைய சங்கதிதெரியாமற் பேசுகிறீர்கள்.

தரு. இராகம் - சாவேரி. ஆதிதாளம்.

பல்லவி.

என்னென்னசொன்னாலுமந்தப் பெண்ணைவிடவேதேயில்லை
யேதுக்கு போதிக்கவந்தீர்.

அனுபல்லவி.

இன்னின்னதென்றவள்குண மெடுத்துச்சொல்லமனிதர்
எவர்க்கும்ஆயிரமுடி யவர்க்குந்தரமல்லவே. (என்)

சரணங்கள்.

1. பொட்டிட்டுபொன்ரவைநகை நட்டிட்டுக்குலுக்கிநல்ல
பட்டிட்டுப்பல்லறங்களை விட்டிட்டு
கிட்டியபயல்கள்தம்மை யொட்டிவந்தமட்டுங்காசைத்
தட்டிகெட்டித்தள்ளுங்கெட்ட மட்டியாய்நினைக்காதீர்கள். (என்)

2. மாயங்களிலேபல்லு பாயங்களைச்செய்துவெகு
நேயமுள்ளவரைபோலந் நியாயமாகவே
தீயபிணியாலுயிரு மாயவேசெய்வாரைப்போலித்
தாயினைநினைப்பதென்ன ஞாயமோசொல்லுவீர்நீரும். (என்)

3. இத்தனைநாளவளோடு மெத்தனையோசுகங்களைச்
சித்தமிசைந்தேயனுப வித்ததாலே
ஒத்த அவளைப்போலிச் சகத்தினிலில்லையெனவே
சத்தியமாய்ச்சொல்வதற்குச் சித்தமாய்நானிருக்கையில். (என்)

இடிமுழுங்கி.—அண்ணே, புதிதாய் தாசிவீட்டுக்குப் போகிறவர்களைப் பார்த்தால் பழைய ஸர்வீசுள்ளவர்களுக்கெல்லாம் சிரிப்பாயிருக்கிறது. நானு மும்மைப்போல்தான் முதலில் தாசிகளை வெகு சத்தியவதிகளாய் நினைத்திருந்தேன். நம்முடைய மின்னல்கொடியைவிட வேறொருத்தி முகத்தைப் பார்ப்பதில்லையென்று நிச்சயித்துக்கொண்டேன். ஆனால் பொழுது விடிய விடிய நட்சத்திரம் மறைவதைப்போலவளுடைய பிரீதி மறைந்துபோய்விட்டது. நீங்களுஞ் சீக்கிரத்தி லறிந்துகொள்வீர்கள். ஆனாலிப்பொழுதே யனேகமிருக்கிறது, அது உங்களுக்குத் தெரியவில்லை.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

என்னமோ யிருக்கு தென்றே யெடுத்துநீர் சொல்ல வந்தீர்
அன்னவை யுண்மை யாகில் அயனா னுதி தேவர்
முன்னின்று தடுத்திட் டாலும் முகத்தைநாம் பார்ப்ப தில்லை
பண்ணுவ தேதோ வீணாய்ப் பார்த்திட லென்தன் வார்த்தை.

இடிமுழுங்கி. — என்னஸா ருங்களுக்கு பத்தொன்பதுவயது, அந்த பிஸ்டுக்கு கிட்டக் கிட்டப் பாதிவயதாய்விட்டது, நீங்கள் பிரபஞ்சவிஷயங்க ளொன்றும் அறியாதவர்கள்; அவளோ இதுவரையி லனேக வாலிபரைக் கெடுத்துக் கொடிபோட்ட நீலி; கடையில் வந்தவனு் விசுவாசகாதகன். அந்த படவாவுக்குத் தகுந்தபேரே கிடைத்தது.

பிரதாபசந்திரன்.—ஆ! ஆ! அப்படியா! அவளொரு தென்னாட்டு ஜமீன்தார் மகளென்றும், அவரிறந்துபோகும்போது அவளையும் அவள் தாயையும் தன்னிடத்தி லொப்புவித்ததாயும் அவளைத் தான் மகளைப்போல் காப்பாற்றினதாயும் சொன்னான். ஆ! என்னமோசம்! அந்த ஸ்கவுண்ட்ரலை நாமினி நம்பமாட்டோம். அவன் கெட்டான் அவன் கூத்தியாருங் கெட்டாள்; அண்ணே நீர் சொன்னது வாஸ்தவந்தான். ஒருநாள் நானவள் வீட்டுக்குப் போகும்போது ...னைவளைக் கட்டியணைத்து முத்தமிடப் பார்த்தேன், ...நல் தகப்பன் மகளைக் கட்டியணைத்து உச்சி முகருவதாய்ப் பாவித்திருந்தேன். இப்பொழுது வெட்டவெளியாச்சுது.

இடிமுழுங்கி.—என்ன ஸார் இந்தப் பட்டணத்தி லிப்பேர்க்கொத்த பயல்கள் எத்தனையோபே ரிருக்கிறார்கள். வெகுநேர்த்தி! இவன் தகப்பன், அவள் மகளா? காலமென்ன கெட்டுபோய் விட்டது! கேளுங்கள் சாத்திரம்படித்து வேதாந்தத்துக்கு வருவாரைப்போலும், சுட்டுக்கெட்டு வைத்தியராகிறவர் களைப்போலும் நான் முன்னே மோசம்போய்ப் பின் அனுபவம் சம்பாதித்துக்கொண்டவன்.

தரு. இராகம் - கலியாணி. சாபுதாளம்.

பல்லவி.

இந்தச்சுகத்தி லென்னவிருக்குது - இன்னமிருக்குதுகாண்.

அநுபல்லவி.

அந்தமாயிவ் வுலகந்தனிலெத்தனை
அன்னநடையார்க ளின்னுமிருக்கிறார். (இந்த)

சரணங்கள்.

1. உடையிலொருத்தி நடையிலொருத்தி ஒயிலாயக்கை வீசலொருத்தி
ஜடையிலொருத்தி ஜாடையிலொருத்தி சகல சுகமளிக்க
தடையிற்படிந்த பாம்பைப்போன்று தாசியொருத்தி கைவசமாகி
அடையவேண்டிய சுகத்தைவிட்டு அவளேகதியா யிருக்கின்றீர். (இந்த)

2. பச்சைப்பதங்களைப் பாடலிலொருத்தி பலவாய்நின் றாடலிலொருத்தி
இச்சைகவரபி நயத்திலொருத்தி இன்பமெலாந் தரவே
மெச்சுந்தனமுங் கனமுங்குணமும் மேனியழகும் பருவமும்
சிச்சீஇப்படி யேன்வீணுக்கிறீர் தெரியாமலே மோசம்போகிறீர். (இந்த)

3. மழலைவார்த்தைக ளாடலிலொருத்தி மதனுகமத்தினி லொருத்தி
தழல்போற்காமத்தை மூட்டலிலொருத்தி தணிப்பதி லொருத்தி
உழலுமுலகத் துயரைநீக்கி உள்ளமகிழச் செய்பவர்கோடி
தழுவியவரைச் சேர்ந்திடாத ஜனனமேதுக்கு வீணுக. (இந்த)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

எற்றநம் பிரதரே நீரு மெடுத்தின்று சொன்ன வார்த்தை
மாற்றொணுச் சுகத்தைத் தந்து மனதையுங் குளிரச் செய்தல்
தேற்றமென் றறிந்து கொண்டேன் செய்குவே னந்த வண்ணம்
காற்றுள்ள போதே தூற்றுங் கடமையை யறிந்து தானே.

(செல்கிறான்.)



# அங்கம்—IX



## களம்—I.

**இடம்:** பிரதாபசந்திரன் வீடு.

**பாத்திரங்கள்:** பிரதாபசந்திரன், அவன் தாயார், வைத்தியர், லக்ஷ்மீவிலாசர், நிபுணர் முதலியோர்.

[பிரதாபசந்திரன் ஓர் ஆசனத்தில் அமர்ந்திருக்கிறான். அவன் தாயும், வைத்தியரும் வருகிறார்கள்.]

**தாயார்.**—(மகனை நோக்கி.)

விருத்தம்.

படித்ததோ நீதி நீயும் பழகினே ரெல்லாம் நல்லோர்
பிடித்ததோ நல்ல றத்தைப் பேசிய தெல்லா முண்மை
அடுத்துப்பின் மதிம யக்கி யக்கிரம வேசை யர்க்குக்
கொடுத்துனைக் கெடுத்த பாவி குலமெலா மழிந்தி டாதோ.

தரு. இராகம் - ஆனந்தபைரவி. சாபுதாளம்.

ஐயையோ நீநல்ல பிள்ளைஆனாலுமீ தென்ன அநியாயக்கொள்ளை
ஐயையோ நீநல்ல பிள்ளை.

சரணங்கள்.

1. எத்தனைபேர்சொன்னாரன்று அந்த
ஈனனிடவீட்டிற்கேன்போரு யென்று
சித்தம்பிரமித்தங்குசென்று நீ
செய்ததெல்லாம்வெகு சிரிப்பாச்சே யின்று. (ஐயையோ)

2. வேசையர்கையிலுனைக்காட்டி அந்த
வெள்ளாட்டியருனைவெறியன்போ லாட்டி
மோசவலைகளில் மாட்டி பொருள்
முழுதுங்கொண்டனுப்பினர் முடவன்போல் நீட்டி. (ஐயையோ)

3. கண்டவர்களுக்கெல்லாம்பேச்சே நல்ல
கனமுந்தனமுமுந்தன்கைவிட்டுப் போச்சே
பண்டிதர்களுக்கெல்லா மேச்சே உன்னை
பார்க்கப்பார்க்க மெத்த பரிதாபமாச்சே. (ஐயையோ)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

கனமுடன் நன்மை கீர்த்தி காருண்ய முதலா யுள்ள
முனிவரைப் போல் நடித்தே முடிவினில் மோசஞ் செய்யும்
மனிதரை நம்பி விட்டேன் வந்ததிவ் வண்ண மம்மா
தனயனுஞ் செய்த குற்றந் தாயன்றிப் பொறுப்ப ருண்டோ.

(தாய் செல்கிறாள். நிபுணர் முதலியோர் வருகின்றனர்.)

நிபுணர்.—

தரு. இராகம் - புன்னாகவராளி. சாபுதாளம்.

பல்லவி.

ஏதுக்காச்சுதண்ணே நாம் சொன்னதன்று ஏதுக்காச்சுதண்ணே.

அனுபல்லவி.

ஏதுக்காச்சுதப்பாதகன்மனைக் கேகொணுவிதமாகச் சொன்னது
எத்தனையுளவத்தனையுநீர் சுத்தமாய்க்கவனித் திடாமையால்.(ஏதுக்கா)

சரணங்கள்

1. சீதளாமதிபோலுமதுமுக தேஜசுமிழந்தீர்
வியாதிகட்கிடமாயுமது திரு
மேனியோவலிதானழிந்ததி ஊனமாகியும்போனது
மெத்தவும்பரிதாபமாகுது சித்தமும்பிரமித்துப்போகுது. (ஏதுக்கா)

2. சாத்திரம்படித்தீர்பலவித சங்கைகள்முடித்தீர்
பாத்திரமறிந்தே யுமைப்போன்ற
பண்டிதர்தமையண்டையில்நீர்கொண் டிருந்துமக்கண்டகப்பயல்
பறைகலைத்திமொன்போலுமை முறைகுலைத்துளம்வருத்தினனமை.
(ஏதுக்கா)

3. கேட்டில்வீழ்கையிலேசொலும் வார்த்தைகேட்பரோமனிதர்
மாட்டிக்கொண்டபின்பே மனநொந்து
வாடுவார்திகைத்தோடுவார்வழி தேடுவாரருள் நாடுவார்
வந்துமக்கன்றுரைத்தோமதை அந்தியத்தினிலுணர்ந்தீரிதை. (ஏதுக்கா)

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - எதுகுலகாம்போதி. ஜம்பைதாளம்.

பல்லவி.

பரமனேயெனைப்போன்ற பாவிதன்னையுமுலகிற்
படைத்ததேதுக்குவீணாக.

அநுபல்லவி.

சிரமைப்பட்டிவ்வாறு சீர்குலைந்தேனன்றி
செய்திலேன் நன்மையொன்றும் என்றும். (பரமனே)

சரணங்கள்.

1. தேசாபிமானியாய்ச் சீர்த்திருத்தங்கள்பல
செய்யலாமென்று நினைவுற்று
நேசராமும்மோடு நேர்ந்தமட்டுமேசொல்லி
நிலைநிறுத்தியதைப்பாரீர் தேரீர். (பரமனே)

2. அருக்கனுதயமாகி யரவிந்தமலர்தல்போல்
அறிஞனொருவன் தோன்றலால்
பெருக்கிமதியிலரறிவைப்பே ரெடுப்பதுண்டு
பேதையென்னைப்போலவோ சொலவோ. (பரமனே)

நிபுணர்.—

தரு. இராகம் - சுருட்டி. ஆதிதாளம்.

பல்லவி.

போதாதோஇந்தமட்டும் நீர்பட்டது போதாதோஇந்தமட்டும்.

அநுபல்லவி.

போதாதோஇந்தமட்டும் போக்கிரிப்பயல்கள்செய்
சூதாலலைந்துநீர் துயரமுற்றிருந்தது. (போதா)

சரணங்கள்.

1. பண்டிதர்பலர்கெட்டுப் பரத்தையர்தம் பாழ்வலையினிற்பட்டு
கண்டதேகாட்சியாய்க் கழிப்பர்தந்நாட்களை
கருத்தினிலுணர்ந்துநீர் வருத்தமேன்படுகிறீர். (போதா)

2. சந்திரபிம்பந்தனிலுங்களங்கமுண்டு சற்சனர்நடக்கையிலும்
நிந்தைக்குரியபல நேர்ந்துளவதைநீர்
நினைக்காமற்படுகிறீர் மனக்கவலையேயின்னும். (போதா)

3. போனதுபோச்சுதுநீர் அதனால் நெஞ்சம்புண்ணாவதேனோ இனி
ஆனைக்குமொருவேளை யடிசறுக்குமென்பார்
ஐயா இவ்வார்த்தையென்ன பொய்யாநீரறிந்தது. (போதா)

(பிரதாபசந்திரன்தாய் வருகிறாள். நிபுணர் அவளை நோக்கி.)

விருத்தம்.

வேசையர் மயக்கி லாழ்ந்தே வெந்துய ரடைந்த வெங்கள்
மாசிலா மணியாம் நண்பன் வகையுடன் துயர நீங்கி
நேசரா மெம்மை யெல்லாம் நிகரிலா னந்த மென்னும்
ஊசலி லிடவே மீண்டும் உயிர்பிழைத் தனனே யம்மா.

தாய்.—தம்பி வாருங்கள்! என்ன! ஐயா வீட்டிலில்லை. அப்பன் செய்த காரியத்தினால் நாங்களெல்லாம் மிகவும் நொந்து போனோம். இதோ ஐயா வைத்தியரிருக்கிறாரே. அவர் தயவினாலும் மந்திரபலத்தினாலும் பெரியோர்செய்த நன்மை யினாலும் ஆண்டவன் கிருபையினாலும் பிழைத்தெழுந்தான்.

நிபுணர்.—நாங்க ளனேகம் டாக்டர்களை யனுப்பினோமே யவர்களா லொன்றும் பிரயோஜனமில்லையா?

தாய்.—அவங்களும் பார்த்தாங்க அய்யாவும் பார்த்தார்.

வைத்தியர்.—அம்மணி அப்படி சொல்லாதே, அந்த வெள்ளைக் காரப்பயல்களுக் கென்னதெரியும். கட்டியென்று அறுக் கிறது, கைநோவென்றுச் சுடுகிறது, இதுதான் தெரியும். மேலும், ஊரிற்பட்ட பிணங்களையெல்லாம் அறுக்கவும் அதி லுள்ள கொழுப்பையெல்லா மெடுத்துக்கொள்ளவும் தெரி யும். இதற்குத்தானவர்களுக்கு நாலாயிரம் ஐயாயிரம் சம்பளம். நாங்களோ வலிய மாத்திரை யிழைக்கிறோமென் றாலும் 'தேனுங் கொண்டுவந்தையா' வென்கிறார்கள். என்ன அப்பனே காலஞ் சுத்தமாய்க் கெட்டுப்போச்சு.

நிபுணர்.—

விருத்தம்.

காணாத மருந்தை யெல்லாங் கண்டவன் போலப் பேசி
வீணான புடங்கள் போட்டு வெந்துநீ றாய்த்த ணிந்தே
நாணாமல் மூடர் தம்மை நமனூரிற் சேர்த்தே மாந்தர்
வாணாளைக் கொள்ளை கொள்ளும் மந்திர குருவே வாரீர்.

வைத்தியர்.—அப்பனே சொல்லாலென்னைக் கல்லாக்கிவிடுகிறையே. நானென்ன கண்டேன் நீ யென்ன கண்டாய். பெரியவாள் சொன்ன சாத்திரமுண்டு நானுண்டு.

நிபுணர்.—ஆகாகா வைத்தியரே! முன்னோர்கள் சொன்ன நூலை யெல்லாம் வாசித்தீரா? அப்படியானால் சரிதான். இப்பொழு தனேகர் வயிறு பசித்தால் வட்டுவத்தைத் தூக்கிக்கொண்டு திரிகிறார்களே அப்படி நினைத்தேன். ஆயினும் ஐரோப்புப் பண்டிதர்களை நிந்திக்கவேண்டாம். அவர்களுடைய வைத்திய ஞானத்திற்கு வரம்பில்லை. நம்முடைய சினேகிதருக்கு நீரென்னென்ன மருந்து கொடுத்தீர்.

வைத்தியர்.—அப்பனே, சைத்தியகுலாந்தகன், ஜ்வரகஜாங்குசம், ருத்ராட்சகண்டகம், சிதசண்டமாருதம், கிரந்திநாசனம், அசக்திமர்த்தன சிந்தாமணி இவ்வகையான அவிழ்தங்களைத்தனேயோ கொடுத்திருக்கிறேன். மேலும் விபூதியு மந்திரித்துக் கொடுத்தேன். கழிப்புங் கழித்தேன். அப்பனே நமக்குக் கொஞ்சம் வாலை வசியம். அல்லா மவளுடைய ஆட்டந்தான்.

குணலையர்.—அண்ணே, நீங்கள் படாதபாட்டினால் மனவருத்த முற்றிருக்கிறீர்கள். ஆகையினால் காடுமலை யடர்ந்திருக்கும் பிரதேசங்களிற் சென்று அங்கு உல்லாசமாய்ச் சஞ்சரித்தால் மிகவும் நலமாயிருக்கும். தங்களுடைய தேகத்திற்கும் வலிவுண்டாகும்.

வைத்தியர்.—அப்பனே யிதெல்லா மென்னவேலை, பிள்ளையாய்ப் பிறந்தால் வீட்டோடிருக்கவேணும்; காட்டுக்குப் போகிறது, துப்பாக்கி சுடுகிறது, கஸரத்து பண்ணுகிறது இதுகளெல்லாம் போக்கிரிவேலைகள், நமக்குத் தகாது.

நிபுணர்.—

விருத்தம்.

சாயாது வைர மேறித் தழைத்திடும் விடவி போன்று
ஓயாத வலிமி குந்தே யுயிர்பிழைத் திருக்க முன்னாள்
நியாயாதி பதிக ளோடு நெறியுள வரச ரெல்லாம்
வியாயாம மென்று சொல்லும் மெய்த்திற வழியி லுற்றார்.

அப்புறந் துருக்கர் நாட்டை யாக்கிரமித் திட்ட வந்நாள்
வெப்பமார் கிரண நீங்கும் இரவிபோன் மெலிந்து நின்றோம்
இப்பொழு தாங்கி லேய மன்னர்க ளிந்நா டாள
ஒப்பிலா தவனே நாமு மூழல்வதேன் வலிகு றைந்தே.

நேத்திர மிரண்டும் புண்ணாய் நிகழுமா றிராப் பகல்கள்
சாத்திரம் படித்தே தங்கள் தலைதனை யுடைத்துக் கொள்வார்
மாத்திர மன்றித் தக்க வலியுடன் வாழத் தங்கள்
காத்திரங் களைவ ருத்தா ரிற்றைநாள் கற்கு மைந்தர்.

ஆதலா லிவரைப் பார்த்த வைரோப்புத் துரைக ளெல்லாம்
மோதியே வீசுங் காற்று முன்னின்ற துரும்பைக் கண்ட
மாதிரி யாய்ச்சற் றேனு மதிக்கிலா ரிதுவே நம்மோர்
இயாதியும் பலமும் அந்தோ கேட்கவே மனந்து டிக்கும்.

**பிரதாபசந்திரன்.** — ஓய் வைத்தியரே, இராம ரிராவணாதியரைச் செயித்ததும், பாண்டவர்கள் துரியோதனாதியரை வென்றதும், இன்னும் நம்முடைய பற்பல வரசரெல்லாம் செயித்ததும், ஆயுதப் பயிற்சியினாலும், பலத்தினாலும், தைரியத்தினாலுமேயன்றிப் பிள்ளைகளாய்ப் பிறந்து வீட்டோடிருந்ததினாலல்ல. ஆனாலும்முடைய சித்தாந்த மிப்பொழு துண்மையாயிருக்கிறது. இந்தக்காலத்தில் நம்முடைய தேசத்துச் சிறுவரெல்லாம் மூளையுருக ஞானத்தைச் சம்பாதிக்கிறார்கள். ஆனாலவர்களுடைய தேகமும் பலமு மேதுக்குதவும்; துரும்பெடுக்கத் தொண்ணூறுபேர் வேண்டியது.

**வைத்தியர்.**—அப்பனே நீங்கள் கற்ற கல்விக்கு நாங்களெங்கே.

**நிபுணர்.**—

தரு. இராகம் - தோடி. ரூபகதாளம்.

பல்லவி.

வேட்டையாடுவோம் நாம் அண்ணே யின்று - வேட்டையாடுவோம் நாம்.

அனுபல்லவி.

வேட்டையாடுவோம் மெய்ம்மறந்தோடுவோம்
மேனிவருந்திடக் கானிலலைந்திட (வேட்டை)

சரணங்கள்.

1. காடுமலைக்குகையும் பல்லருவி கால்கள்பாயுமிடம்
தேடிச்சென்றங்குத் திரியும்மிருகங்களை
சேதிப்போம்காடெங்கும் பேதிப்போம்வாருங்கள். (வேட்டை)

2. ஈட்டிபல்லயமும் பிச்சுவாவுடன் இசைந்தசட்டைகளும்
மாட்டிக்கொண்டேபல வேடர்களெங்களும்
வழங்கும்பியூகில்கள் முழங்கவேசென்று. (வேட்டை)

3. எலிபெண்ட்ரைபில்களும் அரபெஸ்க்கும் இருகுழைமஸ்கெட்டுடன்
புலிகரடிசெந் நாய்கள்நரிகள்தம்
பூண்டறவேயெங்கும் மாண்டிடச்செய்திடும். (வேட்டை)

(பிரதாபசந்திரனும் அவன் சிநேகிதர்களும் செல்கிறார்கள். லக்ஷ்மீ விலாசர் வருகிறார். பிரதாபசந்திரன் தாயார் அவரை நோக்கி,)

தாய்.—

கொச்சகம்.

நல்வரவாய் வந்துவிட்டீர் நான்செய்த புண்ணியத்தால்
செல்வன் பிரதாபன் செய்திதனை யறியீரோ
பல்விதத்தி லவனைநிகர் பண்டிதர்க ளிலரேனும்
வல்வினையின் பயனாலே மதிமோசம் போனானே.

லக்ஷ்மீவிலாசர்.—பெண்ணே யெல்லாந் தெரிந்துகொண்டோம். நாமென்னசெய்யலாம் - யாரங்கே?

ஜவான்.—மகராஜ்.

லக்ஷ்மீவிலாசர். — நம்முடைய பிரதாபசந்திரனை யழைத்துக் கொண்டுவா.

(ஜவான் செல்கிறான்.)

தாய்.—நீங்கள் வெகுதூரம் போய்வந்தீர்கள், நீங்கள் போகும் போது நானுங்கூட வருகிறேனென்றேன். அதற்கு நா மெல்லா மினி யொருதரம் போகலாமென் றென்னை நிறுத்தி விட்டுப் போனீர்கள். அப்படியே யழைத்துக்கொண்டு போகாமற் போனபோதிலும் அங்கு கண்ட அதிசயத்தை யாவது சொல்லக்கூடாதா?

லக்ஷ்மீவிலாசர்.—

தரு. இராகம் - பைரவி. சாபுதாளம்.

பல்லவி.

பெண்ணேநான் சென்ற தேசத்தின் பெருமையைப்
பிரியமுடன் கேளாய்.

அனுபல்லவி.

எண்ணுதற்கரிய மகாதேசமென்னவே
எங்கும்புகழ்பெற்ற இந்துநன்னாட்டினில். (பெண்ணே)

சரணங்கள்.

1. நாதனென்பதுகோடி நாட்டினிற்கும்மைசூர்
நகரத்தில்வாழுங் கர்த்தரவர்தேசம்
பாதர்சாலார்ஜங்கின் திறம்பொலியைதரா
பாக்கமதனில் நைஜாம்சுகவாசம்
கியாதிமிகுந்தபெஷ் வாக்களினரசினல்
கிளர்ந்தபுனா நகர்பிரகாசம்
சோதிபுரிஜய புரியும்உதயபுரி
சூரர்நமக்கவர் வெகுநேசம்
நீதிவழுவாஹோல் காரென்னுமகிபதி
நிகரில்வலியுற்ற சிந்தியாகுணநிதி
ஓதரியதிவர்களிந் தூர் க்வாலியர்துதி
உற்றபல்சர்த்தார்கட்கு மற்றவர்க்குமிவர்கதி. (பெண்)

2. பாம்பேநகரத்தி லுள்ளபிரபுக்களாம்
பார்சிகட்கடிமை குபேரனும்
ஜாம்பூநதமேனி யழகியரங்குள்ள
தருணியர்க்குமுறி மாரனும்
தீம்புபுரியுமமீர்களு மாண்டிட்ட
சிந்துதேசமெந்த வீரனும்
பாம்பைக்கண்டஎலி போலவர்க்கஞ்சுவன்
பதுங்குவன்நமனென்னுங் க்ரூரனும்
வீம்புக்குப்பந்தயமாய் நினைக்காமல்சற்றும்
வீராங்கிலேயரை வெகுவாயெதிர்த்தும்
சாம்பமூர்த்திமுன் திரிபுரத்தவரையொத்தும்
சார்லெஸ்நேபியர்கையால் போரில்முடிந்தார்முற்றும். (பெண்)

கண்டவர்க்குமோக்ஷம் கையிலுள்ளநெல்லிக்
　　கனியெனத் தருங்காசியதனோடு
சண்டப்பிரசண்டமாய்த் துருக்கர்செய்யரசினால்
　　தழைத்துக்கொடுத்த டில்லியுநீடு
எண்டிசையும்போற்ற வரசுசெய்அக்பர்வீற்
　　றிருந்தஅக்ரா நகர்க்கிலேயீடு
பண்டுமுராரிதன் கைவிரல்மீதினில்
　　பருவதங்கொண்ட மதுரைநாடு
அண்டமெடியவரை யளிக்கும்ஹரித்வாரம்
அப்புறம்ஜ்வாலாஜி யமையும்இமயத்தோரம்
தண்டனிட்டுமேற்சென்றால் தரிசிக்கலாமெந்நேரம்
ஜீவன்முத்தர்போற்றுங்கங்கை பாவனியெழுமாரவாரம். (பெண்)

4. கங்கையும்யமுனையும் சேரும்பிரயாகையும்
　　கயாபத னுமகாபுரி
இங்லீஷ்துரைமார்கள் வெயிற்காலத்
　　தேகுமிமய சாமளாகிரி
வங்கதேசமென்று வையகமெங்கணும்
　　வழங்கும்பங்காளத் திற்கிலேசரி
அங்குள்ளபாபுகள் சேனர்கள்டாகர்கள்
　　ஆரியமித்ரரின் வாக்ஜரி
எங்குளதுதைரியத் திலவருக்கிணை
எதிரிமேலவர்கோப நதிக்கிலேயயணை
பொங்குமெழுத்தில்துஜ மெடுத்தால்வேண்டுமோதுணை
புறத்துப்புலவர்க்கன்று தெரித்தராமன்கணை. (பெண்)

புஜகசயனனென்றும் விருப்புடனேயிருக்கும்
　　பூரிஜகந்நாத மெனும்ஸ்தலம்
விஜயநகரராஜசார்த் தூலனிடத்தினில்
　　விளங்குங்கல்வியுடன் சந்திரகுலம்
கஜபதியிவனிட தருமத்தைச்சேஷனும்
　　கணக்கிடப்புறப்பட் டாலிலேபலம்
பஜனைசெய்துமுக்தி பதவியையடைந்திடும்
　　பாகவதர்வாழ் பத்ராசலம்
நிஜமாய்ச்சொல்லுகிறேன்கேள் ராஜமகேந்திரம்
நிகரில்ஜமீன்தார்கள் வாழும்விசாகபுரம்
ரஜதமந்தகாசமாதர்க் குருகுமரம்
ரமணிகளினழகைக் கிரமமாய்ச்சொல்லயார்தரம். (பெண்)

6. ஆயிரமுடிச்சேஷசயனற்குப் பணிசெய்யும்
அனந்தபுரரா மவரராஜன்
பாயிரநான்மறை முதலியநூல்களிற்
பயின்றபெரும் பண்டிதஸமாஜன்
நாயர்கள்மேனவர் நம்பூரிகளும்நிதம்
நாடிவரும்கோ டிரவிதேஜன்
போயவனையண்டு மேழைகள்குறைதீரப்
பொருளளிக்கின்ற மகாபோஜன்
தியகார்த்தவீரியார் ஜுனன்காத்திரம்
சிதையவடித்தமரர் புகழ்பாத்திரம்
ஆயபரசுராமனிட க்ஷேத்திரம்
அன்பாய்ச்சென்றவர்க் கின்பமெம்மாத்திரம். (பெண்)

(பிரதாபசந்திரன் வருகிறான். லக்ஷ்மீவிலாசர் அவனை நோக்கி,)

லக்ஷ்மீவிலாசர்.—

விருத்தம்.

கற்புடை மாதர்க் கெல்லாம் கருத்திடைக் காவ லென்பார்
அற்புத தவமி யற்று மந்தணர்க் கமைதி யென்பார்
பற்பல கலைகள் கற்ற பண்டிதர்க் கறநூ லன்றி
நிற்பதோர் வழியு முண்டோ நிகரிலா ஞானத் தோனே.

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - பியாஹு. ஆதிதாளம்.

பல்லவி.

என்னசெய்வேனண்ணா என்னைத்தப்பிப்போச்சு.

அநுபல்லவி.

மன்னித்தாளவேண்டும் வந்ததினி புத்தி. (என்ன)

சரணங்கள்.

1. இந்தவாறென்றேனும் ஈனரோடுசேர்ந்து
சிந்தைநொந்ததுண்டோ சித்தமறியாதோ. (என்ன)

2. கன்னலென்றுநம்பி கைக்கும்வேம்பைத்தின்றே
முன்னையோசிக்காமல் மோசம்போனதாலே. (என்ன)

3. சன்மவசமாய்நான் கஷ்டப்பட்டதெல்லாம்
ஜன்மஜன்மத்தேனும் சற்றுமறவேனல். (என்ன)

லக்ஷ்மீவிலாசர்.—

தரு. இராகம் - தன்னியாசி. ஜம்பைதாளம்.

பல்லவி.

என்னபோனதைந்நீ நாவதின்மேல்

அநுபல்லவி.

உன்னைவிட்டொண்டியாய்ப் போனதேதப்பாச்சு
உயிருள்ளமட்டுமோ அப்புறமுமேயேச்சு. (என்ன)

சரணங்கள்.

1. கல்மலைகளோடுமெணல் மேடுகளுமுள்ளடரும்
கடலாகுமே யிளமையும்
நல்லறிவெனும்மாலு மித்துணையிலாமல்நீ
நஷ்டமொடுபெல்வதைக் கஷ்டமுமடைந்தாக்கால். (என்ன)

2. மதுமலரைநாடிவரு வண்டினமெனத்தோன்றி
வருவர்பல ருன்னைநாடி
இதமுடையரென்றவர்க ளெல்லோரைநம்பிநீ
எங்கியிசையென்பதைய நீங்கியிடருற்றதால். (என்ன)

3. பொற்கொடிபடர்ந்தத னிடத்தில்மணமிக்கவே
பூத்தமல ரென்னுமாறே
நற்குடியில்வந்தநீ செய்தகாரியமெலாம்
நன்றுநன்றையகுறை யொன்றுமினியில்லையால். (என்ன)

(ஜவான் ஒரு காகிதத்தைக் கொண்டுவந்து லக்ஷ்மீவிலாசரிடம் கொடுக்கிறான். அவர் அதை வாங்கி வாசித்துப் பார்த்துவிட்டு பிரதாபசந்திரனை நோக்கி,)

லக்ஷ்மீவிலாசர்.—பிரதாபசந்திர, மாயோ கவர்னர் ஜனரலவர்கள் அகராநகரத்தில் தர்பார் செய்யப் போகிறாராம்; அதற்கு நம்மை வரும்படி யிதோ காகிதம் வந்திருக்கிறது; நீயும்

புறப்படு; மைசூர்கர்த்தர், சாலார்ஜங், சிந்தியாஹோல்கார், இப்போர்க்கொத்த மகாபிரபுக்களை யெல்லாம் பார்த்துக் கொண்டு தர்பார் நடந்தவுடனே வந்துவிடுவோம். மேலும் விசுவநாதனையுந் தரிசித்து காசியில் நம்முடைய தருமங் களையும் விசாரித்து வரவேண்டுமென்றும் நினைக்கிறேன்.

பிரதாபசந்திரன்.—அப்படியே.

(எல்லோரும் செல்கின்றனர்.)



# அங்கம்—X



## களம் — I.

இடம்: ஒரு சிங்கார மண்டபம்.

பாத்திரங்கள்: மாயோகவர்னர்ஜனரல், இந்திய அரசர் பலர், கட்டியக்காரன், கொடிபிடிப்போன். சேவகர் முதலாயினோர்.

[தர்பார் ஜோடிக்கப்பட்டிருக்கிறது. கட்டியக்காரன் வருகிறான்.]

கட்டியக்காரன்.—

*கலித்துறை.*

*வாடாத ரத்தின மாமல ராளுடன வாழும்ரத்னங்*
*கோடாத ரத்தின மவனிதன் னீழலிற் கொண்டரத்னம்*
*நாடாத ரத்தினந் தீயவ ரென்று நராதிபரும்*
*சூடாத ரத்தினம் விக்டோ ரியம்மை துரைத்தனமே.*

கொடிபிடிப்போன்.—

*தாழ்வே தீயோர் வெம்மை*
*ஆழிபோல் பெருகச் செம்மை*
*ஊழிமே லாள நம்மை*
*வாழிவிக் டோரி யம்மை.*

*விருத்தம்.*

*நியமமாய் மனுமாந் தாதி நிகரின்மன் னவர்க ளாண்ட*
*உயர்புக ழிந்து தேச மொருகுடை நிழலி லாளும்*
*அயர்விலா க்வீன்விக் டோரி யம்மையாக் கினைசெ லுத்தும்*
*ஜயமுறு மாயோ கவர்னர் ஜனரல்தாம் வருகின் றாரே.*

கட்டியக்காரன்.—

*தரு. இராகம் - தர்பார்.*

1. నిసరిసరి - ప మధ పగా రిస - రిమపధా - మప ధపామరిగరిస
*சபைதனிலே - இதோவருவாரினி - ஜயபதா - கையுளமாயொவதிபதி*
2. నినిధపధా - రిసమపరిగరిస - మపధనిసా - రిప పమ రిగ రిస
*விவிதமதா-அறநெறிதழுவிய-விமலனெறு-வியனுலகறையவே. (சபை)*

3. స సరిసరి – నినిధపధా నీరిస – గ గరిస నినిధప – రినిధపగారిస
மகிபரெலா-மெமதிறைதானீயென-மகிழுடனனுதின-மணிமுடிதாழவே.
(சபை)

4. రిరిపపమ – రిరి గగరి – ససరిరిసరి – మమపపధపధనిస–పామగా రిస
இமையவரை-முதலழகி-முனையளவுள - இனியவுலகினிலொரு-நாதனுகி
[யே. (சபை)

5. పధపరిసరినిస –సనిధపధాధా – పసనిసధపమస – ధధపమగారిస
உரியவருறுதுய-ரறவளிதாதா-உனைவிடசரணிலை-யெனவருவாரிணை (ச)

6. పపాధపమప – గగారిసరిసా – సానీధప – గారిస
அபப்பாபுவியிவ-ருக்காரிணையாகா-ராகாரென-வேசொல. (சபை)

7. సని ధప ధాధా –ధపసనిసాసా – రిగరిస నిసధప – పధపమరి గ రిస
தகையறிமேதா-வியருளமீது-சதுரஸெகிரிடரி-களுமிருபுடைவர.(சபை)

8. సారిని ధపధా – ధపసని సాసా – గారిసరినీ – ధపమప గారి స
பாரொருதிரளா-யெதிரினுமாறு-வீரசரீரா - யுதபடைசூழவே. (சபை)

9. ధపాధప ధ పమ –ధపసనిసా – రి గా రి స రి ని స – ధపామరిగరిస
தகாதபகையுள-தரியலரா-மகாதபனியொழி-ப்ரபாதரவியென. (சபை)

10. సానిస రి సరిమ –పమధాపా– ధరి సరి నీధప – నిసధ పగా రిస
சாகரமெனவரு-முளமாதா-தனதுளமீதென-வினிதுடனேவவே (சபை)

11. పాధ పధనిస – రిసారినినిసా – గారిసరినీ – ధపమగా రి స
பூதத்திருமல - ரபாரகருணை-நேத்ரமுட - னீதவழியோதவே. (சபை)

(கவர்னர்ஜனரல்-மாயோப்பிரபு, இந்திய அரசர்கள் பலர் புடைசூழ ராஜவிருதுகளுடன் வருகிருர். பாண்டு வாத்தியம் முழங்குகிறது. கவர்னர், ஜனரல் சிங்காதனத்தில் அமருகிருர் மற்ற அரசர்களும் தத்தமக்குரிய ஆசனங்களில் அமருகின்றனர்.)

கட்டியக்காரன்.—

விருத்தம்.

தாராக ணத்தினடு வுற்றமதி யோவெனச் சந்ததமு மரசர்தொழவே
சகதலத் திரவியொளி மறையாத ராச்சியத் தலைவியென வேயெங்கணும்
பேராக பிரிடனெனு மொருதீவி லுற்றநம் பெரியவிக் டோரியம்மை
பிரியமுட னிந்துதே சத்தினை யளிக்கும் பிரதாபமேற் கொண்டவரசி
வீராதி வீரனவ ளாக்கினை செலுத்துவதில் மெய்த்திற மமர்ந்தமாயோ
மேதாவி யின்மூல மாயருட் புரியும் விளம்பரந் தன்னையின்று
ஏராரு மிச்சபையி லுள்ளபல வரசரோ டின்னுமித் தேசமதனில்
இமசேது பரியந்த முளமகிப ரெல்லோரு மினிதுணரு மின்கவனமாய.

## விளம்பரம்.

குருஎசு நாதரிக் குவலயந் தன்னில்
திருவவ தாரஞ் செய்தவந் நாளுக்
காயிரத் தோரா மாண்டினிற் றுருக்கத்
தீயவர் வந்துமித் தேசத்தி லுள்ள
வேந்தரை வென்று திக்விஜயங் கொண்டிறு
மாந்தெழு நூறு வருடங்க ளாக
ராய படாணிகள் ராஜமோ கலிகள்
ஆயவ ரோடுமற் றங்கங்கு முள்ள
மாகா ணங்களில் மனம்போ னவாறு
ஏகா திபரா யிருந்தந பாப்புகள்
பாரி நிஜாமுகள் பாதுஷாக் களுடன்
சூறை யடித்துத் தொலைத்த சுபாக்களும்
ஆகியிந் நாட்டி னருமை குலைத்து
ஏகின ருலகோ ரேகு மாறே
சூரியன் செல்லத் தோன்றுவிண் மீனென
வீரியம் பேசி வெளிப்பட் டுநின்ற
வடதிசை சீக்குகள் மத்திய தேசத்தில்
திடமுட னமர்ந்துள தீர மராட்டியர்
அண்டா தோடிய வாற்றல ரான
பிண்டா ரிகளொடு பின்னும் பலவாய்
நாட்டினிற் றோன்றி நானா விதப்போர்
மூட்டியே யெங்குநிர் மூல மாக்கக்
கண்டு முனிந்து கைவா ளுருவி
அண்ட நடுங்குமா றமரது செலுத்தித்
துட்டப் பகைவரைத் தும்சமாய்த் துடைத்துச்
சிட்டரா மும்போல் சீமான் கட்கே
அபய மளித்து மதுமுத லாக
விபவமாய்ச் செங்கோல் வியனுல கெங்கும்
புகழு மாறு பூண்டநம் வார்த்தையை
இகழா துணருமின் இசையுமெந் நன்மையும்
உம்பகை நம்பகை உமதுநற் பொருளுயிர்
நம்பொருள் நம்முயிர் நாநா விதமுள
உம்மத மும்மொழுக் கங்க ளனைத்தும்
சம்மத மாகவே தழைக்க வெந்நாளும்;
உமக்குள கவுரவத் தோரணு வேனும்
தமக்குறு கெடுதியைச் சற்று நினைக்கா
தழிக்கத் தலைப்படு மறிவில ரெல்லாம்
தெழிக்கும்நங் கோபமாஞ் செந்தணற் பட்டுப்

பேரு ரின்றிப் பெருமை குலைந்து
வேரோ டழிவார்தம் விதிவச மாகி!
இவ்வித வன்புநம் மிடமுறு நமக்கு
செவ்விதி நீர்செயுஞ் சிறப்பே தென்னில்
அங்கங் குமக்கெம தாக்கினைப் படிக்கே
பங்கிட் டிருக்கும் பலராச் சியங்களை
பரிசெமக் குரியதைப் பழுதற வீந்து
அரசியல் வழாதே யாளுமின் னெறியாய்;
ஏழைகட் கென்று மிரங்குமின் கிருபையுடன்;
தாழ்வினிற் றாழ்வுநித் தமையென வுணருமின்;
கல்வியே யிவ்வுல கத்தினி லெல்லாச்
செல்வத்தின் மேலாம் செல்வமென் றறிமின்;
நாகரீ கத்தின் நல்வழி யோர்ந்து
போகரீ திகளிற் புனிதரா யியலுமின்;
மகிபரே பின்புநம் மணிமுடி புனையத்
தகுபவ ராயுள சத்புத் திரரை
மடைய ராக்கி மகிமை கெடாது
திடமுட னவர்தம் சித்தந் தெளிவுறத்
தண்டித் தவர்க்குநற் சாத்திரம் புகட்டிப்
பண்டித ராக்கிப் பழக்குமி னரசியல்;
இன்னுமீ தென்றே யியம்புதற் கரிய
மன்னவர்க் குரியபல் வழிகளைத் தொடர்ந்து
எமதகங் குளிரவு மெங்கணு நும்மிசை
இமகிரி யைப்போ லிருக்கவெந் நாளும்
வாழி வாழி மகிழ்வுடன் வாழி
வாழிநும் மன்புநம் மாணையும் வாழி.

(தர்பாருக்குரிய மற்ற காரியங்கள் முடிந்தவுடனே தர்பார் கலைகிறது.)

—⊱✻⊰—

# அங்கம்—XI



## களம்—I.

இடம்: பிரதாபசந்திரன் ஜமீனிலுள்ள ஒரு காடு.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், நிபுணர், குணலயர் முதலியோர், சாக்கடை முத்துப்புலவர். ஜவான், வேடன் முதலியோர்.

பிரதாபசந்திரன்.—யாரோய் ஜவான்?

ஜவான்.—ராம் ராம் மகராஜ்.

பிரதாபசந்திரன.—அடே நம்முடைய ஆஸ்ட்ரேலியன், பைகோ, அரேபியன், கேப் முதலிய விதம்விதமான ஸவாரிக்குதிரைகளையெல்லாம் ஜீனிபோட்டு ஜூல்ஸ் மாட்டித் தயாராய்க் கொண்டுவந்திருக்கிறார்களா?

ஜவான்.—ஹோ ஸாப்.

பிரதாபசந்திரன்.—நம்முடைய வேடர் வில்லியர்முதலிய காட்டாள்களெல்லாம் ஈட்டி, கத்தி, பிச்சுவா, தடி, வில், துப்பாக்கி முதலிய ஆயுதங்களையெல்லா மெடுத்துக்கொண்டு காட்டுக்குப் போய்விட்டார்களா?

ஜவான்.—ஸோப் கயே ஸாப்.

பிரதாபசந்திரன்.—அடே நம்முடைய பைகர், சக்கர், கமத், ஹமீர், பட்டான், ஜரூர் முதலிய டேகைகளை நம்முடைய குருவிவளர்ப்போர் எடுத்துக்கொண்டு தயாராய் வந்திருக்கிறார்களா?

ஜவான்.—தயார் ஹை ஸாப்.

பிரதாபசந்திரன். — அடே நம்முடைய புல்ஹெட், பேர்ஜாக், டைகர், ப்ளாக்லயன், டர், ஸைதான், மாடன், குட்டி திம்மன், வெண்டிகுண்டு, துமால், கறுப்பன் முதலிய நாய்களையெல்லாம் சங்கிலிகள் போட்டு முதுகுக்கு பட்டைகள் கட்டி சோக்ராக்கள் கொண்டுவந்திருக்கிறார்களா?

ஜவான்.—லேகராயே ஸாப்.

பிரதாபசந்திரன். — அடே நம்முடைய சமஸ்தானத்திலிருக்கும் வித்துவானாகிய சாக்கடை முத்துப்புலவர் வந்திருக்கிறாரா?

ஜவான்.—வந்தாங்கோ ஹஜரத்.

(சாக்கடை முத்துப்புலவர் வருகிறார். பிரதாபசந்திரனுக்கு வந்தனம்புரிந்து,)

புலவர்.—

விருத்தம்.

வில்லியும் வேடன் கோழி வேந்தனை நிகர்த்தே பூவின்
மெல்லியள் தோழி யாகி மேதினி யெங்கு முன்தன்
சொல்லொணாப் புகழே யோங்கச் சொர்க்கமு மதனைத் தாங்க
எல்லையில் லாத கால மெம்மைநீ யாண்டு வாழி.

(எலிமிச்சம்பழமும் புஷ்பச்செண்டுங் கொடுக்கிறார். பிரதாபசந்திரன் வந்தனத்துடன் அவைகளைப் பெற்றுக்கொள்கிறான்.)

நிபுணர்.—ஐயா புலவரே, எத்தனையோ நல்லபேர்களிருக்க சாக்கடை முத்துப்புலவரென்று ஏன் பேர்வைத்துக்கொண்டீர்?

புலவர்.—நம்முடைய பேர் சோணாசல முத்தமிழ்க் கவிராஜபண்டித சேகரர். ஆனால் லோகநாதனாகிய சிவபெருமான் யாராலுஞ் செய்த்தகாத காரியத்தைச் செய்து எப்படி நீலகண்டனென்னும் பெயர் சம்பாதித்துக்கொண்டாரோ, அப்படியே நாமும் வித்துவான்கள் யாரும் செய்வதற்கரிய காரியத்தைச் செய்து இந்தப் பெயரைச் சம்பாதித்தோம். அதாவது சென்னைமாநகரத்தின் சாக்கடையில் முத்திருக்கிறதாகக் கற்பித்துப் பாடியிருக்கிறோம்.

நிபுணர்.—ஆ! அப்படியா! அந்தப் பாடலைச் சற்றே சொல்லும்?

புலவர்.—

விருத்தம்.

தென்றிசைத் திலக மென்னத் திருமகள் வாழ்க்கை யென்ன
வன்றிறல் மன்னர்க் கெல்லாம் வனப்புறு மாட மென்ன
கொன்றையந் தார்பு னைந்த கொற்றவன் கைலை யென்ன
தொன்றுதொட் டிலங்கு நந்தஞ் சுந்தரச் சென்னை தன்னில்.

கம்புநேர் மடவார் கண்ட முத்தமும்
தம்ப லத்தொ டுமிழத் தவழ்ந்துநீ
ரம்பிச் சாக்கடை யெங்கணு முத்தமாய்
அம்பு ராசியின் மேலென வாகுமால்.

நிபுணர்.—ஆ! ஆ! நீர்சொல்லுங் கவிகளிலே யிப்படிப்பட்ட கற்பனைகள்தானிருக்கின்றனவோ? இன்னுமொரு கற்பனை சொல்லும் பார்ப்போம்?

புலவர்.—அப்படியே கேளுங்கள், மநேசுரனைக்காட்டிலும் மாதர்கள் வல்லவரென்று கற்பித்துப் பாடியிருக்கிறேன்.

கட்டளைக் கலித்துறை.

கோதார் விடமொடு குன்றையு மார்பினிற் கொண்டுசிர
மீதார் பிறைதனைப் பல்லிடை யாக்கி மிருகமங்கி
ஓதா வலியுறு நோக்கினி லேந்தி யுலகழிப்ப
மாதே வனைவிட வண்டார் குழலியர் வல்லவரே.

பிரதாபசந்திரன்.—புலவரே வெகு நேர்த்தியாயிருக்கிறது. இப்பொழுது விடியுங்காலமல்லவா, இந்தக் காலத்தை வர்ணித்துச் சில பாடல் சொல்லும்.

புலவர்.—ஆகா அப்படியே.

சந்த விருத்தம்.

ஒன்றிபல வூடல்புரி யோதிமம தோடும்
அன்றிலொடு மஞ்ஞையொடு மாயிழைய ரெல்லாம்
என்றின்வர வெய்தியதென் றின்னல்கடல் மூழ்கி
நின்றுதம தக்கமிடை நீர்பெருகும் வேளை.

காரியமென் கங்குல்பகை கைக்குடை மறைத்தான்
தேர்கொடி மறைத்தசிலை வாவிமட மாதர்
போர்த்தொழில் முடித்துமனை புக்குபணி கொண்டார்
ஆர்கொல்துணை யென்றுமத னஞ்சியெழும் வேளை.

குணலயர்.—என்னஸார் பிரதாபசந்திரரே! இதோ பாருங்கள் இந்தக் காட்டிலுள்ள நதிகளிலெல்லாம் ஜலம் வடிந்திருக்கிறது.

பிரதாபசந்திரன்.—ஐயா புலவரே, ஏதோ இதைப்பற்றி யொரு பாடல் சொல்லும்.

புலவர்.—அப்படியே.

விருத்தம்.

முரணியல் மதனன் வேள்வி முதன்முதன் முடிக்க வாய்ந்து
மிரணிய மேனி தன்னை யெளிதினிற் காட்டி டாத
தருணிய ரியல்பே போன்று சைகதக் குவியல் காட்டி
அரணிய நதிக ளெல்லா மரும்புனல் வடிந்த மாதோ.

இன்னுமொன்று சொல்லுகிறேன் கேளுங்கள்.

காணுதி நண்ப விந்தக் கானகத் துற்ற விந்தை
கோணுத லில்லா நெஞ்சக் குரவர்த மனமே போன்று
சேணுல கோங்கு மிந்தச் சிகரமார் வரைக ளெல்லாம்
வீணர்கள் நெஞ்ச மென்ன விளங்குமிக் குகைக ளம்மா.

பிரதாபசந்திரன்.—நிறுத்தும் புலவரே, இதோ மான் வந்துவிட்டது.

(துப்பாக்கி யெடுத்துக்கொண்டு.)

நிபுணரே, யிதோ மான் வந்துவிட்டது. அந்தப் பன்றியுங்கள் பங்கு; என்னஸார் குணலயரே, அந்தக் கடம்பையை நீங்கள் வாயில் போட்டுக்கொள்ளவேண்டியது. இந்த மான் அதோ இருக்கிற கரடி இதுகளையெல்லாம் நானடித்துவிடுகிறேன். வாருங்கள் சற்றுநேர முல்லாஸமாய்க் காரியம் பார்ப்போம். ஐயா புலவரே, நீரிந்த விடத்தை விட்டுப் போக வேண்டாம்.

(ஓர் வேடன் ஓடிவருகின்றான்.)

வேடன்.—தண்டமூஸாமி தண்டமூ! அந்த பெத்த பொதரிலே குட்டிப்புலி குந்திகினு இருக்குது! ஜிங்க திங்குதோ! ஜிங்க திங்குது சாமி!

மற்றொருவன்.—அந்தோஸாமி! அந்தோ கொண்ட குகையிலே கோநாய்ஸாமி கோநாய் துண்ணிட்டுத் தூங்குதோ, தூங்குது ஸாமி!

ஹர்க்கார்.—ராம் ராம் மகராஜ் மான் கரடி புலி முதலிய பகத் ஜீவன்களையெல்லாம் வேடர் வில்லியர் துரத்திவிட்டாங்கோ ஸாமி! அல்லாந் தலைவிரிச்சுகினு ஆடுதுங்கோ ஸாமி!

பிரதாபசந்திரன்.—ஆகா! இதோ வந்துவிட்டோம்.

(பிரதாபசந்திரன் வேடர் வில்லியர் முதலியவர்களுடன் செல்கின்றான். புலவர் சில வேலைக்காரரோடு ஓடுகிறார்.)

புலவர்.—கர்நாடகத்தில் சேவிக்கிறதெல்லா மிந்த இழவுதான்! காட்டுக்கு வாவென்றால் போகவேண்டும், கடலை நீந்தென்றால் நீந்தவேண்டும்.

(நாலுபக்கமும் பார்த்து,)

இங்கே புலிவருமோ கரடிவருமோ எந்த இழவு வந்தாலும் படவேண்டியதுதான்! (ஹர்க்காரரவைப் பார்த்து,) அடா அப்பா ராம்சிங், கிட்டவாடா; உன் கையையாவது பிடித்துக் கொண்டிருக்கிறேன்.

ராம்சிங்.—அரே அத்ரிபங்க்! தமிளோ இருக்காO இல்லே சத்! ரொம்ப பயங்காளி! துலுக்கேO ஜவான்! நம்ப ரஜபுத் ஜவான். ஆயிரம் தமிளனுக்கு அரை துலுக்கன்! அரேபன்க் நம்ப ஜமீன்தார் பிரதாபசந்திரன் பகத்படிச்சார், அதோபார் அமீரா வேட்டைக்குப் போனார்; அப்படி யிருக்கோணும். துமாரே மூஞ்சிலே மீசை இல்லேங்காணும்!

புலவர்.—அடா அப்பா ராம்சிங் நீ நல்லபிள்ளை! நீரோடு விளையாடக் கூடாது. காட்டில் கதை பேசக்கூடாது. நம்ப ஜமீன்தார் வேட்டையாடி வருகிறவரைக்கும் நீ நம்மைக் காப்பாற்றவேண்டியது.

ராம்சிங்.—(பட்டாகத்தி யுருவிக்கொண்டு.) அரே புலவர் ஸாப், இதோ கத்தி பார். இத்தாலே ஹைதராபாத்தில் நாமொரு சித்தியை தகல்தேவ் பண்ணினோம். அரே தொட்டுப்பார் மியா!

புலவர்.—அப்பா! இரும்பு பிடித்த கையும் சிரங்கு பிடித்த கையும் சும்மா இராது. கத்தியை யுருவிக்கொண்டால் இரையகப் படாமற்போனு லென் செய்வாயோ! அதை யுறையிலே போட்டுவிடு. பார்த்தால் கர்ப்பங் கலங்கிப்போகுது. இதெல்லாமென்ன போக்கிரிவேலை.

ராம்சிங்.—அரே போங்காணும் நம்பே பெரிய ஜமீன்தார் வடக்கே போனுங்களே அப்போ அனேகம் போக்கிரீங்களே வாயில் போட்டுக்கொண்டேங்காணும். அஜீ கேட்டையா:— ஹஜாரிபாக் அம்மு, பைகன் பல்லிஜமால், ராயிசூர் ரஹிமான், ஷோளாபூர் ஷேக்மதார் முதலிய படேபடே வஸ்தாதுகளையெல்லாம் பஞ்சா, குஸ்தி, கோல், பட்டா இதிலே அடித்து விட்டோங்காணும்! அஜி போரும் ரொம்ப நேரமாய்ப்போச்சு. ஜமீன்தார் கிட்டே போவம் வாங்காணும். அதோ மலையிருக்குதே அந்தக் காட்டுக்கு வரச்சொன்னுங்கோ.

(இருவரும் செல்கிறார்கள்.)



## இரண்டாங் களம்.

இடம்: காட்டின் வேறொரு பாகம்.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரன், குணலயர், நிபுணர், புலவர், ஹர்க்கார் முதலியோர்.

[பிரதாபசந்திரன் முதலாயினோர் ஒரு செடியின்கீழ் இருக்கின்றனர்.]

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

உணருதி நண்ப விந்த வுயர்மலைக் குலத்தி லார்ந்த
பணிகளி னுயிர்ப்பே போன்று பனிவரைச் சுனைநீ ராடி
மணமிகு மலர்க ளோடு மருவிநம் வருத்த மெல்லாம்
தணியவே வீசு மிந்தக் கானகக் காற்றின் தன்மை.

சாய்ந்த வரைக்குலச் சாய லெங்கணும்
மேய்ந்துள பறவைதம் வீடு சேர்ந்தன
காய்ந்தெழு கதிரவன் கடலை நண்ணினன்
வாய்ந்தநல் லிடத்தினை மருவ வேண்டுமால்.

புலவர்.—

அறங்கிளரு மந்தணர்த மன்பின் வரைநின்றே
இறங்குபுன லாடிமல ரிட்டசிர மோடு
பிறங்குமலை பெற்றுவெளி யிட்டதெனு மாறே
கறங்குகரி யொன்றிவரல் காணுதி யுரத்தோய்.

குணலயர்.—

தொழுந்தகை வீரர்தந் தோற்ற மஞ்சியே
யழுங்கிய மாக்களி னடங்கி யொண்பகல்
ஒழிந்தன னிரவியென் றொளி பரப்பியே
யெழுந்திடு திங்களு மிரவு முற்றதால்.

நிபுணர்.—அண்ணே யின்றைக்கு நாம் வேட்டையாடினது போதும்.

விருத்தம்.

ஓசையி லிடிநிகர்த்தே யோடிநம் மெதிரேவந்த
பேசொணு வலிமிகுந்த பெரியநற் றுயங்களெல்லாம்
நேசரே யுமதுரையில் நெருப்பினி லடியுண்டந்தோ
வாசவன் சிறகரிந்த மலையென விழுந்தவம்மா!

பாய்ந்திடு வேங்கையும் பன்றி மானொடு
மாய்ந்துள விலங்கினம் மட்டி லாதவே
ஆய்ந்தன மரணிய மெங்கு மன்ப! மேல்
வாய்ந்தநல் லிடத்தினை மருவ வேண்டுமால்.

ஹர்க்காரா. — ராம்ராம் மகராஜ ராத்திரிக்கு ஹஜாரத் முகாம் பண்ண இடந்தேடினோம்; அதோ மகராஜ், வர்மலை யிருக்கிறுங்கோ அங்கேபோனு நல்லது மகராஜ்.

பிரதாபசந்திரன்.—ஆனல் நாமெல்லா மங்கே போவம் வாருங்கள்.

(எல்லோரும் போகிறார்கள்.)



## மூன்றாங் களம்.

**இடம்:** ஒரு காட்டிலுள்ள ஆச்சிரமம்.

**பாத்திரங்கள்:** பிரதாபசந்திரன் முதலாயினோர், ஒரு சன்னியாசி.

[சன்னியாசி ஆச்சிரமத்தில் அமர்ந்திருக்கிறார். பிரதாபசந்திரன் முதலியோர் அவரைக் கண்டு வணங்குகின்றனர்.]

**பிரதாபசந்திரன்.—**

கலித்துறை.

வேதா ரணியத் திடைநின்று நீடு விமலநெறிக்
காதார மாகிவெங் காமக்கு ரோதங்க ளாகியபல்
தீதார னைத்தினை யும்வென்ற மெய்ஞ்ஞான சிங்கமெனின்
பாதார விந்த மலவோ சரண்மன் பவைதகளுக்கே.

**சன்னியாசி.—**

விருத்தம்.

நான்மறை முடிவி லுள்ள நாயக னும்மைக் காக்க
மான்மழு வேந்தி நிற்கும் வள்ளலு மும்மைக் காக்க
தேன்மொழி மடவார் போகந் தீர்ந்துள முனிவர் காக்க
வான்பொருள் பல்ல றங்கள் வகையுட னும்மைக் காக்க.

(ஆசி கூறுகிறார்.)

**பிரதாபசந்திரன்.**—சுவாமீ! எங்கள் ஊரில் இவ்விதமான இடம் கிடையாது. இந்தக் காடு யாருடையதோ அதைச் சவிஸ்தாரமாகச் சொல்லவேண்டும்.

**சன்னியாசி.—**

விருத்தம்.

ஐயநீர் கேளு மிந்த வரணிய முடைய சீமான்
துய்யவர் மரபில் வந்தோன் சுந்தர வடிவ மார்ந்தோன்
வையக மதிக்குஞ் செல்வ மாட்சியு முடையோ னன்றி
செய்யமா மலராள் போன்றே திகழ்தரு மகளைப் பெற்றோன்.

ஆதிநாள் டில்லி யாண்ட வறநெறி வழுவா அக்பர்
பாதுஷா நாளி லிந்தப் பதுமினிக் கேழாம் பாட்டன்
தீதறத் தவலத் செய்து சேகரம் செய்து ராஜ்யம்
வேதியர்க் கீந்தான் கோடி மெய்ப்புக ழுடைந்தா னெங்கும்.

அன்னவன் மரபினி லமர்ந்த தாயனிம்
மன்னவன் மைந்தனில் லாத சிந்தையால்
உன்னின னுறுவழி யொன்றுந் தோன்றிலா
தென்னசெய் வோமினி யென்று மேங்கியே.

வந்தன னிவ்வன வாசிகட் கெலாம்
சந்தத ரட்சணைச் சாயை தந்தருள்
சுந்தரி ஆங்குள துறக மீதமர்
சந்தனக் காவினிற் றங்கு மம்மைபால்.

வந்தடி பணிந்துபல வாறவளை வாழ்த்தி
சிந்துநய நத்திவலை சேர்த்தரள மார்பன்
தந்தனை யனேகவித சம்பதைக ளெல்லாம்
மைந்தனருள் செய்திலையிவ் வையக மளித்தோய்.

என்றலொடு மம்மையு மிசைந்தக மலர்ந்தே
வென்றியர சேகினது வெவ்வினை வசத்தால்
ஒன்றுத லுனக்கரிய தொண்புதல்வ னென்றே
மன்றல்மட மானையடை வாயென விதித்தாள்.

ஆயவ ளிவ்வணங் கன்றி யம்மக
மாயியி னருளினல் வந்து ளாளென
சேயினு மிக்கதோர் சிறப்புற் றோங்குவள்
தூயம நோன்மணித் தோகை யென்னவே.

இனியமண மெப்படி யியற்கைமல ருடே
பனியினிட மெப்படி படிந்துளது தண்மை
கனியினிட மொண்சுவை கசிந்தமரு மாறே
அனையவள தாகுமழ கென்னுமொரு பொருளே.

ஞாயிறு பன்னிரு ராசி நாடுழி
ஆயவள் வருவளிவ் வரணி யத்திடை
தாயநன் மனத்தொடுந் தொழுத கையொடும்
மாயியை வணங்கிநல் வரங்கள் வேண்டவே.

இற்றைநா ளாங்கவ ளெய்து நாளிது
நற்றின மாகையா ளுமு மேகுவம்
பற்றிலா மனத்துடன் பணிந்து போற்றவே
கொற்றவ நீயுமக் கோயி லெய்துவாய்,

பிரதாபசந்திரன்.—

தரு. இராகம் - ஹமீர்கலியாணி. ஆதிதாளம்.

பல்லவி.

பயனலவோ நான்செய்தவப் பயனலவோ.

அநுபல்லவி.

தயவுடனேயெனை சாமிகடாட்சித்தது. (பயனல)

சரணங்கள்.

1. சாதுசம்ஸர்க்கமே சற்றுமறிந்திலா
பாதகன்ஜன்மசபலமாகச்செய்தது. (பயனல)

2. ஞானிகளோடிடு நல்வழிநின்றிலா
ஈனனையேயின் றீடேறச்செய்தது. (பயனல)

3. இகபரசாதன மின்னதென்றோர்ந்திலா
தகைமையுளானைக்கு தார்த்தனுய்ச்செய்தது. (பயனல)



# அங்கம்—XII



## களம் — I.

இடம் : ஒரு காளிகோவிலை யடுத்த பூஞ்சோலை.

பாத்திரங்கள் : பிரதாபசந்திரன், புலவர்.

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

சந்திர னுதித்தனன் றவழுந் தென்றலோ
௧ வந்தது மாரனார் வரவி னொற்றென
அந்தமாய்க் கானிடை யலர்ந்த பன்மலர்
சிந்தையு மலர்ந்திடச் செய்யு மன்பரே.

குயிலின முரச மாகக் குடையெனத் திங்க ளோங்கக்
கயலெனுங் கொடியைக் கொண்டே கன்னலாம் வரிவில் லேந்தி
மயலுறுங் குவளைக் கண்ணார் வன்படை யெனவே சூழ
பயிலுமம் மதனார்க் கேற்ற பருவமு மீதா மன்றே.

மாவொடு மல்லிகை மலர்ந்த சண்பகப்
பூவொடு மெங்கணும் புதுமை யாம்மண
மேவிய ரோஜா விந்த மாமலர்க்
காவிது இதைநிகர்க் காவு முள்ளதோ!

பெருமரத் தடியி லைய பின்னல்செய் திட்டாற் போல
அருமையாங் கொடிகள் சேர்ந்தே யடர்ந்தொரு வீடுண் டாக்கி
சொரிமலர்க் கூட்ட நாடிச் சுரும்பின மொய்க்க வாங்கு
திருமகள் கொலுவி ருக்குஞ் சிறப்பமைந் திருத்தல் பாராய்.

அங்குள வாவியி லமர்ந்து நம்மனம்
பொங்கியு டம்பெலாம் புளக மாரநன்
மங்கையர் தன்மையின் மறைந்தி லைக்குளோர்
செங்கழு நீருறுஞ் சிறப்பைக் காண்டியால்.

அஞ்செனும் வாளியி லனங்க னென்னையோர்
செஞ்சர மாகவே சேர்த்தி லாமையால்
எஞ்சிய தென்னவென் றிசைய வேமனே
ரஞ்சிதம் வந்துப ராக்ர மிக்குமால்.

கல்லையு மெளிதினிற் கரைக்கு மொண்ணகை
மெல்லியர் முறுவலை வெறுத்து மைங்கணை
வில்லியி னுரமென விருத டைந்ததாய்
முல்லையு மெங்கணு மோக மூட்டுமால்.

புலவரே கேளு மிந்தப் புண்ணிய வனத்தில் வந்தே
பலவித மிருகந் தன்னைப் பஞ்சென வடித்துத் தள்ளி
கலைபயில் முனியைக் கண்டோங் கவினுற வவர்சொல் மாற்றம்
சிலைமதற் கிரையா மெம்மைச் செய்ததை யென்சொல் வோமே!

புலவர்.—ஆகா! கண்டுகொண்டேன். இது தெரியாதா. மாந்தர் மன்மதன் அம்பெய்தால் பெருமூச்செறிந்து வேடனடித்த மான்போலச் சுற்றும் புறமும் ஆதரவற்றவர்போற் பார்ப்பது இயல்புதானே. சன்னியாசி கதை முடித்தார், நீங்கள் பெருமூச்சுவிட ஆரம்பித்தீர்கள். ஆகையால் ஏதோ மறுபடியும் பிரமாதம் வந்துவிட்டதென்று நினைத்துக்கொண்டேன். (மறைவாய்,) மேலு மிது உருசிகண்ட பூனை சமாசாரம்!

விருத்தம்.

பஞ்சைக் கண்டுழி பற்றிடு தீயைப்போல்
வஞ்ச வேல்விழி மாதர்தம் சிந்தையால்
நெஞ்சு ருக்கமு ருமலும் நிற்பரோ
கொஞ்சி மாதரைக் கூடிய வாலிபர்.

பிரதாபசந்திரன்.—எங்காணும் கவிராயரே! நாம் முன் செய்ததையெல்லாம் மறக்கவில்லையா? அதெல்லாமென்ன ஒரு விகாரம், தள்ளிவிடும்.

புலவர்.—மகாபிரபு ஒரு விகாரத்தோடு போவானேன். மனிதருக்கும் மூன்று விகாரங்களுண்டு. ஒரு பெண்ணெதிர்ப்பட்டால் தோன்றல், அவள்மேல் மோகங்கொண்டால் திரிதல், அவள் வலையிலகப்பட்டால் கெடுதல் - இது தெரியாதா?

பிரதாபசந்திரன். — ஆனு லிப்போதும் நாம் கெட்டுப்போவோ மென்று நினைக்காதேயும்.

புலவர்.—அப்படியானு லெனக்கும் சந்தோஷந்தான். மேலும் தங்களுடைய மனதி லிவ்வாறு பட்டதினுல் உண்மையாகவே க்ஷேமமுண்டாகும்.

விருத்தம்.

சிப்பியில் விழுந்தநீர்த் திவலை முத்தமாம்
அப்படி யேநல மார்ந்த நெஞ்சினர்
எப்படி யெண்ணினு மின்ப மேயலால்
ஒப்பிலாப் பண்டித வேறு முள்ளதோ.

(மனேன்மணியின் தோழிகள் பூங்குடலை கொண்டுவருகிறுர்கள். அவர்களைத் தூரத்திற் கண்டு பிரதாபசந்திரனும் புலவரும் மறைகிறுர்கள்.)

மரகதம். — அடி அம்புஜம்! இந்த ரோஜாபாத்தியைப் பார்த்தையா? அதோ அதின் நடுவில் பெருத்த புஷ்பமொன் றிருக்கிறதே அதைப் பார்க்க ஆயிரங்கண் வேண்டுமடீ!

அம்புஜம். — இந்தக் கொடிசம்பங்கியைப் பார்த்தையா? ஆகா இதன் வாசனையே வாசனை!

மரகதம்.—அடி! அடி! இந்தப் பாரிஜாதத்தைப் பாரடி! இது எவ்வளவழகா யிருக்கிறது. இதில் செகப்பும் வெண்மையுங் கலந்திருப்பதைப் பார்த்தால் உன் உதட்டின்மேல் பல் லிருப்பதுபோ லிருக்கிறதடீ.

அம்புஜம்.—உன் வாய்ப்பதஷ்டத்தை நானறிவேண்டி! அதிருக்கட்டும், அதோ குளத்தில் அல்லி பூத்திருக்கிறது பார்த்தையா? இப்பேர்க்கொத்த நிலவில்தான் அதுக்குக் கொண்டாட்டம்.

மரகதம்.—ஆமாம் இப்பேர்க்கொத்த நிலவில்தான் அல்லியை அர்ஜுனன் பார்த்தது.

அம்புஜம்.—கெட்டேனே கெட்டேனே, இந்தக் குயிலை னிப்படிக் கத்துமோ!

மரகதம்.—அதன் சங்கட மதுக்குத் தெரியும் உனக்கென்னடி.

அம்புஜம்.—அம்மா! இதென்ன வாசனை?

மரகதம்.—அதுதான் கதிர்ப்பச்சை.

அம்புஜம்.—ஆமாம்! கதிர்ப்பச்சைக் கெதிர்ப்பச்சை யில்லையென்பார்கள். அது சரிதான்.

மரகதம்.—அடி நான் பூப்பறித்தாச்சு.

அம்புஜம்.—நானும் வந்துவிட்டேன்.

மரகதம். — நாம் பறித்த பூவெல்லாம் ஒரு மாலையாகக் கட்டி மனோன்மணிக்குக் கொண்டுபோய்க் கொடுப்போம்.

அம்புஜம்.—ஆம் அவளுக்குத்தான் கொடுக்கவேண்டியது.

கொச்சகம்.

எல்லா மலரினுமே யினியமணை முற்றவளாய்
சொல்லா வழகமைந்த சுந்தரி மனோன்மணியை
அல்லாது வேறிந்த அருமைமலர் மாலையணி
நல்லா ளெவளுரைப்பாய் நானிலத்தில் வாணகையே.

மரகதம்.—அடி! அடி! அம்மா ஏதோ வருகிறாள்! ஆகா!

மனோன்மணி.—அடி பெண்களா! நீங்கள் வந்தவேலையைவிட்டு இப்படிப் பேசிக்கொண் டிருக்கிறீர்களே இதென்ன?

அம்புஜம்.—அம்மா புருஷர்களில் வெகு அழகுள்ளவர்களாயிருந்தால் அவர்களைப் புருஷர்களே பார்த்துச் சந்தோஷப்படுவதாகச் சொல்லியிருக்கிறது. அப்படியே பெண்களில் உம்மை நாங்கள் கண்டு சந்தோஷப்படுகிறோம்.

மரகதம். — அதற்குச் சந்தேகமா. மகேசுவரனுக்கு மிஞ்சிய தெய்வமும் மனோன்மணிக்கு மிஞ்சிய பெண்ணும் கிடையாதடி.

அம்புஜம். — அதெல்லா மப்படியிருக்கட்டும், இந்த மாலையைச் சற்றே சூடிக்கொள்ளுங்கள். இந்த வெண்மணல்மீது உட்காருங்கள். ஆகா! இந்தத் தென்றலுக்குக்கூட எவ்வளவு கொண்டாட்ட முண்டாய்விட்டது, பார்த்தையா!

மரகதம்.—அடி! அடி! இதுவரையிலிந்த நிலவிப்படிக் காய்ந்ததாடீ!

கொச்சகம்.

கண்டதடி யொண்மதியுங் கட்டழகி தன்முகத்தை
கொண்டதடி யெங்குமிலாக் கொண்டாட்ட மதனையதனல்
எண்டிசையுந் தன்னொளியை யிறைத்ததுபோ லிவ்வண்ணம்
ஒண்டொடியே காயுதடீ உளமார் களிமிகவே.

அம்புஜம்.—அடி யதெல்லாம் சரிதான். நம்மம்மாளைப் பார்த்தால் எனக்கொரு சங்கடமுண்டாகிறது. அது எப்பொழுது தீருமோ!

மரகதம்.—அதை நானுமறிவேனடீ.

அம்புஜம்.—ஆனால் சற்றே சொல்லு பார்ப்போம்.

மரகதம்.—

விருத்தம்.

மாதவி மாவின் கொம்பை வகையுட னடைதல் போலும்
சோதிமா மதியை யென்றுந் தொடருரோ கிணியைப் போலும்
வேதமார் பொருளை யொத்து மெய்யனை யணுகல் போலும்
மாதரு மணுகி வாழ்வர் மணவாளர் தம்மைத் தானே!

மனோன்மணி.—போதும் போதும், வெறும் வாய்க்கு அவல் அகப்பட்டாற்போலிருக்கிறதே, அந்தமட்டும் போதும் நான் போகிறேன் போடி; (என்றெழுந்திருக்கத் தோழிக ளுட்கார வைத்து.)

மரகதம்.—அம்மா, நாங்கள் கேட்டுக்கொண்டபடி, இந்த மாலையை யணிந்துகொள்ளுங்கள்; இந்தப் புஷ்பகடகங்களைக் கையில் போட்டுக்கொள்ளுங்கள். (போடுகிறாள்.)

அம்புஜம்.—அடீ இப்பொழுது, அம்மாளைப்பார்க்க எத்தனை கண்ணிருந்தாலும் போதாது - ஆ!

கொச்சகம்.

பூமகளோ நாமகளோ பொலிவார் மலைமகளோ
காமன் கலிதீர்க்கும் கட்டழகி யாம்ரதியோ
கோமன்ம கேந்திரன்தன் குணமார் மடமயிலோ
சீமை யெழுகடலுந் தேடினுமா ரிவளிணையே.

(மூவரும்போகிறார்கள். பிரதாபசந்திரனும் புலவர்களும் வருகிறார்கள்.)

பிரதாபசந்திரன்.—

விருத்தம்.

அரும்புக ளோடு மப்போ தலர்ந்தவொண் மலரி னோடும்
விரும்பியே அங்கு வந்து விளையாடுந் தென்ற லோடும்
சுரும்பினத் தோடும் மொய்க்குஞ் சுகந்தசா ரத்தி னோடும்
நிரம்பிய வாவி யென்ன நின்றதா ரென்று சொல்வேன்.

என்னநான் சொல்வே னைய வெங்கணு மவளைப் போல
கன்னிகை யில்லை யில்லை கண்ணிமைப் பொழுதி லெங்கும்
தன்னொளி பரப்பி வாவி தருமலர் கொடிவி ளங்க
மின்னலைப் போன்றே வந்து வேகமாய் மறைந்தா ளந்தோ!

மறைந்தன ளெங்குந்தன் மகிமை காட்டியே
குறைந்தன ளிரதியுங் கோதை யர்க்கெனு
உறைந்தன ளொருநொடி நமது நோக்கிடை
நிறைந்தன ளெங்குமநம் நெஞ்சி லையனே.

ஆதிநாட் செய்த புண்ணிய மனுபவித் தாற்போ லைய
கோதையைக் கண்டோ மிந்தக் குளிர்தடங் காவி லின்று
சோதனை செய்யு மாறோ சொல்லொணு வகையிற் றெய்வம்
மாதையுங் கண்ணிற் காட்டி மறைத்ததிவ் வண்ணந் தானே.

கண்ணே யுன்னைக் கவிவா ணரெலாம்
மண்ணோர் புலனில் மாண்புற் றதெனு
எண்ணும் வகைவீ ணலவே யிந்தப்
பெண்ணைக் கண்ட பெரும்பய னலே.

பயனே யவள்சண் வழிபா டெனிலோ
குயினேர் குரலா ளொடுவா சகமும்
புயனு லவளைத் தொடுபுண் ணியமும்
உயர்வா னவர்பா லுளதோ வுளதோ!

(தென்றலைப்பார்த்து.)

மலைய மால்வரை யூடுறந் தாதினை வகித்து
அலைகொள் வாவியின் தண்ணிய வமுதிடை யளைந்து
சிலையின் வெங்கரி நடைபயில் சீதமா ருதமே
இலையுனக் கெமதிறை வியினுயிர்ப் புளவி னிப்பே.

(மதியைப்பார்த்து.)

வள்ளல் கண்டுயில் பாற்கடல் வந்தனை மதியே
வெள்ளி மால்வரை வித்தகன் முடிமிசை விளங்கி
உள்ள மார்மதன் துணைவனென் றோங்கினை யெனினும்
தள்ள வேண்டுமெம் மிறைவிமுன் னுன்தன் தண்ணொளியே.

(வேறு.)

காயிடத்தும் பூவிடத்தும் கண்குளிருந் தளிரிடத்துங் கனியி டத்தும்
வேயிடத்துங் கமுகிடத்தும் வெறிகமழுங் கேதகையின் வெளிறி டத்தும்
ஆயிருக்கும் வனப்பெல்லா மவளிடத்தே யமர்ந்தனவா லவளே யெல்லாத்
தூயமலர்க் காவினிலும் சுரர்வளர்க்குங் காவினிலுஞ் சுகந்தக் காவே.

புலவர்.—

துயருற லேலேனு வீணுய்த் தோகையு முமக்குத் தக்க
மயிலென நானு மென்தன் மனதினி லெண்ணி விட்டேன்
அயர்வின்றி யவளை நீரு மடையுமா றவசி யம்போய்
செயலினி யுள்ள தெல்லாஞ் செய்குவே னரச ரேறே.

(இருவரும் போகிறார்கள்.)



## இரண்டாங் களம்.

இடம் : பூஞ்சோலையில் வேறிடம்.

பாத்திரங்கள் : புலவர், அம்புஜம், மரகதம்.

[புலவர், அம்புஜம், மரகதம் மூவரும் பேசிக்கொண்டு வருகிறார்கள்.]

அம்புஜம்.—ஐயா புலவரே, இத்தனை நாழிகை யென்னென்னமோ சொன்னீர், எல்லாம் சரிதான். ஆனால் உங்கள் பிரதாபசந்திரர் எங்களம்மாளுக்குத் தகுந்த புருஷரா?

கொச்சகம்.

சுற்றும் புறமும் சுடர்வளர்த்தி நின்றதன்மேல்
வற்றலைப்போல் வாடி வெகுமகிமை யுடனேசித்தி
பெற்றவர்க்கு மெமையாளும் பெண்ணரசி தனைப்பெறுதல்
சற்றும் முடியாத சங்கதியென் றறியீரோ.

புலவர்.—இதென்னடா அப்பா! அந்த அம்மாளென்ன மேருவைப்போல் பொன்னு; இந்திரன் பாதுகாத்துக்கொண்டிருக்குஞ் சிந்தாமணியா.

மரகதம்.—ஆ! அதற்குச் சந்தேகமென்ன.

கொச்சகம்.

மேருமலை யோர்புறத்தில் மெல்லியளு மோர்புறத்தில்
சேரும் படிவைத்தே சீர்தூக்கிற் றேவரெலாம்
கோருமந்த மாமலையே குறையுமெனி லவ்வணங்கைச்
சீருடனே மணம்புரியும் சீமானு மெங்குளனே!

புலவர்.—ஆ! அப்படியா.

தரு. இராகம் - பந்துவராளி. ஆதிதாளம்.
பல்லவி.

பிரதாபன் மகிமைகேளும் - ஜகதலப் - பிரக்கியாதன் மகிமைகேளும்.

அநுபல்லவி.

விரதாதிகள்பல வோடுதேவங்கள்செய்த
கிருதார்த்தர்பெறும்பிள்ளை கீர்த்திக்கவனேயெல்லை. (பிரதா)

சரணம்.

வேளுமவனழுக்கு கிணையில்லையில்லையென்றே
விதித்தவரொருகோடி - அன்றியுமவன்
தோளுக்கிசைந்தவலி யுடையவரெவரென
சொல்லித்திரிவர்கோடி - அதனுடனே
நாளுமவனைக்கண்டு மகிழ்வதிலும்வெகு
நலமில்லையென்பர்கோடி - அவனைவிட்டு
மீளவென்றும்மன மின்மையினாலங்கு
விழுந்துகிடப்பர்கோடி - இவ்வண்ணந்தா
ராளசீலசுகு மாரகுணகர
ஸ்ரீராஜமார்த் தாண்டகெம்பீர. (பிரதா)

மரகதம்.—ஐயா நாங்களும், அவர் குணாதிசயங்களைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். நீரென்னசொல்லுவீரோ வென்றும் மையுங்கேட்டோம், மேலுமெங்கள் எஜமானனாகிய பிரபு கவர்னர்ஜனரல் தர்பாருக்குப் போயிருந்தபோது பிரதாப

சந்திரர் தகப்பனூராகிய லக்ஷ்மிவிலாசரைப் பார்த்ததாயும் தன் மகளாகிய மனோன்மணியைப் பிரதாபசந்திரருக்கு லக்ஷ்மிவிலாசர் கேட்டதாயும், அப்படியேயாகட்டுமென் றொத்துக்கொண்டு வந்ததாயும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அதுமுதல் மனோன்மணியு முள்ளுக்குள் சந்தோஷமாய்த்தானிருக்கிறாள்.

புலவர்.—ஆகா! அப்படியா. வெகுசந்தோஷம்! நான் வந்தகாரியமிப்படி முன்னமே குணப்பட்டிருப்பதைப் பிரதாபசந்திரரோடு போய்ச்சொல்லுவேனாகில்,

விருத்தம்.

தாகமாய் நாவு லர்ந்து தவித்துத்தள் ளாடிக் கெட்ட
சோகமார் மனிதன் முன்னே சுரர்க்குள வமுதந் தன்னை
வேகமா யெடுத்து வந்து விடாயாற்று மறிய தெய்வ
மாகவே நினைப்பா ரென்னை யண்ணலு மிதைக்கேட் டாலே.

(எல்லோரும் போகிறார்கள்.)



## மூன்றாங் களம்.

இடம்: காளிகோவிலை யடுத்த பூஞ்சோலை.

பாத்திரங்கள்: குணலயர், நிபுணர், புலவர், சுதேசமித்திரர், வித்தியாசாகரர், சமயோசிதர், லவுகீகர்.

[குணலயர், நிபுணர், புலவர் மூவரும் வருகிறார்கள்.]

குணலயர்.—ஐயா புலவரே, யென்னசமாசாரம் - நேற்றெல்லாமுமை நாம் பார்க்கவில்லையே.

புலவர்.—ஐயா நானெங்கே, நீங்களெங்கே, நானோ ஏடுங்கையுமாகக் காலத்தைக் கழித்தவன்; நீங்களோ வெகு சூரர்கள்; புலி கரடி யுங்களைக் கண்டோடும்: நானோ அவற்றைக் கண்டோடவேண்டியவன்தானே.

நிபுணர்.— ஐயா கவிராயரே, ஆனுலிவ்வனத்திற்கு வந்தென்ன பய னடைந்தீர் - செடியோடு செடியாயுங் கல்லோடு கல்லாயும் ஒளித்திருக்கத்தானு உம்மை யிட்டுக்கொண்டுவந்தது.

புலவர்.—ஐயா நான் யாதொருபயனையு மடையாமற்போனாலும் நம்முடைய மகாபிரபு அடையப்போகிருரே அதுவே போதும்.

நிபுணர்.—அதென்ன! என்ன!

குணலயர்.—சொல்லும்! சொல்லும்!

புலவர்.—

விருத்தம்.

ஒண்மதி தன்னைக் கண்டே உருகுநற் காந்தம் போலும்
விண்மிசை முகிலைக் கண்டே விளையாடு மயிலைப் போலும்
மண்மிசை நிகரில் லாத மகிமையா ரணங்கொ ருத்தி
வண்மையைக் கண்டே யண்ணல் வாடினார் மெய்ம்ம றந்தே.

குணலயர்.—ஆகாகா! வெகுசந்தோஷம் இப்பேர்க்கொத்த சமா சாரம் எப்போது கேட்கப்போகிறோ மென்றிருந்தோம்.

நிபுணர்.—அவர் விவாகம் செய்துகொள்ளப்போகிற புண்ணியவதி யாரையா?

புலவர்.— இவ்வனத்தையுடைய ஜமீன்தாரரின் மகள்.

நிபுணர்.—பிரதாபசந்திரருக் கப்படி செய்வதி விஷ்டந்தானு.

புலவர்.—மறுபடியு மதைப்பற்றிக் கேட்பானேன், நேற்று ராத் திரி அப்பூஞ்சோலையில் நாங்கள் யதேச்சையாய்த் திரிகை யில் அந்த அம்மாளுடைய தோழிப் பெண்களங்கே வந்தார் கள். உடனே நாங்கள் மறைந்தோம். அப்புறமந்த அம்மாளே வந்தாள். ஆ! அவளுக்கு அவளேயே நிகராய்ச் சொல்ல ேம்.

நிபுணர்.—ஐயா, கேட்கக்கேட்க வானந்தமாயிருக்கிறது; மேலும்,

கட்டளைக் கலித்துறை.

விசையாய்ச் செலும்பரி யில்லா விரதமும் வீணைரவிட்
டசையார்க் கரும்பொரு ளோதலும் அன்றி யரிவையர்கட்
கிசையாத நாயக னேற்பாடு செய்தலு மென்றுங்கெட்ட
வசையாகு மென்பது மேலோ ரறைந்திட்ட வாசகமே.

ஆனாலப்போர்க்கொத்த ஆட்சேப மொன்றுமிந்த விஷயத்திற் சொல்வதற்கில்லை.

புலவர்.—ஐயா, விவாகவிஷயத்தில் பெண்களி னபிப்பிராயங்கேட்பதுண்டோ? கன்னியுந் துணியுங் கட்டக் கொள்ளுவார்கள். மேலும் பெண்களொன்ன விற்றால் விலைபாகிறவர்கள் தானே.

குணலயர்.—ஐயா புலவரே, ஆடவர்க்கிருக்கிறபடியே அரிவையர்க்கு முணர்ச்சி முதலிய தத்துவங்களெல்லா மிருக்கின்றனவே; அப்படியிருக்க, அவர்களை மிருகங்களைப்போல விற்கவாவது வாங்கவாவதென்னநியாய மிருக்கிறது? சிச்சீ இது மேலோர் கொள்கையாகுமா?

நிபுணர்.—பெண்களி னபிப்பிராய மில்லாமல், விவாகஞ்செய்வது வெகு தப்பு; அதனால் பின்விளையுந் துன்பங்க ளனந்தம்; "காதலிருவருக்குங் கருத்திசைந்து ஆதரவுபட்டதே யின்பம்" என்னும் மூத்தோருரையை மறந்தீரோ? அப்படியிருக்க இருவருடைய அபிப்பிராயமு மொத்திருக்கவேண்டுமல்லவா?

குணலயர். — ஐயா, நானொரு விஷயஞ் சொல்லுகிறேன்; நம்முடைய தேசத்திலே எத்தனை கைம்பெண்டிக ளிருக்கிறார்கள்: அவர்களிற் பெரும்பாலர் பாலவிதவைகள். வயது சென்று பிளையுமீமையும் பெருக்கிட்டோடுங் கிழங்களெல்லாம் தமக்குள்ள பணக்கொழுப்பினால், யமனுந் தங்களுக்குச் சுவாதீனமானாற்போல வெகுகாலமிருப்பதா யெண்ணி, சிறு குழந்தைகளைக் கனியுங் கற்கண்டுங் கொடுத்து மணமேடையிலுட்கார வைத்து தாலிகட்டி விடுகிறார்கள். உடனேயவர்கள் காலகதியை யடைந்தால் அப்பெண்கள் கட்டியதாலியை

அவர்களுக்கே யறுத்தெறிந்து பாயோடு பாயாகவும் தரையோடு தரையாகவும் அழுந்தி மெலிந்து, தம் வாழ்நாளை வீணாளாய்க் கழிக்கிறார்களே — ஐயோ! இதையெல்லாம் முன்னாடியாய்ப் பெண்களுக்குத் தெரிவித்திருந்தால் அவர்களொப்புக்கொள்ளுவார்களா?

நிபுணர்.—ஆமாம்.

விருத்தம்.

ஆட்டைக் கொண்டு மறுப்பவர் கையினில்
காட்டி விட்டுப் பணம்பெறுங் காதகர்
கூட்டந் தன்னிலும் தீயவர் கோதைமார்
கேட்டைக் கண்டுங் கிழங்களுக் கீபவர்

புலவர்.—ஐயா, தாங்கள் சொல்வதற்குப் பதில்சொல்ல எனக்குத் தோன்றவில்லை; இப்பேர்க்கொத்த அநியாயங்க ளனேக மிருக்கின்றன; ஆனால் நம்முடைய பிரதாபசந்திரர் விஷயத்திலந்தப்பெண்ணுக்கும் மனம் பற்றியிருக்கு மென்பதற்குச் சந்தேகமில்லை.

நிபுணர்.—ஆமாம் அதற்குச் சந்தேகமில்லை; ஏனென்றால்,

சந்தவிருத்தம்.

சரதாப மேலிட்டு வருமார னைப்போன்ற சகனென்னவும்
வரதாப மேலிட்ட வுலகுற்ற துயர்நீக்கு மதியென்னவும்
சுரர்தாப மேலிட்ட வந்நாள் சொரிந்திட்ட வமுதென்னவும்
பிரதாப னைக்கண்டு மகிழாத பெண்டீரும் பெண்டீர்கொலோ.

(சுதேசமித்திரர், வித்தியாசாகரர், சமயோசிதர், லௌகீகர் மூவரும் வருகிறார்கள்.)

வித்தியாசாகரர்.—ஐயா லட்சுமீவிலாசரும், பிரதாபசந்திரர் தாயும் தங்கள் பரிவாரத்தோடு இப்பொழுதுதான் வந்திறங்கினார்கள். இன்று மகேசுவரியின் கோயிலில் விவாகம் நடப்பதாய்ப் பிரஸ்தாபம்.

குணலயர்.—இதென்ன ஆச்சரியமா யிருக்கிறதே! நாம் வேட்டைக்கு வந்ததும் அதற்குச்சரியாய் மனோன்மணியம்மாளிங்குவந்ததும், உடனே லட்சுமீவிலாசர் முதலியோர்கள் வந்ததும், இன்று விவாகம் நடக்கப்போகிறதும் பார்த்தால் எல்லாம் முன்னடியே யேற்பாடாய் விட்டாற்போ லிருக்கிறதே.

லவுகீகர்.—அதற்குச் சந்தேகமென்ன? இராத்திரி நாமெல்லோருந் தரிசனத்திற்குப் போயிருந்தபொழுது, லட்சுமீவிலாசர் கவர்னர் ஜனரல் தர்பாருக்குப் போயிருந்தபோது இந்த வனத்துக் குடையவராகிய பிரபுவோடெல்லாம் பேசிமுடித்துக்கொண்டு வந்ததாக சன்னியாசி சொன்னார்.

சுதேசமித்திரர்.—ஆகா வெகு சந்தோஷம்! நல்லது இந்தக் காளிகோயிலில் விவாகம் செய்வானேன்?

வித்தியாசாகரர்.—ஆமாம், நானுமதைப்பற்றிச் சங்கைப்பட்டு இராத்திரி சன்னியாசியைக் கேட்டேன்: மனோன்மணியம்மாள் மகேசுவரியி னனுக்கிரகத்தால் பிறந்தவளாகையால் அவள் சன்னிதானத்திலேயே அந்த அம்மாளுக்கு விவாகம் செய்வதாகப் பிரார்த்தனை யிருக்கிறதாம்.

லவுகீகர்.—எப்படியானாலுமென்ன, பிரதாபசந்திரருக்கு விவாகமாவதொன்று.

சமயோசிதர்.—ஆனாலின்றைக்கே விவாகம் முடிந்துபோமோ?

வித்தியாசாகரர்.—ஆமாம்.

விருத்தம்.

அல்லியொண் மதியை யின்போ டடையுமா னந்தம் போல
மல்லிகை தென்றல் தன்னை மணம்புரி மாட்சி போலச்
சொல்லொணுத் தகைமை யுற்ற சுந்தரப் பிரதாப சந்திரர்
மெல்லியை யடைவா ரைய வேதமார் விதியி னின்றே.



## நான்காங் களம்·

இடம்: பூஞ்சோலை.

பாத்திரங்கள்: பிரதாபசந்திரர், வித்தியாசாகரர், நிபுணர், சுதேசமித்திரர், குணலயர், லவுகீகர், சமயோசிதர், புலவர் முதலியோர்.

[பிரதாபசந்திரர் நடுவே வர, அவரைச் சூழ்ந்து வித்தியாசாகரர் முதலியோர் வருகிறார்கள்.]

புலவர்.—

விருத்தம்.

ஆதிநாள் மிதிலைக் கேகி யண்ணலு மடைந்த நன்மை
சோதிமா முனிவ னத்தில் துஷ்யந்த னடைந்த நன்மை
மாதவ த்ருபதன் பாண்டு மைந்தருக் கிசைந்த நன்மை
ஆதர முடனே நந்த மையனு மடைந்தா னன்றே.

யாசாகரர்.—

கருங்கடல் தன்னை நீந்திக் கரையடைந் திட்டாற் போலும்
பெருங்கரி துதிக்கை தப்பிப் பிழைத்தவன் போலு மைய
நெருங்கினோர் தம்மை வாட்டும் நெறியிலா வேசை மாதர்
மருங்குலை விட்டு நீரும் மணம்புரிந் திட்ட வாறே.

பிரதாபசந்திரன்.—அண்ணே, வேசையர்கள் வெகு கொடியவர்கள்; ஆறலைவர்களினுங் கொடியவர்களாரெனில், பெரியயர்கள்போல நடித்து வாலிபரை மெல்லமெல்ல இட்டுக்கொண்டுபோ யவ்வேசையர்களுக் கிரையாய்க்கொடுக்கும் தீயோர்: ஆ! அவரக ளிசசகவாாததைககும. சறறும மான மில்லாத நடக்கைக்கும் சரியா யதைச் சொல்லலாம்.

நிபுணர்.—அண்ணே ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள்: பெரிய மனுஷியாளென்று பேரிட்டுக்கொண்டிருக்கும் சிலர் தமக்கு வேண்டியவர்களின் பிள்ளைகளையே தாம் வைத்துக்கொண்டிருக்கும் வேசையரிடத்துக்கு இரகசியமாய் நிர்ப்பந்தப் படுத்தி யிட்டுக்கொண்டுபோய் இவரின்னாருடைய பிள்ளை,

இவ்வளவு சம்பத்துள்ளவர் வெகு ரசிகர், ஏதோ சுந்தரம், ஒரு நல்ல பதம் பாடு, ஒரு கோவை சொல், ஒரு கொச்சகஞ் சொல் பார்ப்போமென்று மாட்டிவிட்டு மாப்பிள்ளையென் றுப்பாரியுமிட்டுக்கொண்டு லச்சையின்றித் திரிகிறார்களே இந்தக் கொடுமைக் கென்னசொல்லலாம்.

சுதேசமித்திரர்.—அண்ணே, அவ்வேசையரைக் கச்சேரிக்கழைத் துப் பாடச்சொல்லுகிறார்கள்! அப்பொழுதவர்கள் பாடுஞ் சில பாட்டுகளைக் கேட்டால், காது புளித்துப்போகிறது: ஸ்திரீ புருஷர்களென்னும் வித்தியாசமில்லாமல் மேன்மக்க ளெல்லோரும் வெட்கித் தலைகுனியும்படி சற்றும் லச்சை யின்றிப் பச்சைப் பதங்களையெல்லாம் பாடித் தம்மை யழைத்து ஆதரிக்கும் போலிப்பிரபுக்களைச் சந்தோஷப் படுத்துகிறார்கள். இப்போர்க்கொத்த நடக்கைக் கென்ன சொல்லுகிறது? இவ்வித அற்ப சந்தோஷங்களில் நம்மவர் களுக்கு மனஞ்செல்லும்வரையி லிந்ததேசம் க்ஷேமப்படுமா?

பிரதாபசந்திரன்.—அண்ணே, வேசையர்கள் பேசு மிச்சகவார்த் தைக்கு இன்னதை யொப்பிட்டுச் சொல்லலாமென்று தோன்றவில்லை.

விருத்தம்.

எப்படி யோசித் தாலு மின்னலே புரிவா ரென்றும்
மெய்ப்படி நடவார் வேண்டி வெகுபொரு ளீந்த வர்க்கும்
ஒப்பிட லெவரோ டைய ஒருவரும் நிகரில் லாத
தப்பறை வேசை மாரைத் தரணியின் பகைஅன் றுரை!

நிபுணர்.—அண்ணே, அப்படி இலேசாய்ச் சொல்லவேண்டாம்.

விருத்தம்.

காட்டினுட் செந்நாய் போலும் கரந்துறை நாகம் போலும்
கூட்டுறை கூளி காகம் கொடுங்கழு கினத்தைப் போலும்
வாட்டிடும் முதலை போலும் வலிமிகு நமனைப் போலும்
கேட்டினில் மூழ்த்தும் வேசை மாதர்தங் கிளவி தானே.

குணலயர்.—அண்ணே, வேசையரால் குலமக்களுக் குண்டாகும் துன்ப மிவ்வளவென்று சொல்லிமுடியுமோ ; புத்திகெட்ட மனிதர்க ளிப்படி கெட்டுப்போவதனால் அவர்களுடைய பெண்சாதி பிள்ளைகளெல்லாம் பெரும்பாலு மாதரவற் றலைவதைப்பார்க்கிலும் பரிதாபமான விஷய மெங்கேயிருக்கிறது.

நிபுணர்.—அண்ணே, பிரதாபசந்திரர் கிரகசாரம்போதாமல் தவறிப்போனதுமுதல் இதுவரையி லிந்த விஷயங்களையெல்லாம் நன்றாய்த் தெரிந்துகொண்டார் ; பழம்புண்ணாளி பரிகாரி யென்பதுபோல் எல்லோருக்கும் புத்திசொல்லு மனுபவத்தையு மடைந்தார். ஆனா லினியொரு விஷயத்தைமாத்திர மவரனுபவத்தி லொப்பிட்டுப் பார்க்கவேண்டியது.

விருத்தம்.

வேசையர் வலையிற் பட்டே வெந்துய ரடைத லுக்கும்
ஆசைகொள் மனைவி யோடு மடையுமா னந்தத் திற்கும்
பேசொணு வகையி லென்றும் பேதமுண் டென்னும் வார்த்தை
நேசரு மினிமேற் காண்பர் நெஞ்செலாங் குளிரத் தானே.

லவுகீகர்.-

வகையறி யாதுட் பட்ட மடையரை முன்செ லுத்தி
நகைசெயும் வேசை மார்தம் நஞ்சமார் நெஞ்சத் திற்கும்
தகையுள பெண்டீர்க் குற்ற சத்திய நெறிய தற்கும்
வெகுவித வித்தியா சங்க ளென்பது விளங்குந் தானே.

குணலயர்.—

பொருளொடு புகழும் போகப் புருஷரைக் கெடுத்தே யப்பால்
அருளினுக் கிசையா வண்ண மாக்குமவ் வேசை யர்க்கும்
மருளிலா அன்பி லுற்ற மனைமக்க ளுக்கும் கையில்
உருளுமா மலகம் போல வுணருவார் பேத மின்றே.

பஞ்சணை மீது பெண்டு பானபோ ஜனத்தி லன்னை
அஞ்சிலாச் சுகத்தில் தோழி யரும்பிணி யுற்றால் தெய்வம்
கொஞ்சலிற் கிள்ளை நீதி கூறலில் அமைச்சன் போலும்
வஞ்சியை மனைவி யென்றே வாழ்த்துவர் மேலோர் தாமே.

அண்ணே உங்களுக்கப்படியே வாய்த்திருக்கிறது.

(வித்தியாசாகரர் முதலிய எல்லோரும் சேர்ந்து.)

விருத்தம்.

ஆழிசே ருலகி லெங்கு மடையொணு மனேவி யோடும்
தாழ்விலா நண்பரோ டுஞ் சகலமா நிதிக ளென்றும்
சூழவே யெல்லை யில்லாச் சுகந்தனை யனுப வித்து
வாழிநம் பிரதாப சந்திர மகிபதி வாழி வாழி!

முற்றிற்று.

PRINTED BY V. RAMASAWMY SASTRULU & SONS, AT THE
SARASWATY NILAYA PRESS, 69, *Malia Perumall Street*, *MADRAS—1914*.